மேனிஅடி யார்சூழ, வெண்சா மரைஇரட்டக்
கானிலவும் ஆலவட்டக் கால்வீச, — மேனிலவு

வான மதிஎன்ன வட்டக் குடைகவிப்ப,
ஞானசம் பந்தரொடு நாவரசும் — ஈனம்அறு

தென்னாவ லூரர்அரசும் செப்பிபநல் (தேவாரம்)
இன்னிசைவல் லோர்ஒருபால் ஏத்தெடுப்ப, —
நன்னிலைமை

வாதவூரர் (தந்தரு)ளும் மாணிக்க வாசகத்தைக்
காதலொடும் ஓர்பால் கரைந்திசைப்ப, — (பேத)மறும்

சித்தர்கள் ஓதும் திருவிசைப்பா பல்லாண்டின்
சுத்தஇசை ஓர்பால் துதித்துவர, — எத்திசையும்

போற்றும் அடியார் புனைந்ததிரு நீற்றின்ஒளி
மேற்றிகழும் பாற்கரன் வெண்மதியாய்த் — தோற்ற

மறைத்தும்பர் எங்கும் வயங்க மறையோர்
மறைத்துதிகள் ஆர்த்து மருவ, — வரத்தொழுகும்

ஆறுசம யத்தோரும் அன்பினொடு வெவ்வேறு
கூறுபுகழ் மென்மேலும் கொண்டிசைப்ப, — வீறில்

அகிலத்தோர் வாழ்த்தி அணைய முரசம்
முகிலின் இடிபோல் முழங்க, — மிகுசின்னம்

காகளம் சங்கு கவினார் இடக்கைவயிர்
ஆகுளம் மொந்தை அணிபேரி — வாகுப்

படலிகை தண்ணுமையும் பண்பதலை தட்டை
படகமொடு சல்லரிபார் யாவும் — கடலின்

ஒலிஅடக்கி உம்பரின்மீ தோடிப் படர்ந்தே
ஒலி(நடக்கும்) எத்திசையும் ஓங்க, — உலகுபுகழ்

நாகைநகர் அன்பர் நறுங்கதலி பூ(கமொடு)
பூகம் துகிற்கொடியும் பொற்குடமும் — நாகம்

இலங்குமணித் தோரணமும் எங்கும் நிறைத்தே
நலங்கொள்மலர் மாலைகளும் நாற்றி,—அலங்கரித்த

## காண்போர் களிப்பு

பொன்மாடவீதியினில் போதுதலும், பொற்பமைந்த
பன்மாதர் மந்தசத்தி பாதராதி — துன்னுதீ

வரதரர்ஈ றாக வருபருவத் தோர்கள்
நிரைநிரையாய் வந்து நிறைந்தே — உரைசெய்வார்

''ஓதரிய இன்ப ஒளிநாதன்; ஓங்குலக
நாதன்; கனகசபை நாதன்;(நம்) — கோதில்

குருநாதன்; அம்பொற் குருச்சிவிகை மீது
வருநாத னைத்தொழுவம் வாரீர்! - பெரிதுயர்ந்த

## தசாங்கம்

போதாந்த மான பொருப்பன் றனைப்பாரீர்!
ஆதாரம் ஆறினுக்கும் அப்பாலாய் — ஓதும்அந்தம்

ஆதிஇலாப் பேரின்ப ஆறுடையா னைப்பாரீர்!
நாதமிசை நாடன் நலம்பாரீர்! — தீதில்

உரைமனத்துக் கெட்டாநல் ஊரன்எழில் பாரீர்!
புரையில்அன்பினால்உருகிப் போற்றும் — வரம்உடைய

மேதக்கோர் உள்கவரும் மெய்த்தா ரனைப்பாரீர்!
பேதித் துரைகள் பெரு(காத) — தீதத்து

உயரும்மணி மாஉடைய உத்தமனைப் பாரீர்!
இயலும் அவாவின்மை என்னும் — கயம்உடைய

நித்தனைப் பாரீர்! நிமல அருள்உதவும்
முத்தித் துவசஒளி மொய்ப்பாரீர்! — சுத்தஒலி

நாத முரசுடைய நாதன் றனைப்பாரீர்!
ஓதக் கடல்சூழ் உலகம்எலாம் — சோதிமிகத்

தங்குசிவ ஞானத் தனிச்செங்கோ லைச்செலுத்தும்
புங்கவனைப் பாரீர்! புகழ்பெருகும்—துங்கவெண்ணெய்

## பார்த்தோர் பரவசம்

நல்லூரின் மெய்கண்ட நாதகுரு ஆதியாக
எல்லாவடிவும்இவனே!" என்பார்; — "ஒல்லைமுனம்

வந்து பெருந்துறையில் வாதவூ ரற்கருளும்
அந்தணன்இவ் வந்தணனே ஆம்" என்பார்; —
"சுந்தரன்முன்

வந்துமணம் செய்யா வகைவழக்கி னால்தடுத்தாள்
அந்தணனும் இம்மறையோன் ஆம் '' என்பார் ; —
'' முந்தை

மறைஆ கமம்வாழ வந்தாய் உலகில்
இறைவா ! மிகவாழி '' என்பார்; —மறைபுகழும்

வெண்ணீறும் அஞ்செழுத்தும் மேதினிஎல் லாம்விளங்கப்
பண்ணுகுரு நாத பரன் '' என்பார் ; ''மண்ணில்இருள்

போக்கும் இர(விஎன)ப் புன்சமய வல்லிருளை
நீக்கும் இரவிஇவ னே '' என்பார் — ஆக்கம்மிகப்

பார்உலவும் சைவ பரிபால னைப்பாரீர் !
சீர்உலவும் ஆசான் செயல்பாரீர் ! — ஓர்ஒருகால்

விட்டுப் பொறிகள் விரவினும்இவ் வண்ணல்எழில்
விட்டுப் பிரியா விழி; '' என்பார் — ''கட்டழகைக்

கண்களிகூ ரத்தொழுது காணஇரு கண்போதா ;
எண்கழிகண் பெற்றோம் இலை ;'' என்பார் —
மண்அளந்த

## தரிசித்தோர்தம் நிலை

மால்அளவு காணா மலர்ப்பாதம் காண்பார்தம்
மால்அளவு காணார் மயங்குவார்; – தோல்கரந்த

பட்டின் உடைமருங்குல் பார்த்தார் தமதிடைசூழ்
கட்டவிழும் மாயைக் கலைபாரரார்; – விட்டென்பு

மாலை கரந்த மணிஉரம்காண் பார்ஐம்பால்
மாலைவினை காணார் வருந்துவார்; — ஆலம்

கரந்தகளம் காண்பார் கணிப்பில்மா மாயை
பொருந்துவளை காணார் புலர்வார்; — திருந்தும்

அபயமொடு வீசும் அனல்துடிஆர் கையை
உபயகர மாக்கிஅதில் ஓங்கும் — சுபஞான

போதமுறும் அங்குலியும் பூணும் — சிவமாலை
ஏதமறக் காண்பார் இகல்காணார்; — தீதகல்வெண்

சங்கக் குழைகரந்த சட்குண் டலம்காண்பார்
தங்கமல வம்பைத் தனிகாணார்; — அங்கிச்

சிகைமறைத்த நானத் திலகநுதல் காண்பார்
தகநிறுத்தும் மாசுதனைக் காணார்; — அகம்நெகிழ

அன்புருகிக் கண்ணப்பர் அப்பியகண் ணைக்கரந்த
இன்பக் கருணைவிழி ஏர்காண்பார் — துன்பத்

திமிரமலம் காணார்; திசைமுகன் காணாத
அமலமுடி காண்பார் அயர்வார்; — இமையாத

நாட்டமுடன் நின்றிடலால் நாகரைஒப்
பார்; அசைவால்
சீட்பிலத்து நாகர் கிளைஒப்பார்; — வேட்கையினால்

கண்ணப்பர் போலக் கசிந்துருகிக் காதலினால்
கண்முத் துதிரநீர் காட்டுவார்; — திண்ணுற்ற

வஞ்ச மனம்இழந்து வாடுவார்; மையலுறு
நெஞ்சம் இழந்து நெடிதுயிர்ப்பார்; — எஞ்சலிலா

நாண்இழப்பார்; சோதி நகைஇழப்பார் ஆணவநல்
ஏண்இழப்பார்; மேனி எழில்இழப்பார்; நீணிலத்தில்

வீழ்வார்; பணிவார்; மெலஎழுந்து கைதொழுது
சூழ்வார்; மையல் தொலைஎன்பார்; ஆழ்வார்தம்

ஆசைக் கடலுள் அலைந்தெழுவார்; 'அய்ய!எமை
நேசித்தாட் கொள்ள நினை;'' என்பார்; —கூசற்றுச்

செல்வார் எதிரே; '' திருக்கடைக்கண் நோக்கம்எம
தல்லல்அறத் தந்தே அருள்'' என்பார்; – சொல்லிழந்து

சித்திரம்போல் உள்ளச் செயல்இழந்து நின்றசையார்
சித்தம் கலங்கித் திகைத்திருப்பார்; – சுத்தனையே

நாடுவார்; உள்ளம் நடுங்குவார்; மெய்குலைய
ஓடுவார்; முன்சென் றுரைசெய்வார்; — '' நீடிஎங்கும்

ஆரும் பரிபூ ரணம்சிதையா தெப்படிநீ
ஓர்உருவம் கொண்ட ''தென் றோதுவார்; -''சேருமோ

பானு திமிரமொடு? பார்மீது கண்டிலமே!
ஞானஒளி மானிடமாய் நண்ணுமோ? —மானிடமாய்

வந்தீர் இதுபுதுமை வஞ்சம்இலா தேஎமது
சிந்தையுறச் சொல்லும்''எனச் செப்புவார்; · ''நந்தா

அருக்கன்ஒளி போலஉமை ஐய !என்றும் நீங்கா
திருக்கும்உமை யாங்கொளித்தீர்? '' என்பார் ; –
''திருத்தில்லை

மன்றில்நட மாடும் வடிவின் உபா(ங்கமெ)லாம்
இன்றொளித்த திவ்வடிவில் எங்''கென்பார் ; –
'' நன்றாய்

அனுக்கிரகம் செய்ய அருள்உருவம் கொண்டீர்
இனிக்கிரகம் மாளஎமை '' என்பார் - நனிப்பெருகு

## பேதை

காதல்மிக உள்ளம் கலங்கிப் புலம்பும்அந்தக்
கோதில்எழில் மாதர்க் குழாத்தொருத்தி–பேதை;மந்த

சத்தி நிபாதம் தயங்கும் பருவத்தாள்;
மெய்த்தகைமை மென்மேல் விளங்குவாள்; – புத்தித்

துணிவகல ஆடவரும் துன்பமுறச் செய்யா
அணிவிளங்கி ஆர்அவய வத்தாள் ;—
உணர்வுடையோர்

பாட்டின் இயலறியார் பாடிய புன்கவிபோல்
கட்டிமுடி யாநன் குழலினாள் ; —நாட்ட

வினையம் விளையா விழியாள் ; அடங்கி
முனையரும் பாத முலையாள் ; – அனம்மறுத்து

வாடிப் பிணியால் வருந்துவோர் பண்டிதனைத்
தேடும் செயல்போலத் தீவினையை - நாடிஅஞ்சி

நல்லசிவ தன்மத்தை நாடுவாள் ; மாளிகைசார்
இல்லில் தமர்சே டியர்சூழ — ஒல்லைவந்து

முன்இயற்று நல்அறத்தால் முன்னிஅ (வள்
எப்போதும்)
நன்னலத்த வண்டலினால் நற்கோவில் - என்னவே

செய்ததில்ஓர் பாவை சிவன்என்ன வேநிறுத்திக்
கைதொழுது சூழ்ந்துவரும் காலையினில் - மைகரந்த

கண்டத்தான் அன்பிலவர் கண்டத்தான் அன்புடையர்
கண்டத்தான் இன்புருஅ கண்டத்தான் - எண்டிசையும்

போற்றும் கனகசபைப் புங்கவன்அம் பொற்சிவிகை
மேற்கொண்டு மேவுதலும் மெல்லியலாள் - ஏற்றமிகும்

அன்னைய ரோடும் அணுகி அணிமறுகின்
முன்னவன்முன் அங்கை முடிசேர்த்தி - ''அன்னை!இவர்

எவ்வுலகத் துள்ளார்? எழில்ஆர் களத்திலங்கும்
செவ்விமணி வாங்கிஎற்குச் சேர்''என்றாள்;—
''நவ்வி

விழியாய்! இதுகேள்; விமலன் விழியின்
வழியாய் வருதன் மணிகாண்; — அழியாத

முத்தி தருவதந்த முன்னோன் அடிமலரில்
பத்தியிலார் பூணப் படுவதோ? — நித்தன்இரு

தாளை வணங்கித் தனிமா மணிவாங்க
வேளைஅல'' என்று விளம்பியே, — ''நாளும்இவர்

வீற்றிருக்கும் தொல்லை விய(ன்உல)கத் தின்பெருமை
சாற்ற அரிதெவரே சாற்றுவார்? — ஏற்றவளம்

எல்லாம் (பிழைய)ா திருக்கும் சிவலோகம்;
நல்லுபத முத்தி நயந்தெவரும் — ஒல்லைகன

யோகத்தால் தீரத்தால் ஓதும் விரதத்தால்
யாகத்தால் சாந்தியால் ஏர்தவத்தால் - தாகத்தால்

செய்யும்மகா தானத்தால் சீர்ஆ சிரமத்தால்
ஐயம்இலா மற்றை அறங்களால் — எய்தரிதாம்

தாணு உலகமது தாயே!'' எனச்செப்பக்
''காணஎனக் கவ்வுலகம் காட்'' டென்றாள்; —ஏணுடைய

பக்குவத்தோர் ஞானகுரு பாதம் வணங்கியே
மிக்கஉப தேசத்தால் வெண்ணீறும் — அக்க

மணிசிரத்தும் கண்டத்தும் மார்பினும் காதும்
அணிகரத்து மீதும் அணிந்தே - துணிவினொடும்

ஈசன் திருக்கோவில் எய்தி அல கிட்டாவின்
ஏசில் திருமெழுக்கா லேமெழுகித் - தேசுலவும்

மாமலர் கொய்துதிரு மாலைசமைத் துப்புகழ்ந்தே
காமர்ஒளித் தீபங் களும்ஏற்றித் — தேமலர்ஆர்

நந்தவனம் வைத்து நயந்தடியா ரைப்பணியும்
இந்தச் சரிதை இயற்றினரும் — அந்திவண்ணன்

தானும் ஒருவன்இந்தத் தா (மம்ஆ) ர்மூ வாயிரத்தென்
றானம்அறும் சொற்பெற் றுவந்தவற்கே — யானதிருப்

பொற்பணிகள் ஏந்தும் புகழ்த்தில்லை அந்தணரும்
விற்பொலியும் கப்பரைகள்மெய்யடியார்க் - கற்பி

னொடுங்கொடுத்துக் கைதொழுநாள் ஊடி மனையாள்
விடங்களத்தின் ஆணை விளம்பித்-தொடர்ந்தெமைநீர்

தீண்டாதீர் என்றுரைப்பச் சேயிழையார் தம்மைஎலாம்
தீண்டாதவ் வாணை செலுத்தியருள் - பூண்ட

குணநீல கண்டக் குயவனும், மாரி
தணியா திருள்பொதியும் சாமம் - துணிவாய்

வயலில் முளைவித்து வாரிஅமு தாக்கி
இயல்பினோ டும்சிவனுக் கீந்த - மயல்இலா

வள்ளல்இளை யான்குடி மாறனும் மாவடுவும்
எள்ளல்இலாக் கீரை இனியமுதும் - உள்ளம்

உருகிச் சிவன்கொளவே ஊட்டிவரு நாளில்
அருகி உணவும்இலா தாகப் - பெரிதும்உடல்

தள்ளாடி வீழத் தனிமா வடுக்கீரை
வெள்ளரிசி யும்கமரில் வீழஅரன் - கொள்ளவே

மாவடுவின் ஓசை வலிகேட்கத் தன்கழுத்தைத்
தாவிஅறுக் கும்அரிவாட் டாயரும், - தாவில்

கடலில் வலைமீன் களில்தலைமீன் ஒன்றைவிட
மிடற்றாற் கென்று விடுவார் - படுமீன்ஒன்

றாகப் பலநாளும் அவ்வழிதப் பாதுவிட
ஓகையொடும் உண்ண உணவிலையால் - ஆகம்

பசியால் மிகவருந்தப் பைம்பொன் மணியும்
இசையும்ஒரு மீன்வலையில் எய்த - நசையால்

இதுசிவனுக் கேஎன் றிரங்கிவிடும் அன்பார்
அதிபத் தரும்ஆர ணத்தே, - கதிசெப்பும்

சீருத் திரத்தைச் சிவனடியே சிந்தித்துப்
பாரிற்சே விக்கும் பசுபதியும் - காரிஎனும்

சொற்கோவை பாடிவரும் தூயபொரு ளால்இறைக்கு
நற்பணியும் அன்பருக்கு நல்லமுதும் - பொற்குவையும்

வேண்டும் படிவிரும்பி வெவ்வே றுதவியிடும்
ஆண்டகைமை யார்காரி யாரும், அருள் - பூண்ட

அருகர் சமயம் அகற்றிப் புகலி
மருவியசம் பந்தர் வழங்கும் - திருநீறும்

வென்றியரு ளும்பெற்று மேதினியில் சீர்விளங்கி
நின்ற நெடுமாற நேயனும், - துன்று

படைவெட்டிக் கூலிகொடு பத்தியினால் அன்பர்க்
கடிசிலொடு பொன்னும் அளிக்கும் - வடுவில்

முனையடு வாரும், மொழிசூது வென்றே
அனையபொருள் கொண்டடியார் ஆரத் - தினமும்

அமுதளிக்கும் மூர்க்கரும், ஆகாச் சமணர்
தமைஅடுத்தெச் சார்வுமான சார்பென் —
றுமைஇடத்தில்

வைத்தோன் அடிக்கன்பு மண்டிஎழ லிங்கத்தில்
நித்தம்ஒரு கல்மலராய் நின்றெறிவார் - நித்தம்

சிவலிங்கம் கண்டலது தீன்உணவு கொள்ளார்
அவமதியால் ஓர்நாள் அயர்ந்தே - உவமைஇலார்

உண்ணப் புகுங்கால் உளத்தில்நினைந் தேபயந்து
நண்ணிஒரு கல்லை நயந்தெறிந்தே - அண்ணல்

அருள்பெற்ற சாக்கியரும் ஆதிஅடி யார்கள்
வருகுறிப்பைக் கண்டு மகிழ்ந்தே - தருகன

ஆடைஅமுக் கெல்லாம் அறவெளுத்துக் கைக்கொடுத்து
நீடும்அன்பி னால்வணங்கி நிற்பார்முன் - கூடிஒரு

கந்தை கொடுத்துக் கடிதில்வெளுப் பாய்எனவே
அந்தம்இலான் மேகம் அனைத்தினையும் – சிந்திமழை

ஓயாது பெய்கஎன உற்றுமுகி லும்சொரிய
வேயாது செய்வன் எனஎழுந்தே – காயாத

கந்தை கொடுப்பஅனற் கண்ஒளித்தோன் இக்குளிருக்
கெந்த வகைஉய்வேன் யான்என்னச் – சிந்தை

உடைய மிகத்தளர்வுற் றோடித் தலையை
முடிவன்எனப் பாறைமிசை மோதி – விடையான்

திருவருளைப் பெற்ற திருக்குறிப்புத் தொண்டத்
தொருவரும்அன் பர்க்கடிசில் ஊட்டிப் –
பரிவினொடு

சுந்தரற்கு நண்புபெறு சோமாசி மாறனும்,
எந்தை திருக்கோயில் எய்தியே – நந்தா

விளக்கிடும் நாளில் மிகுவறுமை யால்அவ்
விளக்கொருநாள் முட்ட விரைந்தே - விளக்கின்று

முட்டா திடுவன்என முன்னே அகல்பரப்பி
யிட்டுதிர நல்விளக் கேற்றவே – தோட்டிக்

கருவிகொடு தன்கழுத்தைக் கையால் அரியும்
அரிய கலிநீதி யாரும், – பெரிதுவந்து

மெய்யரனை அல்லாது வேறொருவற் பாடாத
பொய்யடிமை யில்லாப் புலவோரும்,–வெய்யசமண்

கையர் வசமாகும் கைதவன்பால் மந்திரியாய்
எய்தியும் அப் பொய்ச்சமயத் தெய்தாமல் - மெய்நீற்றின்

சார்வாகி நின்றடியார் தாள்பணிந்து காழிமன்னற்
கார்வமிகும் ஆளாய் அருள்பெற்ற — சீர்கொள்

குலச்சிறை யாரும்,அரன் கோவிலினுள் எங்கும்
இலக்கம் இலாவிளக்கம் ஏற்றி — நலக்குறுநாள்

துன்றுவளம் எல்லாம் தொலைய வறுமையினால்
ஒன்றுமில தாகஒரு நாள்அன்பால் — அன்றிரவு

புல்லால் விளக்கெரிப்பப் போதாது தன்தலையில்
ஒல்லை எரியூட்டி உறும்பவத்தை - வெல்லும்

கணம்புல்ல நம்பியுமே கண்டிருப்ப தல்லால்
குணங்கொள் அறி வில்லார்க்குக் கூடா — தணங்கே! இத்

தேசிகன் வாழும் சிவலோகம்'' என்றுரைப்ப
ஆசில்இரு கண்ணீர் அரும்பினாள்; — தேசிகன்அவ்

வீதி அகன்றான்; அம் மெல்லியலை அன்னையரும்
கோதில்லா மாளிகையில் கொண்டணைந்தார் —
மாதொருத்தி

## பெதும்பை

மந்ததர சத்தி மருவும் எழிற்பெதும்பை
கந்தமிகும் கூழைக் கவின்நோக்காள்; — சந்தம்

புனைமார்பி னுள்எழுந்து பொங்கும் இணைய
நனைபோல் அரும்பும் நகிலாள்; — இனிய

கனிமொழியாள்; பாரில் கனமழையில் தோய்ந்து
நனிகுளிருற் றோர்உள் நடுங்கி — அனல்விரும்பித்

தேடி மெலிவதுபோல் தீவினைகட் கஞ்சியே
நாடியுள நல்லறமே நத்துவாள்; — கேடில்

சரிதை முனம்இயற்றிச் சாலோகம் சார்ந்து
வருதொடர்பால் காயம்மன வாக்கும் — கருதியே

மெய்யன் புளத்தில் விளங்கஅரன் உள்ளுறையாச்
செய்யும் செயல்அனைத்தும் செய்வாள்; — கையில்

பணிஈது காதில் பணிஈது காலில்
பணிஈ தெனக்கண்டு பார்(த்)தே - எணிஉளத்துக்

கொண்டறிவாள்; சேடியரும் கோதையர்க ளும்சூழ
ஒண்டொடியாள் பொன்மேடை உம்பரின்மேல் -
எண்டிசையும்

வில்உமிழும் பீடமிசை வீற்றிருப்ப விண்ணவரும்
எல்லை யிலாமுனிவர் எல்லோரும் — சொல்லுமன

பாவகத்துக்கெட்டாப் பரஞ்சோதி நம்போலும்
தீவகமாய் வந்த செயல்பாடி, — மேவும்

அருள்உருவில் எல்லாம் அடக்கியவா பாடி,
ஒருவவினை சில்லோர்க் கொழிக்கும் — இருவிழியின்

வல்லவம் பாடி, மருவும் பரிசத்தால்
அல்லல் சிலருக் கறுத்தருள — வல்லமலர்க்

கையின் சயம்பாடிக் காதலினா லேசிலருக்
கையம்அறுக் கும்வாக் கருள்பாடி, — மெய்அருளின்

பாவகத்தால் சில்லோர் பவங்கள்அறுக் கும்மனத்தின்
சேவகத்தைப் பாடிச் சிலர்உய்யப் — பூவுலகில்

வேதா கமங்கள் விரிக்கும் செயல்பாடி
யே, தாவில் ஆருயிர்கள் இன்புறவே - யோகஅருள்

செய்யும் கனகசபைத் தேவன் புகழ்பாடி
அய்ய மருங்கழங்கி தாடென்னத் - தையலர்

ஒண்டரளம் ஏழும் உவந்தளிப்பப் '' பார்த்தெங்கள்
அண்டர் பிரானுக் கருவிடத்தைப் - பண்டு

கொடுத்தகடல் தோன்றும்இது கொண்டாடல் ஆகா
தெடுத்தெறியும்; ஈசன் எழிலார் — அடித்துணையில்

பத்திசெய்து சாமீபம் பற்றினர்யார்? சொல்லும் '' என
அத்தகைஆ யத்தொருத்தி ஆங்குரைப்பாள் - ''நித்தன்

அடியார்செய் பத்தி அரிஅயனும் சொல்லி
முடியாது; யாரே மொழிவார்? — சடையான்

அடிஎடுத்துச் சொல்என்ன ஆரூரன் தொண்டத்
தொடைவிரிப்பச் சேக்கிழார் சொல்லும் — முடிவில்

அடியார்செய் பத்தியினில் யான்சிறிது சொல்லத்
துடிஇடையாய்! கேள் ' என்று சொல்வாள்; —
''விடையான்

அடியாருக் கெப்பொருளும் அன்பிற் கொடுத்தே
அடிமேல் பணியு மவர்முன் — விடூர்த்த

வேடம் தரித்து விமலன்வந் துன்மனையை
நாடித் தருகென்ன நன்றென்றே - கூட

விடுத்து மறித்தவரை வெட்டிஅரன் பாதம்
அடுத்த இயற்பகையி னாரும், - எடுத்துநெய்து

கோவணங்கள் அன்பர்கொள்க்கொடுப்பார்கையில்ஒரு
கோவணம்வைத் துத்தா எனக்கொடுத்தே -
சேவுடையான்

வைத்தஇடத் தில்கரந்து மற்றொன்று காட்டியதற்
கொத்தநிறை கோவணந்தா என்றுரைப்ப -
வைத்துத் 195

துலையில்இடு கோவணமும் தூக்களவை போதா
திலகும்(பல்) பொன்ஆடை இட்டே - துலைஒக்கும்

வண்ணம்மனையாளும்மைந்தனொடு(தானு)ம்ஏறும்
அண்ணல் அமர்நீதி ஆசிலரும் - நண்ணும்அரன்

கோவில்தொறும் பூசை குறையா தியற்றிஅன்பர்க்
காவலொடும் எல்லாம் அளிப்பவர்பால் - பாவிஒரு

மன்னன் இகல்புரிய மாட்டாது பொய்வேடம்
மன்னி வரப்பணிவார் வன்கழுத்தை - மின்னும்ஒரு

பத்திரத்தி னால்அரியக் கண்டு''சிவ பத்தர்இவர்
தத்த விடுக''எனச் சாற்றியே - அத்தன் 200

அருள்பெற்ற் மெய்ப்பொருளும், ஐவாட் பயிற்றி
வரும்பொருள்அன் பர்க்கு வழங்கி - வருநாள்

அதிசூரன் வாளில் அவற்குண்டந்து நீறு
வதியநுத லிற்பூசி மன்ன-எதிர்முனையில்

கண்டவன்உள் ளத்தில் கருதும் படிசெய்யக்
கண்டுமகிழ் ஏனாதிக் காவலரும், - திண்டிறலால்

வேட்டை வினைபுரிந்து மென்தசையும் கோல்தேனும்
ஊட்டிஅரன் கண்ணில் உதிரம்எழச் – சேட்புலத்தில்

கண்டோடி வந்து கசிந்துருகிக் காதலினால்
கண்டமருந் தெல்லாம் கணிற்பிழிய - மண்டி

எழஉதிரம் தம்கண் இடந்தப்ப மாறி
ஒழியமற்றைக் கண்உதிரம் ஓட – விழிமருந்து

கைகண்டேன் இன்னம்ஒரு கண்உளதக்
கண்ணையும்இவ்
ஐயன் விழிசேர அப்புவன்என் – றெய்யும்

கருவிகொடு கண்இடக்கும் கையைஅரன் பற்றும்
அருள்பெறுகண் ணப்பரும்,ஆ ராய்ந்தே – பொருவில்

துளைக்கருவி கொண்டதனில் தூய(எழுத் த)ஞ்சும்
கொளப்பெருகும் ஏழிசையும் கூட்டி – அளப்பரிய

சிற்பரனார் பாதம் செலஉருகி வாசிக்கும்
நற்பெருமை ஆனாய நாவலரும், – தற்பரனைச்

சாரும்உளத் தார்அடியார் சாரும் குறிப்பறிந்தே
ஆர்வமோ டும்கொடுக்கும் அன்பினார் – ஓர்மகட்குச்

செய்வதுவை நாளில் சிவன்அடியார் போலஉரு
எய்திவரக் கண்டவர்பால் இன்புற்றே – தையலைநற்

பாதம் பணிவிக்கப் பஞ்சவடிக் காகும்இவள்
கோதை எனச்சுரிகை கொண்டரிந்தே – சீதம்மலி

கூனற் பிறைகரந்தோன் கோலக் கையில்அளித்த
மானக்கஞ் சாற மதியோரும், — கான

இயத்துறுப்பு சோரரோ சனைஎழில்ஆர் வாரும்
நயப்பொடரன் கோவில்தொறும் நல்கி -
எயில்புறத்தின்

எல்லையில்நின் றுள்ளம் இரங்கிப் பணியுநாள்
தில்லை நகர்க்கேகச் சிந்தித்தே — ஒல்லா

வகைநினைந்து வேட்கையினால் மன்னுவன்நா
ளைக்கென்-
றகம்உனியே சின்னாள் அகல – மிகவிருப்பால்

தில்லைஎலை வந்துதரும் தீயில் விழுந்தரன்முன்
புல்லும் திருநாளைப் போவாரும், - எல்லைஇலாச்

சுத்தசிவன் கோயில்தொறும் தூயமுது செய்வித்தே
பத்திசெய்யும் நாள்ஒருநாள் பார்வேந்தன் – தத்தும்

பகைவெல்என ஏவப் பரிந்துசிவ பூசைக்
ககமகிழ்ந்து நெற்கூ டமைத்தே - இகல்முனையில்

போனார்வற் காலம் பொருந்தஅவர் சுற்றத்தா-
ரானார்அந் நெற்கூ டழித்துண்ணச் – சேனா

பதிபகையை வென்றுவந்து பார்த்தவரை எல்லாம்
கதிர்முனைவா ளால்அரிந்து கையில் — வதியும்

குழவியைப்பார் மீதெறிந்து கூர்வாளின் ஏற்ற
அழகுடைய கோட்புலியி னாரும், - விழைவினால்

ஆலவாய்ச் சொக்கர் அருளும் திருமுகத்துக்
கேலவே பத்திரனாற் கெப்பொருளும் - சீல

முடன்அளித்து வண்ணான் உவர்வெளுப்புக் கண்டு
நடன்அடியார் என்று நயந்தே - படிமேல்

பணிந்தும்அரன் பூசை பணிச்சிலம்பின் ஓசை
உணர்ந்துதினம் கேட்பார் ஒருநாள் - இணங்கும்ஒலி

தாட்க''இது என்?'' என்னச் சங்கரனார் ''சுந்தரன்நல்
பாட்டுவந்து கேட்டோம் பரிந்'' தென்னக் —
கேட்டுமகிழ்ந்

தின்புற்றுச் சுந்தரர்பால் எய்திஇருந் தேசிலநாள்
அன்பின்அவர் பின்சென் றருங்கயிலை – மன்சிவனைத்

துன்பம்அறக் கண்டு தொழுது தமிழ்பாடும்
அன்பர் கழறிற் றறிவாரும், — முன்புசெயும்

நற்றவத்தால் ஈசன்அடி நாளும் நினைந்தடியார்க்
கற்பினொடு பொன்அடிசில் ஆடைகளும் —
விற்றிகழும்

நன்மணிக ளும்கொடுக்கும் நாளில்ஒரு நாள்கணவன்
இன்அமுத மாங்கனிஇ ரண்டுதரத் – தன்அகத்துள்

வைத்தபின்ஓர் அன்பர் வரஅடிசில் மாங்கனிஒன்
றத்தவருக் குண்ண அருளியபின் — சித்தம்மகிழ்

வுற்றுக் ( கணவன் ) ஒருமாங் கனிஅருந்தி
''மற்றைக் கனிகொண்டு வா'' என்னக்–கற்புடையாள்

கையில் வரக்கொடுப்பக் கண் '' டிதனில் தெய்வீகம்
எய்தியசொல்'' என்ன இயம்பினளைத் - தெய்வம்எனக்

கண்டவனும் நீங்கக் கருதிஒரு பேய்வடிவம்
கொண்டுகயி லாயம் குறுகியே - அன்டன்நடம்

கண்டு தமிழ்பாடும் காரைக்கால் அம்மையும்,நல்
தொண்டர்க் கடிசிலொடு தூயகறி – வெண்டயிரும்

பாலும் படைத்துப் பணிந்துவரும் நாள்ஒருநாள்
கோல வயிரவநற் கோலமாய் – ஆலம்

பரித்தகளன் வந்து பசுப்படுக்கில் உண்பேம்
கருத்துளவோ என்று கழற – அருத்தியினால்

தம்மகனைத் தாய்பிடிக்கத் தாம்அறுத்து வெவ்வேறு
செம்மைஉறுப் பெல்லாம் தெரிந்துகறி – தம்அன்பால்

ஆக்கிஅரன் கொள்ள அளித்தசிறுத்
தொண்டரும்காண்
நீக்கம்இல்சா மீப நிலைபெற்றோர் – தூக்கில்

அரிதிவர்கள் செய்கை '' என ஆயிழையும் கேட்டுக்
கருதி உவந்திருக்கும் காலை — பொருவில்உயர்

சைவசித் தாந்தத் தனிவாயன் எங்கோனைச்
செவ்வை திருத்தும் சிவராயன் — எவ்வம்இலா

வண்குரு ராயன் வரராயன் மாதவத்தார்
கண்கொள் கருணா கரராயன் — எண்கொள்

கனகசபை ராயன் கவினார் மறுகில்
புனிதஅடி யார்சூழப் போத – வனிதைஎழில்

ஆயத்தோ டுற்றவளும் '' அன்னாய் இவர்முன்னே
ஏய எனையும் இருத்'' தென்னத் — தூய

பணிமொழியார் யாரும் பணிந்துநிற்ப தல்லால்
அணுகிஇவர் முன் இருத்தல் ஆமோ? — நணுகிஇவர்

பாலில்உப தேசம் பரிந்தருளப் பெற்றுமிகு
சீலமொடு வாசம் திகழ்மலரும் – ஏலுதிரு

மஞ்சனமும் இன்னமுதும் மன்னுபுகை தீபமுடன்
அஞ்சுசுத்தி செய்தரனை அர்ச்சித்தே – எஞ்சல்இலா

துன்னிஅனல் ஓம்பும் உயர்தவத்தோர்க் கல்லதவர்
முன்னிருத்தல் யார்க்கும் முடியாகாண் '' —
என்றுரைப்பத்

தையல்இரு கண்ணீர் தரநின்றாள்; மன்மதனும்
பையவந்து பார்த்துப்'' பராபரமாம் –
மெய்ஒளியே

ஞான குருவாகி நண்ணிஇவண் போந்ததிவள்
ஈனமிலாக் கண்ணே ; இயல்மாதர் – ஊன்உருக்கி

மையல் விளைத்து வளரும் விரகத்தால்
நைய உளத்தை நலிவித்தே — உய்யஅருள்

செய்யும்இவன் முன்ஏகில் செந்தீயால் முன்போல்என்
மெய்யை எரிக்கும் ''என வெய்துயிர்த்தே-மொய்மலரின்

புங்கவில்கை வேள்ஒளித்துப் போனான் ;
தெருக்கடந்தான்
பங்கை ஒளித்தவனும் ; மற்றொருத்தி – மங்கைஅரும்

## மங்கை

தீவிர சத்தி திகழும் பருவத்தாள்
மாவிரையின் ஓதி மதிநுதலாள் – தாவில்

குயில்மொழியாள் நுண்ணிய கோல்மின் இடையாள்
உயர்கிரியை முன்னம் உவந்தே — செயஅதனால்

ஈசன் சமீபத் திருந்து வரும்தொடர்பால்
தேசிரவி வெம்மைசெறிந் தேதகிக்கும் – மாசுரத்தில்

செல்வோர் மெலிந்துநிழல் தேடி விரும்புவபோல்
அல்லல்தரும் தீவினைகட் கஞ்சியே – பல்காலும்

சங்கரன்தாள் போற்றும் தவவேட்கை மிக்குடையாள்
அங்கமலக் கண்ணான் அறியாத – செங்கமலப்

பாதம் படிபரிக்கப் பாவும் கனகசபை
நாதன் புகழ்பாடி நாடிஅவன் – வேதம்உல

கெங்கும் விளக்கும் இசைபாடி யே,இருமூன் –
றங்கம் விரிக்கும் அருள்பாடித் — துங்கம்மிகும்

எண்ணெண் கலையின் இயல்விளக்கு மாபாடி,
வண்ண வடகலையும் வண்தமிழும் - மண்ணில்எங்கும்

நாட்டும் செயல்பாடி, நாலேழாம் ஆகமத்தின்
ஈட்டம் விளக்கும் இயல்பாடி, - வீட்டுநெறி

போற்றும் பதினெண் புராணஇயல் எல்லோர்க்கும்
சாற்றி யருளும் சயம்பாடிக் – கோற்றொடியா-

ரோடும்மலர்க் காவில் உவந்தன் பொடும்ஊசல்
ஆடி அகத்துமகிழ்ந் தாதரித்தே – சேடியரும்

சுற்றமும் சூழத் துதைந்திருக்குங் காலைமுர•
செற்றும்ஒலி வேதியர்கள் ஏத்தும்ஒலி - நற்றவத்தோர்

பாடிய தேவாரப் பண்ணின் இசைஒலியும்
பீடுபெற ஒன்றாய்ப் பெருகியவான் — (கூ)டும்

முகில்முழக்கம் போலும் முழங்க அடியார்
தொகுதிமறை யோர்குழுவும் சூழத்- (தகைகொ)ள்

அனகன் அமலன் அசலன் அடியார்
மனகன் கருணை வடிவன் – கனகன்

வெருவ விதலை விரிய மருவு
அரியும் அறிய அரியன் — பெரியன்

சிறியன் அதுலன் தெளிவன் அகுலன்
அறிவன் வரதன் அருவன் — குருநாதன்

வேதியர் வேந்தன் விபுலன் கனகசபை
நாதன் அணிமறுகில் நண்ணுதலும் – கோதையரும்

தானும் மறுகணைந்து தாழ்ந்திவரார் என்றுரைப்ப
ஊனமறும் கைத்தாய் உகந்துரைப்பாள் — ஈனப்

புலன்அடக்கி நாடிப் புழையில்இரு காலின்
சலம்அடக்கி யேஆறா தார - நலம்அறிந்து

மீதுவந்து போயதன்மேல் வெண்மதிய
மண்டலத்தில்
தீதில் அமுதுடலம் தேக்கியே – சோதிநினைந்

தட்டாங்க யோகத்தை அன்பினொடும்
செய்வோர்க்கும்,
இட்டமுடன் கோயில்தொறும் எய்தியே – மட்டவிழும்

செஞ்சடையான் பாதம் தெளிந்து பணிந்தடியார்
கஞ்ச மலரனைய கால்தொழுவார் – வஞ்சம்

அகன்றஆ ரூரனையும், ஆரூ ரரையும்
வெகுண்டுபுற கென்றமிண்ட ருக்கும், – புகுந்தே

சிவனடியார்க் கூறுவரில் தீர்த்துதவி செய்வார்
சிவகாமி யார்கரத்தில் சேரும் – நவமலர்ஆர்

கூடைபறித் துச்சிதறும் கோவளலன் வேழக்கை
பாடறவே வெட்டும்எறி பத்தருக்கும், -நாடிமறை

(யா)திக் கலைஎல்லாம் ஆய்ந்துகருத் தாசிவன்என்
றேதமறக் கண்டார் எழிற்கோவை - (மோதியே)

ஆயன் புடைப்பக்கண் டந்தோ எனஇரங்கி
நேயமுடன் உள்நடுங்கி நீத்தவனைத் - தூயஅற

ஆன்மேய்ப்ப தென்றுவந்தே ஆமேய்த்தவ் வாச்சொரிபால்
வான்கடத்தில் ஏற்று மகிழ்வினொடும் - மான்மேவு

தாள்அரனுக் காட்டியபால் 'தாளால் உதைத்ததந்தை
தாள்அறவே வெட்டியதண் டீசருக்கும், — வேளை

எரித்த பிரான்அடியார்க் கெப்பொருளும் அன்னோர்
உரைக்கும் முனம்கொடுத்தா ரூரன் - திருப்பதத்தைச்

சித்தமுறப் பல்நாளும் சேர்த்திஅணி மாதிகளாம்
சித்திபல பெற்றுத் '' திருக்கயிலை — அத்தரிடத்-

தாரூரன் நாளைக் கணுகும்'' என '' இன்றேநான்
சீரூரும் யோகத்தால் செல்வன்''என - ஆரூரன்

செல்லுமுன மேகயிலை சேர்ந்துபிற வித்துயரைக்
கொல்லும் மிழலைக் குறும்பருக்கும், — தொல்லைத்

திருப்புகலி ஈசன் திருப்பணிகள் எல்லாம்
விருப்பமுடன் செய்தமைத்து மேலாம் - திருப்புகலிச்

சம்பந்தர் பாத சரோருகத்தைப் பூசித்தே
நம்பிஅருள் பெற்றகண நாதருக்கும், — உம்பர்எழில்

மன்னும் சிவலோகம் வாழ்ந்திருக்கும் சாரூபம்
தன்னுருவம் போல்அருளும் சங்கரன்காண்- நன்னுதலே!

பாசவினை யொத்துமல பாகம்உறும் ஆருயிர்கள்
காசிருளை நீக்கக் கருதியே – தேசுலவு

ஞானகுரு வாகிவந்த நாதர்இவர்'' என்றுரை(ப்பத்)
தேனை யனையமொழி சிந்தைகொளா — வானமயல்

மீக்கொண் டெழஉடலம் விம்மிஅவா வுற்றுநின்றாள்;
மாக்கருணைத் தேசிகனும் மாளிகைசூழ் - ஆக்கம்மிகும்

## மடந்தை

அவ்வீதி விட்டகன்றான்; அங்கணியாள் மற்றொருத்தி
நவ்வி விழிமடந்தை; நல்தனத்தாள்; – அவ்விப்

பலகலையும் பார்த்துப் பதிசிவன்என் றுள்ளும்
நலமுடைய அன்ன நடையாள்; – மலிதீ-

வரதரத்தின் மந்தம் வயங்குசத்தி பாதம்
மருவும் பருவத்தாள்; வானின் – வருதுளியைத்

தேடும் பறவைஎனத் தேசாரும் ஞானத்தைக்
கூடஅருள் ஞான குருபரனைத் -- தேடிடுவாள்;

மூற்சரிதை யாதிதொழில் மூன்றும் குறைவறச்செய்
நற்றவத்தாள் ஆதலினால் ஞானவழி – பற்றியே

மித்தைஉல கென்றுவந்து மெய்ஞ்ஞானி கள்பாலில்
பத்திசெய்து போற்றும் பரிவுடையாள்; –
முத்தநகை

மாதர் உவந்துபுடை மன்னிவர நீராட
மாது மலர்வாவி வந்தடைந்தே - சீதக்

கருமுகில்மின் னும்படியும் காட்சிஎன வாரி
மருவிவிளை யாடுதலும், ''மானே ! – பெரிதுன்

வனப்புருவம் கண்டொதுங்க மாசை வலம்தேன்
துனும்கமலம் ஆம்பல் துளங்க – இனத்தினொடு

சங்குவால் ஆமை தகுஞெண்டு சேல்அனைத்தும்
பொங்கும் பயத்தோ(டும்) போய'' தென்று –
மங்கையர்கள்

போதும்நீ ராடல்எனப் போற்றிப் பணிந்துரைப்ப,
(மாதுகரை ஏ)றி மகிழ்ந்துகலை – யாதியாப்

பொன்அணியும் முத்தும் புனைந்து, நவமணிகள்
மின்னும்ஒரு பீடமிசை வீற்றிருப்பத் – துன்னும்

அனைத்தும் அறிவன் அனாதியே போதன்
அனைத்தும் வியாபகன் அத்தன் – அனைத்தும்

சுதந்திரன் நித்தியன் தொல்அனந்த சத்தி
துதைந்த பெருந்தீர்த்தன் தூயோன் – அதந்த்ரன்

பொற்பார் கனகசபைப் புங்கவன்நல் வீதிவரச்
சிற்றிடையார் சேதி தெரிந்துவந்தே —
பொற்றொடியாள்

பாதம் பணிந்துரைப்பப் பாவையருந் தானும்அணி
வீதியினில் தேசிகன்முன் மேவியே — பாதமலர்

கண்டு,மலர்க் கைஇரண்டும் கண்களிப்பத்
தன்தலைமேல்
கொண்டு, தொழுதுமயல் கொண்டரக்கு — மண்டும்

வெயிற்குருகு மாபோல் வெதும்பி அவண்நிற்ப
உயிர்க்குயிராய் நிற்கும் ஒருவன் — மயக்கம்அறக்

கண்ணின் கடைநோக்கால் கல்லைஉரு ஆக்குவபோல்
மண்முதல்ஐம் பூதமொடு வன்பொறியும் – உள்நிலவும்

சித்த முதற்கரணம் சேரும் கலாதிகளும்
சுத்தமாம் தத்துவமும் சூழ்உயிர்ப்பும் — இத்தின்

உருவ தரிசனமும் ஒண்சுத்தி யோடு
தெரிசே வலம்மருவ தீதம் — மருளாரும்

ஆதி உயிர்உருவ மார்காட்சி ஞானமொடு
சோதிஞா னாதீதம் சுத்தபரை – ஏதம்அறும்

காட்சியோ கம்போகம் காணும்அ தீதம்உயிர்
மாட்சிசுத்தம் சுத்தவித்தை மல்குசுகம் — மீட்டும்

சுகத்தில் அதீதமொடு சுத்தசிவ ரூபம்
தொகுத்த சிவகாட்சி யோகம் — பகுத்தல்அறு

தண்டல்இலாப் போகம் தனைக்காட்டி நீக்கம்இலாத்
திண்கடின வாதனைதீர்த் தேகதலித் — தண்டில்

எரிகொளுவு மாபோல் இவள்உளத்தில் இன்பம்
மருவஅருள் செய்ய மகிழ்ந்தே — பெரிதும்

கலங்கியநீர் தேறிக் கலந்துமணில் சார்ந்தே
இலங்கல்என மாதரொடும் எய்தித் — துலங்குலகம்

கான்றசோ றாம்எனவே கண்டுளத்து நின்றாள்; அவ்
வான்கருணை யாளன் மறுகசுன்றான்; —
தேன்மொழியாள்

## அரிவை

பின்ஒருத்தி வாசப் பிணிகுழை நன்னுதலாள்
மன்னுவம்பின் கட்டறுத்த வண்குயத்தாள் —
பொன் அரிவை

புன்சமயத் தோர்கள் புலன்போலப் பொய்களவும்
வன்கொலையும் கற்கும் மதர்விழியாள் — அன்புமிகும்

மாதீ விரதரத்தின் மந்ததர சத்திஇயல்
பாதானு கூலப் பருவத்தாள் — மீதீனும்

கற்றா தனைஅகன்ற கன்றைஉள்ளித் தேடுவபோல்
சற்குருவைத் தேடும் தகைமையாள் — முற்பவத்தில்

தேசிகன்பால் பக்திசெயும் தெள்ளிமையி னால்உயர்ந்த
பாசமறு ஞானிகள்பால் பற்றுடையாள் — ஆசை

உலகுடலுக் கில்லா ஒழுக்கம்உடை யாள்ஓர்
இலகுமணி மண்டபத்தில் எய்திப் — பலமாதர்

போற்றெடுப்ப முத்தின்எழில் பொற்பீட மீதிருந்தே
(ஏற்றம்மி)கும் தந்திரியாழ் ஓர்வளைக்கை — மேற்றழுவி

வீக்கிக் கருதி விமலகுரு வின்புகழே
தூக்கிஇசை ஏழும் தொகுத்துரைப்பாள்; —
ஊக்கமொடு

குங்கிலியத் தூபம்அரன் கோவில்இடு வார்வறுமை
தங்க உணவும்இலார் தம்மனையாள் — மங்கிலியம்

விற்றுமிகு குங்கிலியம் வேட்கையொடும் கொண்டுவிரை
வுற்றந்தும் தூபம்இட ஒள்நிதியும் — பெற்றே

திருப்பனந்தாட் சாய்ந்த சிவன்நிமிர வேண்டி
விருப்பமுடன் நாண்கழுத்தில் வீக்கித் — திருத்தும்

கலையருக்கும், சந்தனக் காப்பரற்கு முட்டச்
சிலையில்அங்கை தேய்த்தரனார் செப்பும் —
உலகம்எலாம்

மும்மையால் ஆண்டருளும் மூர்த்திக்கும்,
அஞ்செழுத்தால்
ஐம்முகனார் பாதம் அருச்சிக்கும் — செம்மை 335

முருகனுக்கும், ஈசன் முதிர்சூலை விட்டாண்
டருகமதம் நீக்கி யருளித் — திருநாமம்

நாவுக் கரையர்என நல்கியபின் வன்சமணக்
கோஅவரை நீற்றறையில் கொண்டுய்த்தும் —
பாவுவிடப்

பாலடிசில் ஊட்டுவித்தும் பாயும் மதகரிமுன்
ஏலக் கொடுபோய் இடுவித்தும் — சாலக்

கனத்தஒரு கல்ஆர்த்துக் கார்க்கடலில் தள்ள
இனைத்திலும்ஈ சன்பாதம் ஏத்தித் —
தினைத்துணையும்

சிந்தைவருந் தாதுவந்து தென்கடலில் கன்மிதப்பாய்
வந்துகரை யேறி மகிழ்ந்தரனை - அந்தம்இலாக் 340

கோவில் தொறும்பணிந்து கோதில்உழ வாரமுடன்
பா(வகப்)பா மாலை பலசாற்றித் - தாவில்எழில்

வேதியனைப் பற்றும் விடந்தீர்த்து, வே(தம்)முனம்
சோதியைப்பூ சித்தடைத்த தொல்கதவைக் -
காதலினால்

பாவின்இய லால்திறக்கப் பாடிப்பொற் காசுபெற்ற
நாவி னரையற்கும், நண்பினால் — நாவுக்

கரையன்என்னும் பேர்எவைக்கும் ஆக்கிஅவற் கன்பால்
பரிவின் அமுதளித்துப் பல்நாள் — அரியதவம்

ஆற்றியஅப் பூதி அடிகளுக்கும், அன்பினால்
ஏற்றிஅரன் பூசை இயற்றஅரன்—மேற்சிலம்பி

வந்துவிழத் தம்மனையாள் வல்லைதுமித் துத்துடைக்கும்
அந்தஇடம் அல்லாமல் எப்புறமும் — நொந்துபெரும்

கொப்புளமும் கொண்டதெனக் குன்றவில்லி யான்உரைப்ப
இப்புவியிற் பெற்றார் இரும்காழி – ஒப்பரிய

ஞானசம் பந்தருக்கு நன்கமுது செய்வித்தே
கானம் நவில்பாணருக்குக்கங்குலின்கண் — ஈனம்இலாப்

பாணினியா ரோடுவந்து பள்ளிகொள்ளத் தம்மனையில்
பேணும்அனல் வேதிகையின் பின்ஒருசார் — யாணர்

இடம்கொடுப்ப வேதி எழுந்துசெந்தீ ஓங்கித்
தொடர்ந்தொளிரக் கண்டுவந்த தூயோர் — நடன்அடியார்

வல்லை படிஅமுது செய்ய மகிழ்ந்தளிக்கும்
நல்ல திருநீல நக்கருக்கும், — தொல்லைத்

திருநீறே மெய்ப்பொருளாய்த் தேர்ந்து சிவன்பாலில்
ஒருமை உடையார் ஒருநாள் – திருவிளக்குப்

பார்க்கநெய் வேண்டிப் பரிந்தோர்(இல் லிற்கேட்கப்)
பார்த்தமணன் நீர்விளக்குப் பார்என்ன – நீர்ச்சடில

அண்ணல்அருள் (வாக்கால்) அகல்பரப்பி நீர்வார்த்தே
எண்ணில் ஒளிவிளக்கும் ஏற்றியே -- நண்ணித்

திருவாரூர் எல்லைபவம் சேரும் உயிர்க்கெல்லாம்
கருநீல கண்டஉருக் காட்ட — அரன்அருளால்

கண்டுகோ விற்பணிகள் காமித்துச் செய்கையினால்
தொண்டருக்கே ஆணியெனும் துய்யபேர் —
வண்டமிழ்சேர்

நாவுக் கரையர் நயந்தருளப் பெற்றபுகழ்
மேவுநமி நந்திஎனும் வித்தகற்கும், — சேவுடையான்

பாகத் துமையாள் பரிந்துமுலைப் பால்கொடுப்பத்
தாகத் துடன்அருந்திச் சார்மாயை — மோகம்

மலவினையும் நீங்கி வளர்ஞானம் பெற்றே
இலகொளிபொன் தாளம்கா சேமம் — குலவுகிழி

முத்தின் சிவிகையொடும் முத்துநிழற் பந்தர்அணி
முத்தின்கா ளம்சின்னம் முன்னவனே — சித்தம் 360

மகிழ்ந்தருளப் பெற்றுலக மன்னைஅனல் சேரத்
திகழ்ந்தஅனல் போகஎரி தீமேல் — புகழ்ந்தளித்த

ஏடுவே காமல் இருக்க எழில்நதியின்
ஓடுநீர் மீதில் உவந்திட்ட — ஏடெதிர்ந்தந்

நீரில் எதிரோடி நிற்க விடம்தீரப்
பாரில் பனைபெண் பனையாக — ஓரா

பொருவில்அங்கம் பொற்குடத்தோர் பூம்பாவை ஆக
அருகர் கழுவேற அஞ்(சா) — துருமெனவே

ஆர்த்துவரும் புத்தர் அழிய மறைக்காட்டில்
வார்ச்சடிலன் கோவில்எழில் (வாயி)லைச் —
சீர்த்தி 365

மின்அடைக்கப் பொன்னி விரிபெருக்கில் தோணி
யினில்அடியார் கூட்டமிக ஏற்றித் —தனிக்கரையில்

சேர முயலகன்நோய் தீரத் தமிழ்பாடிப்
பாரில்அரன் கோவில்தொறும் பாமாலை — ஏருலவச்

சாத்திப் பணியும் தமிழா கரன்காழிப்
பார்த்திப ஞானசம் பந்தனுக்கும், — ஏத்திஇறைக்

கெண்தீர் திருப்பணிசெய் தேநாவ லூரருடன்
நண்பாம் கலிக்காம நற்றவற்கும், — எண்பெருகும்

ஆகமங்கள் எல்லாம் அருந்தமிழ்மூ வாயிரமாய்
மோகம் அறஉரைக்கும் மூலற்கும், — ஓகையுடன்

ஆரூர் குளம்தொட் டரன்அருளால் கண்பெற்றுக்
காரூர் உளத்தமணர் கண்கெட்டே — பாரூரை

விட்டோடிப் போக விமலன் திருப்பணிகள்
மட்டறச்செய் தண்டிஎனும் மாதவற்கும், —
இட்டமுடன்

ஈசன் அடியார்க் கினிய அமுதளித்துத்
தேசுமகம் செய்யும் சிறப்புலிக்கும், ஈசன்

சினகரங்கள் தோறும் சிறப்புமிகு பூசை
அனவரதம் செய்வித்தார் தில்லை — இனமறையோர்

செம்பொன் முடிசூட்டச் செய்யோம் எனக்கனவின்
நம்பன்அடி தம்முடிமேல் நல்கவெலும் —
அம்புவியை

ஆண்டானுக் கன்பாய் அகமகிழும் கூற்றுவற்கும்,
நீண்டகையால் பூச்சிதறி நின்றகரி — மாண்டுவிழ

வெட்டும்எறி பத்தர்கையில் வாள்கொடுத் தென்னையும்
வெட்டும்என நின்ற விறலினான் — (கிட்டலரைப்)

பற்றித் தருகளனப் பல்சேனை மந்திரிபோய்
முற்றுபடை வெட்டித்தம் முன்கொணர்ந்தே – துற்ற

தலைகளிலே ஓர்புன் சடைத்தலை கண்டந்தத்
தலைதலைமேல் கொண்டழலில் சாரும் – இலதுபுகழ்ச்

சோழருக்கும், மாபூசை தூயஅரன் கோவில்தொறும்
வாழ நடத்திஅன்பா வந்தவர்க்கும் – மாழை

தனித்தனியே நூறருளித் தாவில்அமு தீயத்
தனித்தொருகா மக்குறியோர் தம்மை – உனிக்கண்

டிருபங்கு பொன்இரங்கி ஈந்துசிவன் பாதம்
மருவுநர சிங்கமன ருக்கும், — பரமன்

அடியார் பதம்விளக்க அன்பின் மனையாள்
கடியார் புனல்வார்க்கும் காலை – நெடுநாள்முன்

நீங்கும் தமதடிமை நேரக்கண் டம்மனையாள்
வாங்கக்கை அந்த மலர்க்கையைத் — தீங்கறவே

வெட்டுகலிக் கம்பருக்கும். மெய்யன் பரைஇழித்தே
இட்டம்இலாத் தீதுரைக்கும் ஈனரைமுன் —
கிட்டிஅவர்

நாவைஅரி சத்திக்கும், நம்பன்மாக் கோவில்தொறும்
பாவியலும் வெண்பாப் பரிந்தோதும் — காவலனார்

காடவர்கோ னுக்கும், கருதித் தமதுளத்தில்
நீடுபெருங் கோயில் நினைந்தியற்றிப் — பீடுபெறும்

ஈசனைத் தாபித் தியல்பினொடும் பூசித்தே
ஆசை அறும்வாயி லாருக்கும், — ஈசன்

திருக்கோவில் சூழ்ந்துவரச் சிந்திக் கிடந்த
மருப்பூஒன் றைத்தம் மனையாள் — விருப்ப

மு(டன்எடுத்து) மோந்தஅவள் ஒள்ளிய மூக்கைக்
கடிதில் செருத்துணைவாள் வாங்கப் — படிமேல்

புரண்டலறக் கண்டந்த பூஎடுத்த கையை
அரிந்தகழற் சிங்கஅர சற்கும், — தெரிந்துசிவன்

கோவில்தொறும் பூசை குறையா தியற்றிஅன்பர்க்
காவனவும் செய்யு மவர்நெல்லை — ஆவலுடன்

அன்பர் ஒருவர் அடியார்க் கமுதளிப்ப
வன்பின் எடுக்கும் வகைதெரிந்தே — முன்பிருக்கும்

காவலர்தம் முன்காட்டக் கண்டுருகி நெல்முதலா
மேவுபொருள் எல்லாம் விரும்பியே — சேவுடையான்

அன்பரே கொள்ள அளித்து முரசறைந்த
அன்பர் இடங்கழியார் அண்ணலுக்கும், —
அன்பினால்

ஆரூர்(ப்பூங்) கோவிலுள் ஆம்பணிகள் செய்யும்நாள்
தாரூர்மா மன்னன் தனித்தேவி — ஏரூரும்

மாந்தளிர்க்கை யால்ஒருபூ மண்மேல் கிடந்தெடுத்து
மோந்தஅணி மூக்கை முனிந்தறுத்தே — வாய்ந்த

திருப்பணிமுற் றச்செய் செருத்துணைக்கும், ஈசன்
விருப்பமுறும் கோவில் விளங்கத் — திருப்பணிசெய்-

தர்ச்சனைக்கு வேண்டும் அரிய பொருள்அமைத்துச்
சிற்பரனைத் தில்லைநகர் சென்றிறைஞ்சி —
விற்பொலியும்

விண்ணில்உயர் மாடங்கள் வேதியர்க்குச் செய்தமைத்த
அண்ணல்திருக் கோச்செங்க ணாருக்கும் —
வண்ணயாழ்

கைக்கொண் டரன்பதிகள் ஆண்டுதொழு
தேழிசையால்
மிக்கபுகழ் பாடி வியன்மதுரைச் — சொக்கர்

இருந்திசைபா டப்பலகை ஈந்தருளப் பெற்றே
பரிந்துதிரு ஞானசம் பந்தர் — தருந்தமிழை

யாழிலிட்டுப் பாடி அவர்அடியை நீங்காது
வாழும்அருள் பெற்று மகிழ்ந்தவர்பால் — யாழில்அரு

யாழ்மூரி பாடி யருளவும்பெற் றேபிறவிப்
பாழ்போக்கும் நீலகண்டப் பாணருக்கும் — வாழ்வுமிக

உற்ற செருவிலிபுத் தூரில் உவந்தரனை
அர்ச்சிக்கும் நாளில் அவனிஎலாம் — வற்கடமாய்

ஏலும்உண வில்லையா லேதளர்ந்து மஞ்சனத்தை
ஞாலமிசை போட்டுவிழ நம்பனார் — சீலப்

புகழனாற்கு நித்தம்ஒரு பொற்கா சளிப்ப
அகமகிழ்ந்து கொண்டர்ச்சித் தன்பால் — இகபரமும்

பெற்ற புகழ்த்துணைக்கும், பெம்மான் அடியாருக்
குற்றபொருள் எல்லாம் உதவுவார் — செற்றம்இலா

உள்ளத் தொருகோவில் உண்டாக்கி யேமனத்தால்
எள்ளற் றெதுபொருளும் எய்துவித்தே — தெள்ளி

ஒளிர்சிவனைத் தாபித்து(ம் ஒப்பில்)கணத் தோடும்
அளிவிரவ நாள்தோறும் அர்ச்சித்தே —
உளம்மகிழும்

பூசற்கும், பாண்டியற்குப் பூதித் துணையாகி
மாசில் கவிமன்னர் வாக்கினால் — தேசுடைய

வண்டமிழின் சொல்பெற்ற மங்கைக் கரசியற்கும்
துண்ட மதிபுனைவோன் தொண்டர்பெறத்—
தண்டல்இலாக்

கோதில்உடை யுங்கீளும் கோவணமும் நெய்தருளி
நீதியொடு (தந்திட்ட நேசர)ருக்கும், —பாதநிழல்

நல்கும் சிவனே நயந்துயிர்கள் பொய்ப்பிறவி
அல்லல்அறுத் தாள அருளுவான்—ஒல்லைஇரும்

காசினியில் வந்த கனக சபைநாத
தேசிகனே போற்றி ! சிவபோற்றி ! — ஆசில்

அருள்ஆ கரபோற்றி ! அவ்வருளைக் காட்டும்
இருள்தீர் கரபோற்றி ! என்றே — உளம்உருகி

போற்றியாழ் வாசித்துப் பூங்குழலாள் ஆங்கிருப்பச்
சாற்றும்உரைக் கெட்டாத தன்மையான் — போற்றும்

திகம்பரன்நல் அன்பர்உளம் சேரும்இரு பாதன்
இகம்பரம்இ லான்துணையும் இல்லோன் —
அகம்பன்எண்

சித்திதரு சித்தன் சிவஞான தேசிகன்நல்
முத்திதரு சித்தாந்த மோனத்தோன் — அத்தன்

அணிமறுகில் மேவ அணிமுரசின் ஓதை
பணிமொழியாள் கேட்டுப் பரிந்தே—மணிமறுகின் 420

மாதர் குழாத்தினொடும் வந்தணுகி நாதன்அடி
காத லொடுந்தொழுது கண்களிப்பச் — சீதப்

புளகமொடு கம்பம் பொருந்தி உரையும்
குளறி மிகவும்மயல் கொண்டே — இளகி

ஒளிவெயிலின் முன்னம் உருகுமெழு கென்ன
உளம்மெலிந்து நின்றே உருக — அளவில்

கருணைஉருக் கொண்ட கனகசபை நாதன்
அருளின் கடைநோக் கதனால் — கரியதிற

வல்லிருப்புத் தூணை வகுத்துருவம் ஆக்குவபோல்
அல்லல்ஒடுக்கி மாயைவினை ஆசகற்றி —
வல்ல(பத்)தால்

பச்சை விறகில்எரி பற்றக் கொளுவுவபோல்
அச்சம்அறும் இன்பம் அவட்கருளி—நிச்சயமாய்க்

(கண்டுடலம்) வேறாய்க் கமலஇலை நீர்போலும்
ஒண்டொடியா ரோடும் உவந்தணுகி—
வெண்டேர்தான்

முன்பினும்பொய் யாக விளங்குவபோல் இவ்வுலக
இன்பினையும் கண்டசைவற் றேநின்றாள்;—இன்பம்

அருளியநல் தேசிகனும் அம்பொன்அணி மாடம்
மருவும் தெருஅகல, மற்றோர்—தெரிவைமல

## தெரிவை

வாதை அறும்தீ விரம்ஆரும் சத்திநி-
பாதம் உடைய பருவத்தாள்;—ஓதிஅமர்

பூவியலும் கோதை; புலன்ஆர் இருங்குழையில்
தாவடிபோய் மீளும் தனிநோக்காள்;— தாவில்

அடியார் வினைபோல் அடங்கி இலாத
இடையாள்; உரகப்பை ஏர்அல்குல்—உடையாள்;இத்

தொல்லைஉவ கண்டசம்சு வேதசம்உற் பீசமொடு
புல்லும் சராயுசத்தில் போந்தணுகி,—எல்லைஇலாத்

தாபரமாய் ஊர்வனவாய்த் தண்ணீர் உறைவனவாய்
மாபறவை நாற்காலி மானிடமா — யேபிறந்து,

மெத்தச் சலித்ததனால் வெம்பிறவிக் கஞ்சியே
முத்தியினில் ஆசைவளர் மூதறிவாள்;—ஒத்த

வினையாள்; மலபாகம் மேவும் உளத்தாள்;
நனிகோடை யில்நீர் நயந்தே — இனையும்உளத்து

அந்தகன் தேடி அலைவதுபோல் ஞானகுரு
வந்தருள்வ தென்றென்றே வாடுவாள்; — சிந்தை

உருகிஅடி யாரை உவந்து தொழுவாள் ;
கரியகுழ லார்எழில்கள் காட்டும் — ஒருபளிங்கு

வேதிகையின் மீது விளங்குமணிப் பீடமிசை
மாதர்குழாம் சூழ மகிழ்ந்திருந்தே —'' (ஆதரம்கொள்)

தோழியர்காள் கேண்மின்''எனச் சொல்வாள் ''இரவின்கண்
வாழி கனகசபை வாணன்அருள் — ஆழியான்

வந்து கனவில் மதிமயக்கம் தீர்த்தெனது
சிந்தை கலந்தணைந்து தீ(து)கற்றி, —அந்தம்இலா

இன்பம் அளித்துலகம் எல்லாம்பொய் என்றுரைத்து
மின்பொலிநீற் றின்வேடம் மெய்என்றும் — அன்பில்லாப்

பொய்ய ரிடத்தே பொருந்தாதே என்றும்அருள்
மெய்யடியார் கூட்டத்தில் மேவென்றும் — ஐயன்

அருளி மயலும் அளித்தகன்றான்'' என்று
பரிவின் உரைத்துப் பதைத்துப் — பொருவில்

மணித்தவிசை விட்டு மயங்கி விழுந்தே
தணிப்பரிய மாமயலுள் தாழ்ந்தே — கணிப்பரிய

மோகத் துடன்கிடந்த மொய்குழலைத் தோழியர்கள்
தாகத் துடன்எடுத்துத் தாரணிமே — லாகவிட்டுச்

'' சீரார் அறிவுகொளும் தேனே ! இதுதகுமோ?
ஏரா துனக்'' கென் றிரந்துரைப்பப் — பாரா

எழுந்தாள்; புளகம்உற ஏங்கினாள்; விம்மி
வழிந்திருகண் ணீர்அருவி மானப் — பொழிந்துடலம்

கம்பித்துக் கண்ட கனவைநினைந் தேஉருகி,
வெம்பித் தளர்ந்துமிக வெய்துயிர்த்தே—அம்பொன்ஒளி

காலும் மணித்தவிசில் காரிகையாள் வீற்றிருக்கும்
காலையினில் அந்தணரும் கண்ணுளரும் – சில

அடியவரும் போற்றமுர சார்கலியின் ஆர்ப்பக்
கடிகமழும் கொன்றை கரந்தோன் – படியாதி

அத்துவ ரூபன்; அருள்(ரூபன்; இன்பரூப)ன்;
சத்திய ரூபன்; தயைரூபன்;– எத்திசையும்

போற்றும்அட்ட ரூபன்; புகழ்சப்த கானரூபன்;
நாற்றலையன் நாதன்; நவரூபன்; – ஏற்றம்உள

ஓர்ஐந்து ரூபன்; ஒளியாகும் ஐஐந்து
சேர்இந்து சூடும் சிவரூபன்; – நேரில்

குருரூபன்; என்உளத்தைக் கொண்ட சுகரூபன்;
பொருஇல் கொடிமறுகில் போதத் —தெரிவைஒளி

வீசும் தவிசிழிந்து மெல்லியலார் சூழ்ந்துவர
ஆசையொடும் வீதி அணைந்துவரும் — தேசிகன்முன்

வீழ்ந்து பணிந்து விதிர்விதிர்த்து மெய்ப்புளகம்
சூழ்ந்து பலகால் தொழுதிறைவன் — தாழ்ந்த

சடைகரந்து கண்டிசிகை தாங்கும் முடியும்
சுடர்மறைசந் தத்தூ நுதலும் — அடியார்க்[1]

கருள்இன்ப வாரி அளிக்கும் இருகண்ணும்
கருநஞ் சொளித்த களமும் — கருணையினால்

வேதாக மங்கள் விரித்துரைத்த செவ்வாயும்
கோதீர் குழைமறைசட் குண்டலத்தின் — சோதி 460

விரிந்தஇரு காதும் விதிசிரத்தின் மாலை
கரந்துமுத்து மும்கண் மணியும்— பொருந்தநிரை[2]

அஞ்சுகொத்து மாலை அணிமார்பும் அம்புலித்தோல்
விஞ்சும் உடைகரந்து மென்பட்டார் — தஞ்ச

மருங்குலும் பாத மலர்களையும் கண்டே
இரங்கிமகிழ்ந் துள்ளம் இசைப்பாள்–"இரும்பொழில்சூழ்

---

1. இவ்வடி சுவடியில் ''சுடர்மறைசந் தந்திலகத் தூய்நுதலும் அடியார்க்'' என உள்ளது. யாப்பமைதி நோக்கிப் பதிப்பாசிரியரால் திலகத் என்னும் ஈரசை தள்ளப்பட்டன.

2. ''கரந்து தரளமொடு கண்மணியும் பொருந்த நிரை'' என்பது சுவடிப்பாடம் யாப்பமைதிக் கேற்பப் பொருள்மாற்றமின்றிப் பதிப்பாசிரியரால் மாற்றிக்கொள்ளப்பட்டது.

நாகைப் பதிக்கரசே ! நற்றே சிகஅரசே !
மோகம்அறும் ஞான முதல்அரசே ! — தாகம்அறப்

பாரீர் ! கடைக்கண்அருள் பார்த்து ம(னத்திச்)சை
சேரீர்! பதமலர்என் சென்னிமிசை — தாரீர்! 465

களம்ஆர் களம்ஒளித்த காவலரே ! நாயேன்
உளம்ஆர் களம்ஒளிக்கொ ணாதோ? — இளவெண்

வளையும் மதிகரந்தீர் ! வல்வினையால் என்னை
வளையும் மதிகரக்க வம்போ? — குளம்ஆர்

அரிஜம் பொறிஅடக்கும் ஆரியரே! என்னுள்
அரிஜம் பொறிஅடக்கா காதோ? — அரிஎன்பின்

ஆயமா லைய்யொளித்த அண்ணலே! என்னுடைய
மாயைமா லைய்யொளிக்க வாராதோ? — நேயமுடன்

ஏழைக் கிரங்கி எழில்தார் அருளும்''என
மாழையொண்கண் நல்லாள் வகுத்துரைத்தே —
சூழும் 470

இரவிவெயில் முன்னர் இழுதுருகு மாபோல்
உருகிஅவ்வண் நிற்ப உவந்தே — குருபரனும்

பார்த்து மெழுகின்உருப் பண்ணுவபோல் மும்மலமும்
தீர்த்துக் கரியில் திகழ்எரிபோல் — கூர்த்தஒளி-

யானபேர் இன்பம் அவட்கருளக் கண்டுகளித் -
தீனஉல கம்பொய் இதுகனவே — மானும்எனக்

கண்டுநின்றாள்; வீதி கடந்தான் குருபரனும்;
ஒண்டொடியாள் பின்செல்ல ஓகைமிக — மண்டிப்

பெருவழியிற் போவார்தம் பின்செலலை உன்னி,
மருவுசங்கம் நீங்குவது மான — அருகுநின்ற

மின்னிடையார் தம்குழுவை விட்டேகும் எல்லையினில்
அன்னைஉரை செய்வாள், ''அமுதனையாய்! – பின்னே

வழிவசையும் ஓராய்; வலித்தயலோர் சொல்லும்
பழிமொழி(யும் எண்ணாய்;) படிமேல் – கழிபெருநம்

சுற்றத்தார் எல்லார்க்கும் சூழும்இழுக் கென்றறியாய்;
கற்றகல்விக் கிப்பயனோ கண்டறிந்தாய்? – பெற்றதாய்

சொற்றவறி னோர்க்குத் தொலையா நிரயம்எனக்
கற்றறிவோர் சொல்லும் கலைஅறிவாய் –
பொற்றொடி! நம்

தீதிலா மாளிகையில் செல்வோம்; வருதி''என
ஓதியசொல் நாராசம் உற்றதெனக் — காதில்உறக்

கேட்டவளும் சொல்வாள் ''கிளரும் எரிநரகின்
மாட்டும் பிறவிதொறும் வந்ததாய்க் — கூட்டத்தை

எண்ண அரிதுகாண்; இப்பிறப்பில் ஊட்டும்தாய்
திண்ணமுறும் கைத்தாய் செவிலித்தாய் —
வண்ணமுலைத்

தாயினொடு பாராட்டும் தாய்எனஓர் ஐவர்அதில்
நீயொருத்தி அன்னைஎன நின்றென்னைத் —
தீயொளிரும்

வெந்நரகில் வீழ்த்தவோ மெய்போலப்
பொய்உரைத்தாய்?
அன்னை!உனக் கிம்மொழிகள் ஆர்சொன்னார்?'' —
என்னலும்நல்

தோழியரும் சுற்றமொடு சூழ்ந்துரைப்பார், "சுந்தரியே!
வாழி!எமை அம்மா! மறத்தியோ? — ஏழிசையும்

செந்தமிழும் மற்றைத் திசைநூல் பயின்றாலும்
சந்தும் மலரும் தரித்தாலும் — எந்த

உணவைஅயின் றாலும் உவந்துநீ எம்மைத்
தணவாது கூடச் சரித்தே — கணமேனும்

நீங்காத நீஇன்று நீங்கக் கருதியது
பாங்கோ? தனித்தல் பழுதலவோ? — ஈங்குனையாம்

விட்டிருக்க ஆற்றுவமோ? மின்னே இதுதகுமோ?
இட்டம்உனக் கெங்கள்பால் இல்லையோ? —
விட்டனையோ

நல்லறிவை?'' என்று நயந்துரைப்ப நல்நுதலும்
எல்லவரும் கேட்ப இயம்புவாள் – ''செல்வம்

உடையானைக் காணில் உவந்துசுற்றம் எல்லாம்
புடைசூழ்ந்து போற்றுவீர்; புன்மை – அடையும்

வறியவனைக் காணில்முகம் மாறி யிருந்தே
முறியஉளம் வார்த்தை மொழிவீர் – அறிவுடைமை

செல்வம் உடைமையும்நற் செவ்வி உடைமையுடன்
கல்வி உடைமைவரும் காலத்தில் — ஒல்லா

தொருவற் கொருவர் உளம்அழுக்கா றுற்றே
ஒருவும் வகையும் ஒழிப்பீர் — கருதில்

ஒருவற் கொருவர்உற வொன்றும்இலை; பொய்யின்
கிரமம்; இனம்உரைப்பன் கேண்மோ – ஒருவன்

அடுபிணியி னாலே அழுங்கி மெலிந்து
கிடையில் நெடுநாள் கிடப்பின் – '' கடுகிஇவன்

போகானோ? எப்பொழுது போவான்?'' எனஉரைப்பீர்;
மாகாலன் வந்து மரபில்உறும் — பாகார்

மொழியாரை முன்னம் முனிந்து கொடுபோகப்
பழியும் இழித்துப் பலர்சொல்லும் — மொழிவசையும்

விட்டதெங்கே?'' என்றுரைக்கும் மெல்லியலைச் சுற்றத்தார்
''விட்டெமைநீ போக விடேம்'' என்னக் — கட்டழகி

இன்னும் இவரோ டியைந்துசில நாள்இருக்க
முன்னைவினை வாதனையால் முற்றியதீ — தென்னஉளத்

துன்னிஅந்தச் சுற்றத்தா ரோடும் கலந்திருந்தாள்
துன்னுபுளி யம்பழமும் தோடும்போல் — பின்னொருத்தி

## பேரிளம்பெண்

பேரிளம்பெண்; மைக்குழலாள்; பேணி மதிப்பொறியை
ஆரஜம் பாலின் அணிகிலாள்; — ஏருலவும்

மாதீ வரதரத்தின் மாதீ வரதரமாம்
கோதீரும் சத்திபதி கொள்கையாள்; — மாதேசு

மையணுகா நோக்கத்தாள்; வம்பை அறுத்துவெறி
செய்யகம லத்தைச் சினந்தெழுந்தே — துய்ய

மலைஎனவே ஓங்கி வளைகொங்கை மேவி
இலகும் எழில்மறைக்கும் என்றே — பலபணியும்

பூணாள்; அவயவநல் பொற்புடையாள்; கல்வியினால்
சேணாரும் வாணியினும் சீர்உடையாள்; — கோணா

அறிவுடையாள்; வேதா கமபுரா ணம்சீர்
செறியும் கலைசாத் திரமும் — நெறிகொள்

பலசமய மும்முணர்ந்து, பல்சமயம் கீழாம்
இலகும் சிவம்மேலாம் என்னும் — நலம்அறிந்தே,

ஆரும் பிறவியினுக் கஞ்சியே, முத்திநிலை
சேருவதெப் போதென்று செப்புவாள்; — ஆரும்மடி

ஆடும் பசிஉடையார் அன்னமிடும் தாதாவைத்
தேடுவது போற்குருவைத் தேடுவாள்; — பீடுபல

சாற்றும் சமய சயவல்லி என்னும்பேர்
மேற்கொண்டோர் செய்குன்ற மீதேறி, — நாற்றிசையும்

மங்கையர்கள் போற்ற, மகிழ்ந்து, மணிப் பீடமிசை
அங்கண் இனிதிருப்ப, அப்பெயர்கேட் — டெங்கும்உள

பல்சமயத் தோர்கள் பலரும்இவள் பால்ஈண்டி
''வல்லி! உனதுபெயர் மாற்றுதற்கா — எல்லவரும்

வந்தோம்'' எனஉரைப்ப, மற்றவரைப் பார்த்துமது
சிந்தைமகிழ முத்திநிலை செப்பும்''என —
வந்திவள்முன்

## உலகாயதன் கூற்று

ஒல்லை உலகா யதன்அளவைக் காட்சியதில்
சொல்லும், ''நால் பூதத்தில் தோன்றும்உடல்; —
எல்லைஇலா

மண்ணில் கடம்போல வரும்உடலின் நீர்க்குமிழி
வண்ணம்என உண்டாம் மனாதி;அதில் – சுண்ணம்

உறுகாய் அடையில் ஒளிர்சிவப்புப் போல
அறிவு கொளும்; உடலோ டந்த – அறிவும்உடன்

மாயும்; அதனால் வளமையுடன் உண்டுடுத்துச்
சேயிழையார் இன்பம் திளைப்பதே - ஆயில்நல்ல

முத்தி; இது அல்லாது முன்வினையும் ஆருயிரும்
அத்தனும்உண் டென்பதிலை யாம்''என்னப் —
''புத்தியிலாய்!

## உலோகாயத மறுப்பு

சாரும்அறி வுண்டெனநீ சாற்றியது காட்சியல்ல;
ஆரும் அநுமானம் அல்லவோ? – கார்இருண்டு

மின்னி, இடிக்கின்மழை மேதினியோர் பெய்யும்எனச்
சொன்ன தநுமானச் சொல்அலவோ? – துன்னுபுனல்

ஆற்றிலே கண்டுமழை யால்வந்த தென்றுரைக்கும்
மாற்றம்அநு மான வழக்கலவோ? – சீற்றரவு

சூரியனைத் தீண்டும்எனச் சொன்னால்அந்
நூல்உரைத்த
ஆரியனும் உண்டதனால் ஆன்மாவும் — சேரும்

வினையும்உள தென்றறிநீ; வெந்நரியும் நாயும்
நனிவிடக்குத் தின்னுமது நன்றோ? — மனம்நினைக்கின்

ஆரும் அருவருக்கும் ஆகா மலத்தைஇந்தப்
பாரில்ஊர்ப் பன்றிதினும் பண்புபோல் —
சோரிஎன்பு

மேதைநீர் மச்சைமுடை மென்தோல் கபமலத்தை
மாதர்இன்பம் என்னும் வழிவிட்டே — நீதியொடும்

சோதிஅரன் பாதம் தொழுதுய்'' எனமறுத்தாள்;
போதமி லான்அகன்று போனதற்பின் — நீதி

## சவுத்திராந்திக பௌத்தன் கூற்று

அகல்புத்த ரிற்சவுத்தி ராந்திகனும் வந்தே,
''மிகுநல் அருவுருவம் வீடும் — புகல்வழக்குக்

கந்தம்ஐந்தும் மெய்அன்றிக் காலம்உயிர் வான்திக்காம்
இந்த விதியோ டிறையும்இலை; — வந்துலகில்

செத்தஉரு மண்நிகர்;ஊன் தின்னலாம்; எப்பொருளும்
ஒத்தகணம் தோன்றி உடன்மாயும்; — வைத்த

அவைஅனைத்தும் பொன்றக்கெட் டாவதுவே எங்கள்
நவையில்உயர் முத்தி"என, ''நாண்இல் — அவமதியாய்!

## சவுத்திராந்திக மறுப்பு

வானம் இடங்கொடுத்த லால்,மருவும் வல்வினைகள்
ஈனம் அறஅருந்தி யேமுத்தி — தானுறலால்

ஆமுயிரும்; மூவினைமை யால்காலம், திக்குநலம்
தீமைவர உண்டு;இதனைச் சேர்ப்பவனும் — ஆம்அறிநீ;

முத்தி இறந்துகெடின் முன்னோ னுடன்உயிரும்
ஒத்தறியு மோ? அறிவ தொன்றும்இலை; – செத்தஊன்

தின்னுவது பாவம்; நீ செப்பியஇத் தீநெறிவிட்
டின்னல்அற ஈசன்அடி ஏத்''தென்றே – அன்னசொற்

## யோகாசார பௌத்தன் கூற்று

சீரை மறுத்தாள்; திகைத்தகன்றான்; பொய்யோகா
சாரன் அணைந்து, ''தத்துபோதம் – மாறும் 535

பொருளாகித் தோன்றும்; பொருளாய் எழலால்,
வருபோதம் வாதனையில் கூடி – வரலால்,

வடிவிலத னால்கனவை மானும் சகமும்
ஒடிவில்அறி வெ''ன்றே உரைப்ப – ''நொடியும்

## யோகாசார மறுப்பு

அறிவுகணத் தில்கெட் டது;வா தனையில்
உறுவதுநீ எப்படிஓர் வுற்றாய்! – அறியும்அருப்

பேதித்து மண்முதலாம் பேதஉரு ஆகுமோ?
ஓதுட்போ தம்பொருளாய் உற்றொழியா; –
வாதனையும் 540

உண்டோ வருந்தும் உயிருக் கிலைஎன்று
கொண்ட சிவன்அருளில் கூடெ''ன்றே – எண்டிசையும்

போற்றமறுத் தாள்;அப் பொறியிலியும் ஆங்ககன்றான்;
ஊற்றம்இலா மாத்துமிகன் உற்றவள்முன் – சாற்றும்:–

## மாத்துமிக பௌத்தன் கூற்று

''அவயவங்க ளேபொருளும் ஆகும்;அவை இன்றேல்
பவபொருள்இன் றாகும்; பகரும் – பவபொருளும்

இன்றேல் அறிவும் இலையாகும்'' என்றுரைப்ப
மின்றோய் இடையாள் மிகநகைத்தே, – ''ஒன்றும்

## மாத்துமிக மறுப்பு

அவயவங்கள் கண்டுணரா தப்பொருளை; அன்றி
இவையைக் கடபடத்தில் ஆக்கில் — அவைவெவ்வே-

றெய்தும்; அவயவங்க ளேபொருளா கா;பொருளுக்-
கெய்தும் அவயவங்கள் இன்றியே — எய்தியது

கண்ட பொறியும் அறியாது காண்;அரனை
மண்டும்அன்பி னால்வணங்கி வாழ்த்''தென்றே —
கண்டித்துச்

சொல்லி மறுத்தாள்; துணுக்குற் றவன்ஏக
வல்லைஇவள் முன்வந்து வைபாடி — ''நல்ல

## வைபாடிக பௌத்தன் கூற்றும் மறுப்பும்

அரிசனமும் நூறும் அணுக அருணம்
தருவதது போலச் சகமும் — பொருளும்

மருவவரும் ஞானம்''என வஞ்சன்உரை செய்யப்
''பொருள்சகமும் உள்ளும் புறம்பாய் — அருவும்

உருவும்ஆம்; சேரஅவை ஒன்றாகி யேதான்
வருவதெங்கே? இப்பொய்யை மாற்றிப் — பரமன்

அடிபோற் றெ''னமறுத்தாள்; அங்கவனும் நீங்கக்
கடிய நிகண்டருகக் கையன் — கடிதுவந்து,

## நிகண்டவாதச் சமணன் கூற்று

''பொன்னெயில்வட் டத்தில் பொருந்தனந்த ஞானாதி
துன்னும் அருகபரன் சொல்நூலில் — பன்னும்எழுத்-

தஞ்சினால் பத்தாம்; அவைகாலத் தோடுயிரும்
விஞ்சுதன் மாதன்மம் நன்மைதீமை — தஞ்ச

வெளிபுற் கலம்பற்று வீடெனும் பத்தாலே
ஒளிர்கன்மம் நாசம் உறவே — அளிமிகுநற் 555

புண்ணியம்மேல் கொண்டுய்க்கப் போற்றுதொழில்
ஆறும்போய்
அண்ணுவினை மாயமுத்தி ஆம்''என்றே — பண்நேர்

## நிகண்டவாத மறுப்பு

உரையாள்முன் செப்ப, ''உயிர்க்குணங்கள் விட்டே
மருவுகுணம் கொள்ளலால் மன்னும் — அருகன்

இறைஅல்லன்; தன்மத் தியலுதன் மாத்தி
உறும்உருவம் ஏயும்; உதுவும் — அறந்தொலையில்

ஆகும்எனப் பார்த்திருத்தல் ஆழ்கடல்நீர் வற்றியபின்
ஓகையில்மீன் தின்ன ஒருபூசை — மேவிஅங்குத்

தூங்(கும்)நெறி ஆகும்;உன்சொல் துன்று
வினைசடமாம்;
ஆங்கதுதா னேகொண் டணையாதாம் —
ஈங்கவற்றை 560

விட்டுச் சிவனடியில் மேவிப் பணி''என்றே
தட்டிஅவன் வாதந் தனைமறுத்தாள்; — விட்டவனும்

## ஆசீவக சமணன் கூற்று

ஏக,ஆ சீவகனும் எய்திஇவள் முன், ''அணுஐந்-
தாகும்;அதில் பூதம்நா லாம்;உயிர்ஒன்—றாகும்;அந்தப்

பூதம்அறி யாது; பொருந்தும் உயிர்அறியும்;
கோதிலா நாற்கரணம் கூடியே – காதலினால்

ஒட்டுத்தீட் டுக்கலப்பின் உற்றறியும் புண்ணியத்தோ
டொட்டிப்பா வங்க ளுடன்கூடி — ஒட்டி

அறிந்தடைவில் முத்தி அடையும்இது'' என்னச்
செறிந்தமைபோல் வான்செப்ப" முத்தி – அறிந்த

வரும்ஞானம் ஈதெனவே வாய்ந்தவனும் சொல்ல
இருவகை;எம் போல்வான் இறையோ? – மருவும்

உயிர்அணு வாய்ஒட்டித் தீண்டிக் கலப்பின்
இயல்என்ற தில்;துயில்வந் தெய்தப் – பயில்கரணம்*

இன்றால்; கரணம் இழப்பஉயிர்க் குத்தலைமை
குன்றியதோ? பூதம் குலைந்தனவோ ? — சென்று

பிரியில்உயிர் தொட்டுத்தீண் டில்லையாய்ப் பின்னே
மருவவளி கூட்டும் வகையால் — கருமமலம்

ஆதலினா லேஅறியாய் அன்பினொடும் சங்கரன்தாள்
ஏதம்அறப் பூசிப்பாய்'' என்றவன்சொல் – வாத

மொழிமறுத்தாள்; ஊமன்என மோனமுடன் ஏகத்
தொழில்மிகுபாட் டாசாரி சொல்வான்— ''அழியா–

---

* சுவடியில் இவ்வடி, ''கலப்பி, னியலின்றி யிற்றுயில்வந் தெய்தப் பயில்கரண, மின்றால்'' எனக் காணப்படுகிறது. இங்கே கொண்ட வடிவம் பொருளமைதி நோக்கிப் பதிப்பாசிரியரால் கொள்ளப்பெற்றதாகும்.

## பாட்டாசாரியன் கூற்று

தருவாய் அநாதியு மாம்சுயம்பு வேதம்;
பரமாய் அறிவாய்ப் பரந்தே — விரவிநிறைந்

தெங்குமாய் நிற்கும்உயிர் எய்தும்வினை
கெட்டருவாய்த்
தங்கும்உட லைப்பற்றும்; தண்ணளியால்-இங்கியற்றும்

சோமயா காதித் தொழிலும்மன் ஞானமுமே
தாமிரு கால்ஆகச் சார்ந்ததுவே — சேமமுத்தி

ஆக்கும்; உலகநித்த மாம்; வினைகெட் டாருயிரின்
ஊக்க மறப்பொருந்தும்" என்றுணர்ந்தே —
தூக்கிஉரை 575

## பாட்டாசாரிய மறுப்பு

கோதைமுனம் சொல்லக் ''குலவியதோ லுக்கூடா –
தோதிய வேதம் உளதாகா — தாதி;

அணுகும்உடல் வேறாய் அறியா மையாலே
எணும்உயிரும் எங்கும்நிற்ப தின்றாம்; — நணுகும்

அருவினைகெட் டாவதிலை யாம்;சோம யாகம்
தருவினையும் ஞானமும்நீ சாற்றும் — அருமுத்தி

ஆகா தரனை அருச்சி" எனமறுத்தாள்;
பாகார் மொழிக்குப் பயந்தகன்றான்; — ஆகாப்

## பிரபாகரன் கூற்று

பிரபா கரன்வந்து, "பேணுசெயல் அபாவத் *
தொரபூரு வம்தொழிலில் உற்றே – அருபலமாம்; 580

---

* பேணுசெயல் அபாவத்து-கலித்தளை

இவ்விரண்டும் சேர இயல்கெடவே மண்சிலைபோல்
செவ்வையுறல் முத்தி''எனத் தேர்ந்துரைப்ப—நவ்விவிழி

## பிரபாகர மறுப்பு

மாதவனை நோக்கி, ''வருபலத்தை வல்வினைக—
ளேதரும்என் றோத இருக்கெல்லாம் — ஓதியஉன் அ—

பூர்வஉரை மாறு;வான் பூமுடியில் மன்னிமணம்
சேர்வ திலை;அறிவு செத்துயிரும் —ஆர்வதிலை

செம்மை அகன்றுநிலாச் செந்தீ என;சிலையும்
இம்மணும்போல் கெட்டறிவில் என்பெறுவாய்?—
மும்மலமும்

ஏகச் சிவனடியை ஏத்துவாய்'' என்றவன்சொல்
மோக உரைமறுத்தாள்; முன்னவனும் – ஏகவந்து 585

## சத்தப்பிரமவாதி கூற்று

சத்தப் பிரமன், ''தரும்உரையே மையலினால்
உய்த்துலக மாம்; பொருள்வே றுண்டென்றே—
வைத்தே

உரைப்பதுபொய் யாம்;இதனை உற்றுணர்தல் வீடெ''ன்
றுரைக்குமவன் நூலுணர்ந்தேஓத, — ''உரைத்தஉரை

## சத்தப் பிரமவாத மறுப்பு

*மையலி னால்உளதேல் மையல் தனக்குளதாய்
வையகம்ஆ காது வரைந்திதனை — உய்ய

---

* இக் கண்ணியில் ஏடெழுதுவோரால் பாடம் பிழைபட்டிருக்கலாம்; உரைப் பகுதி காண்க.

உணரும் அதுகதியேல் ஒண்மறைக ளோடும்
அணவும் மலைவதனால் ஆகா —திணையில்

கதியதனால் ஈசன் கழலை வணங்கெ''ன்றே
மதியிலன்சொல் வாதம் மறுத்தாள்; —
முதிர்அறிவொன் — 590

## மாயாவாதி கூற்று

றில்லான் அகன்றான்; இகல்மாயா வாதிவந்து,
''தொல்லை அறிவாகிச் சுத்தமாய்த் – தொல்லை

வரும்அகில காரணமாய் மன்னும்நித்த ஆதி;
அரு; அனந்த ஆனந்தன் ஆகிப் - பொருவரிய

கன்னல் சுவைபோல் கருதுமுத்தி ஆகியே
துன்னிநிறைந் தெங்குமாய்த் தூயபரன் – மின்ஒளிசேர்

பொன்னில் பணிபோல் பொருந்துலகு சீவனாய்
மன்னும் சிலம்பிநூல் மானமணி – துன்னும்

சரடெனதில் தோயாது சாரும்;சீ வான்மா
கருவிபதி னாலுடனே காணும்; – தெரிஅவத்தை 595

மூன்றினொடு சார்ந்து, முதிர்வினையிற் சாராது
தோன்றுசலத் திற்பொருந்தும் தூமதிபோல்;-ஏன்றசகம்

இப்பிவெள்ளி யாகி இரவில் கயிறரவாய்த்
தப்பறவே தோன்றுமது தான்பொய்யாம்; – ஒப்பிலா

நல்ல விவேகமுற்றஞ் ஞானமுகி லைக்கால்கள்
மெல்ல வெளியாக்க வீடு; தனை — ஒல்லை

பிரிக்க வரும்அனலில் பெய்காட்டம் போல்விரித்த
பிரமத் தழியு(மே); மேலாய் — உரைத்தமகா

வாக்கியம் நான்அதுவாய் மன்னுநிலை யாம்''எனவே
தூக்கிஅவன்வாதத்துச்சொல்லும்உரை — ஊக்கம்அற

## மாயாவாத மறுப்பு

வென்றிகொளு வாள்நோக்கி, "மெய்ஞானம் ஞாதுருவும்
ஒன்றியநல் ஞேயமுமே யாயிருப்ப — ஒன்றென்ப

தாகுமோ? தானே அநுபவிப்ப தானதநு
போகமோ? (நீயே) புகல்உரையுள் — ஆகும்இரண்-

டுண்டு; கலந்திருக்கும் உண்மைஅறி யாய்;பரமே
கண்டசக மாகவரில் காசினியோர் — உண்ட

நறும்பால் திரள்மலமாய் நண்ணிஅது மீட்டும்
நறும்பால் திரளாமோ? நாடி — அறிந்தானைப்

போற்றினிநீ'' என்னப் புகன்றுமறுத் தாள்;அவனும்
தோற்றகலப் பாற்கரியன் துன்னியே,—
''போற்றும்உயர் 605

## பாற்கரியவாதி கூற்று

சித்தே உலகாகிச் சீவன்ஆம்; ஆதலினால்
சத்தாம்;மே லாம்அதனில் தான்கெட்டே - சித்தாகும்;

## பாற்கரியவாத மறுப்பு

ஈதுநிலை'' என்றுரைக்கும் இவ்வாதி யைப்பார்த்துச்
''சோதிமிகு சத்தசத்தாய்த் தோன்றுமோ? — ஓதும்

அறிவும் அறிவால் அறியும் பொருளும்
பிரிவறஒன் றாகப் பெறுமோ? — அறிதரமுன்

பொய்நெறியை விட்டுப் புனிதன்அடி போற்றெ''ன்றே
வெய்யவன்சொல் வாத விதிஅறவே — தையல்

உரைத்து மறுப்ப,அவன் உள்நடுங்கி ஏகத்
தருக்கி நிரீச்சுவர சாங்கி — உருத்துவந்து 610

## சாங்கியவாதி கூற்று

''மூலம் பிரகிருதி முன்னுபுரி யட்டகமாய்
ஏலும்ஒரு மூன்றாகும் ; இச்செயலில் — சாலும்

பிரகிருதி யேதூலம் பெய்சூக்க மோடு
பரமுமாய் அந்தபுரு டன்பால் — விரியும்உல

கெல்லாம் ஏழச்செயல்ஆம் ; ஈதுநிலை'' என்றுரைப்ப
நல்லாள் நகைத்தவனை, ''நாடறிவொன் — றில்லாப்

## சாங்கியவாத மறுப்பு

பிரகிருதி ஆசும் பெரும்புருட னும்சேர்ந்-
தொருமை யுடன்அறிவ தோரில் — தெரியாக்

குருடன் முதுகில் குறைமுடவன் ஏறி
அருநெறியில் செல்வதுபோ லாம் ; நீ — கருதும் 615

பொருள்நிலையை விட்டிறைவன் பொன்னடிபோற்-
றெ'' ன்றே
மருளும்அவன் வாதம் மறுத்தாள்; — தெருளும்அறி

வில்லான் அகன்றான் ; இரக்கம்இலா வன்கண்மை
வல்லபஞ்ச ராத்திரியும் வந்தே — நல்ல *

---

* வந்தே நல்ல - தளை தட்டுகிறது. சுவடியின் சிதைவால் அடுத்த கண்ணியின் தெளிவான வடிவமும் அறியக்கூடவில்லை.

## பஞ்சராத்ரி கூற்று

அருவாகி எ(ங்குநிறை ஆதி) . . . . . . . . . . . .
. . லொளிர் சோதிசுவேச் சையினால் — உருவாகி,

வாரிநீ ருள்துயின்று மாமறைஎல் லாம்அறைந்தே
ஆரும்ஆ யாவடிவாய் அம்மாயர் — காரியமாய்ப்

பத்துருவ மாகிப் பரிந்தொருவன் ஆகியே
உத்திஉல குண்டும் உலகளந்தும் — சத்தம்மிக

ஓர்இபந்தான் மூலம்என வந்துதவிப் பார்காத்தும்
ஆரும்அரு மாயையினால் ஆருயிரைச் — சேரவே

பந்தத் தவிழ்த்துப் பரியும்;அரி யைப்பணிந்தே
சிந்தைசெய வைகுண்டம் சேருவதாம் - பந்தம்அறு

## பாஞ்சராத்ர மறுப்பு

முத்திஇது'' என்றுரைக்கும் மூர்க்கன்உரை
நோக்கி,''உன -
தத்தன்அரு வேல்உருவம் அல்லவாம்; — சோதி

உருஇச்சை யேல்சாபம் ஒன்றான்; உறங்கும்
அரிகண் விழியான்;அவ்வேதம் - தெரியில்அவன்

உற்ற(பல்) தொய்உருவில் ஒன்றும் பரிபவங்கள்
சற்றோ!மண் உண்டுமிழ்ந்தான்; தாரணியில்—
உற்றெழுந்த

சோதிஅடி காணான்; தொடர்விடத்தால் மெய்கருகி
ஏதம்உறு மாயையினி லேமயங்கும்; — ஆதி

அரிகடவுள் என்றுரைக்கும் அந்நெறிவிட் டீசன்
திருவடியில் அர்ச்சனைகள் செய்தே – பெரிதுவந்து

போற்றுவாய்'' என்றவனைப் பொன்னைஅனை யாள்மறுப்பத்
தோற்றவனும் ஏகத் துடியிடையார் - போற்றிசெய்த-

தேற்றும், குருபரனைச் சிந்தித் துள்மகிழ்ந்தும்
வீற்றிருக்கும் காலை விளங்குமறை – சாற்றரிய

மந்திரா தீதன்; வயங்கும் பதாதீதன்;
சந்தவன்னா தீதன்; தவாதீதன்; – அந்தம்இலா

தோங்குபுவ னாதீதன்; ஒண்தத்து வாதீதன்;
தாங்குகலா தீதன்; தவத்தோருள் - நீங்கரிய

சுத்தவத்தா தீதன்; துலங்கு சுகாதீதன் ;
மத்தர் உளத்து மனாதீதன் ; — தத்தம்நிலை

சாதித் துரைக்கும் சகலசம யாதீதன்;
கோதற்ற சுத்த குணாதீதன் -- வீதியினில்

துன்னடியார் போற்றத் துகள்தீர் கனகசபை
மன்னன் பவனி வரக்கண்டே, — அன்னநடை

மின்னனையாள் செய்குன்றம் விட்டிழிந்து, மெல்லியலார்
துன்னிப் புடைஎங்கும் சூழ்ந்துவரப் — பொன்ஒளிரும்

மாட மறுகில் மருவிக் குருபரன்தான்
கூடி வணங்கிக் குதுகலித்தே, — நீடும்உடல்

எங்கும் மயிர்ப்புளகம் எய்தியே, கம்பித்துச்
சங்கைஇலாக் காதல்உளம் தாங்கரிதாய்ப் — பொங்கிஎழ,

நாத்தழும்ப, வாய்குழறி, நாணம்மூத லானஎலாம்
நீத்து, நெடிதுயர்ந்த நேயமுடன் — ஏத்தி

விழுந்தாள் பரவசமாய் விம்மிஅயர் வுற்றே;
எழுந்தாள்; உளம்நைந் திரங்கி — அழுங்கியே

வாடினாள்; ஓட்டை மதகில்நீர் ஓடுவபோல்
ஓடஇரு கண்ணீர் ஒழியாதே — நாடிக்

குருபரன்றன் சொற்குறிப்புக் கொண்டுவழு வாது
மருவும் திலதயில மான — தொருவா-

தொழுகவிடும் தாரைஎன உற்றுருகி நிற்ப
வழியும் கருணைமிகு வாரி — பொழியும்இரு

கண்அருளால் நோக்கிஇவள் கனமலமாம் வாதனையை
வெண்ணெய் உருக்குவபோல் வீட்டியே — எண்ணரிய

ஞானஎரி பஞ்சில் நணுகியே பற்றுவபோல்
மானை யனையவிழி மாதுபெற — ஈனம்அறும்

ஒன்றும் இரண்டும்அற ஒன்றிரண்டு தானும்அற
நின்ற நிலையே நிலையாக — ஒன்றியே

இல்லில்எரி பற்ற எழிலார் சயனத்தில்
நல்லரவு கண்டோர் நடுங்கியே — ஒல்லைகடந் -

தோடி அகல்வதுபோல் உற்ற உடலோடும்
நாடித் துறந்தஅவள் நல்லறிவில் — நீடியபேர்

இன்ப அநுபோகம் எய்த (உ)வந்தருளி,
அன்பினொடும் ஏழ்பருவத் தார்எல்லாம் — இன்ப

மயல்கூர மாமறுகில் வாழ்ந்து திளைப்ப
மயல்தீர் மறைவாழ வந்தான் — இயலுடைய

நாகைப் பதிஉறைவோன்; நல்லா கமத்துறைவோன்;
பாகம்உறு மெய்யடியார் பாலுறைவோன்; -ஏகபரன்;

அப்பிர மேயன்; அரியன்; (நல்) ஆனந்தன்;
திப்பியன்; தூயன்; சிவன்;அமலன் — ஒப்பில்

வளங்கொண்ட செப்பறையில் வந்தெனையாட்
கொண்டே
உளங்கொண்டான் போந்தான் உலா.

## (நூற்பயன் வெண்பா)

சீரார் கனகசபைத் தேசிகன் நாகையிலே
ஏரார் பவனிதொழு தேத்துவோர் — தீராத

**பெத்தமலம் மூன்றின் பிணிப்பாம் மயல்அகல**
**அத்துவித இன்பம்அடை வார்.**

நாகைக் கனகசபைநாதன் உலா முற்றும்.



# குறிப்புரை

## காப்பு

பூதலத்தன் ஆகை - நிலஉலகத்தவன் ஆகும் செயல்; அக்கரம் ஆதி அணி ஈறு ஐந்து - எழுத்து முதல் அணி முடிய உள்ள ஐந்து இலக்கணங்கள், அவை யாவன :- எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பன ; ஐந்து என்றது தொகைக் குறிப்புப் பெயர்; உமை பக்கன் - உமாதேவியாரைத் தன் திருமேனியின் இடப்பக்கத்திலே கொண்ட சிவபெருமான் ; ஆனை-யானை முகங்கொண்ட மூத்த பிள்ளையார் ; ஆனை பதம் உலாவிற்கு ஐந்தும் ஆக்கும் என்பது முடிவு ; ஐந்து என்புழி முற்றும்மை தொக்கது ; இது ஏற்புடைக் கடவுள்வாழ்த்து.

## (எண் - கண்ணி எண்)

1-2. பூமீது வீற்றிருக்கும் பொன்-தாமரையில் உள்ள திருமகளை ; மார்பன்-தன்நெஞ்சிலே வைத்-திருக்கும் திருமால் ; கமலை-வெண்டாமரை மலரில் இருக்கும் கலைமகள், கமலம் என்பது நீரில் தோன்றியது எனச்சொற்பொருள் பயந்து பொதுச்சொல்லாயினும் இடம்நோக்கி வெள்ளைத் தாமரை என உரைக்கப் பெற்றது ; வீற்றிருக்கும் என்பது வீற்றிருக்கப்-பெற்றுள்ள என்ற பொருளில் ஆட்சி ; பூ மீதும்-நில உலகத்திலும் ; அந்தரத்தும்-வானிலும்; ஏனம்-பன்றி; அனம் - அன்னப்பறவை ; தந்திரம் - உபாயம்; சிவபெருமான் சோதிப் பிழம்பாக நிற்கத் திருமாலும், பிரமனும் முறையே பன்றியாகவும், அன்னப்புள்ளாக-வும் உருவெடுத்து அடிமுடி தேடிய செய்தி வெளிப்படை;

ஒப்பு :-

" பூமேவும் உந்திப் புயல்வண்ணன் பொற்பமைந்த
நாமேவு மாதுபுணர் நான்முகத்தோன்- தாம்மேவிப்
பன்றியும்அன்னமுமாய்ப் பாரிடந்தும்வான்பறந்தும்
என்றும் அறியா இயல்பினான் "

(நெஞ்சுவிடு தூது 1, 2)

மந்தரத்தை--மந்தர மலையை

3-6. வரிஅரவு–கோடுகளை உடைய வாசுகி என்னும் பாம்பை; நாண்.ஆர்த்து-கடைகயிறாகக் கட்டி; நத்து ஆர் கரன் ஆதி-சங்கை ஏந்திய கையை உடைய திருமால் முதலான ; நாகர்-தேவர் ; மாகத்தும்-விண்ணுலகிலும் ; கபளித்து – விழுங்கி; வண்ணமிகு கந்தரன் - (நீல) நிறத்தைஉடைய கழுத்தைப் பெற்றவன்; அந்தம் இலா–எண்ணற்ற ; நஞ்சதனை நோக்கி, கண்ணருளின், வண்ணமிகு கந்தரன் என்றாக, கபளித்து அமுதளித்தோன் என்பது பொருள்முடிபு; வரலாறு வெளிப்படை.

6-7. பந்தம் அற–இயமனால் வீசப்பெற்ற பாசக்கயறு நீங்கும்படி; சிறுவன் - மார்க்கண்டேயன்; திருக்கடவூரில் இயமனை உதைத்த வரலாறு வெளிப்படை.

7-8. சனகாதியர் - பிரமனின் மக்களாகிய சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர் என்னும் நால்வர்; சிவபெருமான் கல்லாலின்புடை தென்முகக் கடவுளாகத் தோன்றிச் சின்முத்திரையால் சிவ ஞானத்தை உபதேசித்துவீட்டின்பம் அருளினார்;மோன முறை–"வாக்கிறந்த பூரணமாய், மறைக்குப் பாலாய், எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிச் சொல்லாமல் சொன்ன" என்பார் பரஞ்சோதி முனிவர் (திருவிளையாடல்.கடவுள். 14)

சித்தசன் – மன்மதன், (திருமாலின) உள்ளத்தில் உதித்தவன் என்பது சொற்பொருள்; நீறாக–சாம்ப-லாகும்படி; தீ விழித்தோன்– நெற்றியிலுள்ள அனற் கண்ணைத் திறந்தவன்.

*8 – 10.* உத்தி–செல்வம்மிக்க; அலைக்கும்-துன்புறுத்தும்; எறுழ் ஆர்–வலிமை பொருந்திய; புரம் மூன்றும் – முப்புரங்களையும்; நில்லாது – நிலைத்திருக் காமல், அழியும்படி என்பது கருத்து; கல் ஆகும் வில்-மேருமலையாகிய வில்;அரவு நாண்-வாசுகி என்னும் பாம்பாகிய பூட்டுவடம்; மால் அம்பு-திருமால் ஆகிய பாணம்; ஏவாது-(இத்தகைய சிறந்த வில்லும் அம்பும் இருந்தும் அவற்றைப் பயன்படுத்தி) அம்பெய்யாமல்; ஒல்லை–மிகக் குறுகிய நேரத்தில்; நகையால்-சிரிப்பால்; திரிபுரதகனத்திற்குச் சென்றபோது இறைவன் ஏந்திய வில்லைப் பற்றிச் சிவமகாபுராணம்,

''பிரணவம் குதிரை செலுத்துகோல் ஆகப்
பெரியமா மேருவில் ஆக
அரவின்வா சுகிநாண் ஆகிட விந்த
அசலம்வெண் சத்திரம் ஆக
பரவும்மந் தரம்அக் குடைப்பிடி ஆகப்
பாரதி அதன்மணி ஆகக்
கரியமால் ஏஆ கிடமறை நான்கும்
கந்துகம் ஆகஆ கிடவே"

(திரிபுரதகனம் உரைத்த அத்தியாயம் 4) எனக் கூறுகிறது; இறைவன் சிரித்துப் புரமெரித்த வரலாறு வெளிப்படை.

*10–11.* கல்லாத–இறைவனை உள்ளன்போடு நேசிக்கப் பயிலாத, இங்குக் குறிப்பிடப் பெற்றது புத்தகக் கல்வியன்று, எழுத்தறிவே இல்லாத அடியார்கள் இறைவனால் ஆட்கொள்ளப் பெற்றுள்-ளனர்; புல்லறிவோர் – (புலன்களின்வழி ஓடுகின்ற

மனத்தின்பின் செல்லும்) இழிந்த அறிவை உடையோர்;

''நெஞ்சினாலே மாசர்க்குத் தோணொணாதது;
நேசர்க்குப் பேறொணாதது''

என்பது திருப்புகழ்(342)

''நலம்இலன் நண்ணார்க்கு; நண்ணினர்க்கு நல்லன்;
சலம்இலன் பேர்சங் கரன்''

என்பது சாத்திரம் (திருவருட்பயன் 9).

11-12. இறைவனைப் பெரியவன் எனக் கருதும் போது இந்தப் பிரமாண்டம் ஓர் அணுவினைப்போல் சிறியதாகும்; அதே இறைவன் நுண்ணியனாகும்போது ஒப்பிட்டால் ஓர் அணுவே அண்டம்போலப் பெரிதாகத் தோன்றும் என்றவாறு; அதாவது பெருமையிலும் நுண்மையிலும் இறைவனுக்கு இணையே இல்லை என்பது கருத்து.

13. அல்லல் அறுத்தாளல் - அருளல்; சிவபெருமானின் ஐந்தொழில்களைக் காட்டுவதே ஆடல்வல்லான் திருஉருவத் தோற்றம் ஆகும் என்பது சாத்திரம்;

''தோற்றம் துடியதனில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு''

(உண்மை விளக்கம் 35)

14. தாக்கம் இன்றி - சிவபெருமான் ஐந்தொழில் புரிந்தாலும், பசு பாசங்களோடு தொடர்பு கொண்டாலும் அவற்றால் பாதிக்கப்படாதவன்; சிவஞான சித்தியார் இவ்வுண்மையை,

''தவமுதல் யோக போகம்
தரிப்பவன் அல்லன்; தானே
இவைபெற இயைந்து மொன்றும்
இயைந்திடா இயல்பி னானே''

(சுபக்கம் 90)

எனக் காட்டும்.

**15-16** ஒருவி - நீக்கி; இருமை வழி வேதம் - கிரியா பாதம், ஞானபாதம் என இரு பிரிவாக உள்ள நான்மறை.

உயிர்களை (ஆன்மாக்களை) இயல்பாகவே பற்றி நிற்கும் ஆணவமலம் ஏனை மாயை, கன்மங்களால் தேய்ந்து தேய்ந்து க்ஷீணமடையும் நிலையே மலபரிபாகம் ஆகும். மலபரிபாகம் என்பது இருவினை ஒப்பின் பரிசு என்று கொள்ளலாம்.

இருவினை ஒப்பு என்பது நல்வினைப் பயனாகிய இன்பத்தின்மீது நாட்டமும், தீவினைப் பயனாகிய துன்பத்தின்பால் வெறுப்பும் நிகழ்தலாகிய உணர்ச்சி வேறுபாடுகள் இன்றி, இரண்டையும் ஒன்றுபோலக் கருதி, அவையிற்றில் பற்றுக் கொள்ளாது நிற்கும் உளநிலை "......ஒன்றினும் வேண்டலும் இலனே; வெறுத்தலும் இலனே" என்று கோயில் நான்மணி மாலை கூறுவது இந் நன்னிலையினையே.

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"

என்று இதனை வள்ளுவரும் விளக்கி யருளினார்.

வேண்டுதல் வேண்டாமை இல்லா நிலையே கர்மசாம்யம் என்கிற இருவினை ஒப்பு என்று கொள்க.

சத்திநிபாதம் என்பது ஆணவமலம் பரிபாகம் ஆதற்பொருட்டு அதன்பக்கமாய் நின்று உயிர்களை மறைத்துநின்ற மறக்கருணையாகிய திரோதான சத்தி அம்மறத் தன்மை மாறி முன்னை அருட்சத்தியேயாய் ஆன்மாவிடத்தில் பதிகின்ற நிலை. சத்தி என்பது அருள், நிபாதம் என்றால் வீழ்தல் என்று பொருள். "அருட் சத்தி பதிந்த விடத்து உலகச் சூழலில் நின்ற உயிருக்கு ஓர் அவையிடத்தே கல் வந்து வீழ்ந்தாற்போல்வதோர்

அதிர்ச்சி யுண்டாகி, உலக மயக்கத்தினின்றும் நீங்க முயலும் என்பதுபற்றி, 'சத்தி பதிதல்' என்னுது 'சத்தி வீழ்தல் எனக் கூறுகின்றனர்'' –சித்தாந்தத் தெளிவியல், அருணை வடிவேல் முதலியார். (பக். 214)

பக்குவமுற்ற ஆன்மாவை குரு அணைதலே சத்தி நிபாதம். குரு என்பார் சிவகுருவே.

சிவாகமங்கள் முத்தி பெறுவோருக்கே சிறப்-பாக உரியன என்பதை 'வேதநூல் சைவநூல்' என்னும் சித்தித் திருவிருத்தத்தால் (சுபக்கம் 267) அறியலாம். ஏகன்–ஒப்பாரும் மிக்ககாரும் இன்றித் தனித்தவன்.

17. இறைவன் உயிர்களின் பக்குவத்திற்கேற்ப அருளவேண்டி உருவம், அருவம், அருவுருவம் ஆகிய மூவகைத் திருமேனிகளையும் தாங்குகிறார். எந்த ஒன்றையும் இதுமட்டுமே இறைவனுக்குரியது எனக் கூற இயலாது.

''உருமேனி தரித்துக் கொண்ட தென்றலும் உருவி றந்த
அருமேனி யதுவுங் கண்டோம் அருவுரு வான போது
திருமேனி உபயம் பெற்றோம் செப்பிய மூன்றும் நந்தங்
கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே''

என்பது சாத்திரம் (சித்தியார் சுபக்கம் 75); திருவருட் பயன் இதனை,

''அருவும் உருவும் அறிஞர்க்கு அறிவாம்
உருவம் உடையான் உளன்'' (5)

எனக்கூறும். இக் கருத்தை மாதவச் சிவஞான முனிவர்

'' அருமேனி கொண்டும் உருமேனி கொண்டும்
அருள்கூர் இரண்டும் மருவும்
திருமேனி கொண்டும் மலநோய் துரந்து
சிறியேங்கள் உய்யும் முறையால்
கருமேனி நீத்த கருணைப் பெருக்கை
அளவிட்டு யாவர் அறிவார்''

(குளத்தூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி 22)

எனக்கூறுவார்; தெரியா–உயிர்களால் எளிதில் அறிந்து கொள்ள முடியாத.

18. அமலன் - இயல்பாகவே மலங்களினின்று நீங்கியவனாகிய இறைவன், இது அநாதி மல முத்தத்துவம் எனப்படும், இது எண் குணங்களில் ஒன்று, ஏனையவை தன்வயமுடைமை, தூய உடம்பின னாதல், இயற்கை உணர்வினனாதல், முடிவிலாற்ற லுடைமை,வரம்பில் இன்பமுடைமை, பேரருளுடைமை, எல்லாமறிதல் என்பனவாம் ; அபயன்-அச்சம் இல்லாதவன், முற்கூறியபடி முடிவிலாற்ற லுடைமையானும் எல்லா மறிதலானும் அச்சத்திற்கு இடமே இல்லாதவன், அன்றியும் இதற்கு அடைக்கலமாக அடையத்தக்கவன் என உரைத்துப் பேரருளுடைமை யான் இவனே அஞ்சல் எனக் காக்கத்தக்கவன் எனினுமாம்; அபங்கன்-அழிவற்றவன், இனி எந்நிலை யிலும் பின்னப் படாதவன் எனினும் ஒக்கும் ; ஆதி-முழுமுதற்பொருள், திமிரமலம்-இருள் மலமாகிய ஆணவம்; இதனை ஒடுக்குவது இறைவனின் ஆற்றலே என்பதை,

''வாதித்த தேது மலம்ஆமால்; ஆங்கதனைச்
சேதித்தல் ஈசன் திறமாகும்''
(சித்தாந்த சிகாமணி 11)

என்பதால் அறியலாம்

''பலகலைஆ கமவேதம் யாவையினும் கருத்துப்
பதிபசுபா சந்தெரித்தல்; பதிபரமே ; அதுதான்
நிலவும்அரு உருஇன்றிக் குணம்குறிகள் இன்றி
நின்மலமாய் ஏகமாய் நித்த மாகி
அலகில்உயிர்க் குணர்வாகி அசல மாகி
அகண்டிதமாய் ஆனந்த உருவாய் அன்றிச்
செலவரிதாய்ச் செய்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுநற் சிவம்என்பர் தெளிந்து ளோரே ''

என்னும் சிவப்பிரகாசத்தை (13) அடியொற்றிப் பதியிலக்கணம் கூறப்பெற்றது.

19. மன்றுள் — தில்லைச் சிற்றம்பலத்தில்; உமை காண என்பதைச் சிறப்பாக எடுத்துக் கூறியது,

'' பால்உண் குழவி பசுங்குடர் பொறாதென
நோய்உண் மருந்து தாய்உண் டாங்கு
மன்னுயிர்த் தொகுதிக் கின்னருள் கிடைப்ப
வையம்ஈன் றளித்த தெய்வக் கற்பின்
அருள்சூற் கொண்ட ஐயரித் தடங்கண்
திருமாண் சாயல் திருந்திழை காணச்
சிற்சபை பொலியத் திருநடம் புரியும்
அற்புதக் கூத்த''

(சிதம்பர மும்மணிக்கோவை 1;14–21)

என்பதை நினைந்து; விஞ்ஞான கலர் – மும்மலங்களுள் ஆணவம் ஒன்று மட்டும் உள்ளவர்கள், இவர்களுடைய பிணிப்பாகிய மலசக்தி சூக்குமம்; இறைவன் இவர்களின் உள்ளத்தே நின்று மெய்ப் பொருளை உணர்த்தி வீடருளுவன், இந் நிலை நிராதாரம் எனப்படும்; ஒன்று மலம் - வினைத்தொகை ஒன்றும் - ஒன்றை மட்டும், முற்றும்மை.

20. பிரளயாகலர் – ஆணவம், கன்மம் என இரண்டு மலம் உடையவர்கள்; தேவ குருவாகி-'' நாற்றோளும் முக்கண்ணும் கறைமிடறும் முதலிய உறுப்பிற்றாய் முத்தொழில் நடாத்திநின்ற தனதியற்கை வடிவே குருவடிவாகக் காட்டி முன்னின்று உபதேச முகத்தான் உணர்த்துதல்'' (சிவஞானபோத மாபாடியம் சூத். 8 அதி. 2); இவர்களுடைய பிணிப்பாகிய மலசக்தி தூலம்; இவர்க்கு வீடருளும் நிலையும் நிராதாரம் எனப்படும்; மலகன்மம் – உம்மைத்தொகை, மலம் என்பது தலைமைபற்றி ஆணவத்தை உணர்த்துகிறது, இதுவே மூலமலமாதலின்.

21. சகலர்-ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலமும் உடையவர்கள்; இவர்கள் சரியை கிரியை யோகங்களைச் செய்து முற்றிப் பக்குவப் பட்டபோது

இறைவன் மானிடச் சட்டை தாங்கிக் குருவடிவிலே வந்து உபதேசித்து வீடருளுவன்; இவர்களுடைய பிணிப்பாகிய மலசக்தி தூலதரம் ஆகும்; இவர்க்கு வீடருளும் நிலை சாதாரம் எனப்படும். இறைவன் தன் இயற்கை வடிவையொழித்து வேறொரு மனித உருவத்தை ஆதாரமாகக் கொள்ளுதலின் இது இவ்வாறு கூறப்பெறுகிறது.

உயிர்கள் அனைத்தும் மும்மலமுடைய சகலராக இருந்து முதலில் மாயையை ஒழித்துப் பிரளயாகலராகவும், பின்பு கன்மத்தையும் நீத்து விஞ்ஞானாகலராகவும் படிப்படியாக வருவர் எனக் கொள்ளலாகாது; இயல்பாகவே உயிர்கள் ஒருமலமுடையன. இருமலமுடையன, மும்மலமும் உடையன என மூவகைப்படும் என்பதே சித்தாந்த நூற்றுணிபு; இதனை,

''உரைதரும்இப் பசுவர்க்கம் உணரின் மூன்றாம்''
(சித்தியார் 254)

''மூவகைஆ ருயிர்வருக்கம் மலத்தார், கன்ம
மூலமலத் தார்,மூன்றும் உடையார் என்றே''
(சிவப்பிரகாசம் 8)

என்பனவற்றால் அறியலாம். விப்ரர்—அறிஞர்.

22. திருவெண்ணெய்-திருவெண்ணெய்நல்லூர் சிவஞானபோதத்தை அருளிய மெய்கண்ட தேவ நாயனார் அவதரித்த ஊர்; சந்ததி – மரபு, இது மெய்கண்ட சந்தானம் எனவும் வழங்கும்; உபதேச பரம்பரையாகவும் சில சமயங்களில் தந்தை தனயன் என்றும் இம் மரபு வழங்கும். செப்பறைக் கனகசபை நாதர் மெய்கண்ட சந்தானமாவது பின்வருமாறு ; மெய்கண்டாரின் மாணவர் அருள்நந்தி சிவாசாரியார் ; இவர் மாணவர் கடந்தை மறைஞானசம்பந்தர்; இவருடைய சீடர் மச்சுச் செட்டியார் என்னும் அருள்நமச்சிவாயர்; இவரிடம் உபதேசம் பெற்றவர்

திருவையாறு சந்திரசேகரர்; இவர் மாணவர் சாமிநாத தேசிகர்; இவருடைய சீடராகிய பொன்னம்பல தேசிகரே செப்பறை ஆதீன முதல்வர்; இவரிடம் உபதேசம் பெற்றவர் கனகசபைநாதன். இவரே இவ் வுலாவின் பாட்டுடைத் தலைவர். இவர் காலம் ஏறத்தாழ கி. பி. 1600 ஆகலாம்.

23. இங்கு கூறப்பெற்றவர்களுள் பொன்னம்பல தேசிகரும் கனகசபைநாதரும் நாகப்பட்டினத்தைச் சேர்ந்தவர்கள்; இவ் வூரே இந்த உலாவில் நாகை எனக் குறிக்கப்படுகிறது.

24. ஞான அபிடேகம்-ஆதீனத் தலைவராக நியமித்துத் திருமுழுக்காட்டுதல்; இவ் வுலாத்தலைவர் செப்பறை மடத்தின் இரண்டாம் பீடாதிபதியாகிறார்; முதல்வராகிய பொன்னம்பல தேசிகரே இவருக்குத் தலைமைப் பீடம் வழங்கினார் என்பது இதனால் அறியப்படுகிறது. பூ நிலவ-நிலவுலகத்தில் நிலைத்துச் செழிக்க.

25. ஏர் அணவு—அழகு பொருந்திய.

26. கரந்து—மறைத்து; அக்க மாலை-உருத்திராக்க மாலை; துங்க முடி—உயர்ந்த தலை.

27. விரை நானம்—நறுமணமிக்க கத்தூரி; குழை—காதணி.

28. குழையின் – தோட்டைப்போல, இன் உவம உருபு, ஆடகச் சோதி-பொன்னின் ஒளி; அக்கமணியும் ஆடகச் சோதியும் என ஈரிடங்களிலும் எண்ணும்மை விரிக்க; சட்குண்டலம் – திருமடத்தின் தலைவர்கள் அணியும் ஒருவகைக் காதணி, ஆறுகட்டி எனப்படும்; களத்து – கழுத்தில்.

29. விதி சிரங்கள் – பிரமர்களின் மண்டை யோட்டினாலாகிய மாலை; கண்டசரம்-கழுத்தணி; அண்ணவே – பொருந்த; சக்கரக்கை — சுதரிசனத்தை ஏந்தும் கரங்களை உடைய.

30. ஒளிகாலும் தரளம் என மாறுக; சுடர் எரிக்கும் முத்து மாலையும் என எண்ணும்மை விரிக்க; ஏல நிரை-பொருந்திய வரிசையான.

31. நூல்-பூணூல். இப்பாட்டுடைத் தலைவர் அந்தண மரபைச் சேர்ந்த இல்லறத்தார் என்பது இதனால் விளங்குகிறது; ஆலும் - ஒலிக்கின்ற; டமருகம் - உடுக்கை; அடக்கி - வெளியே தெரியாமற் செய்து ;

32. சிவஞானச் சின்னம் — சின்முத்திரை, கைப்பெருவிரலும் ஆட்காட்டிவிரலும் ஒன்றுடன்ஒன்று பொருந்தி நிற்க மற்ற மூன்று விரல்களும் நீட்டிய நிலையில் தனித்திருப்பது சின்முத்திரை அல்லது ஞான முத்திரை எனப்படும், பெருவிரல் சிவபெருமானையும் ஆட்காட்டி விரல் உயிரையும் மற்ற மூன்று விரல்களும் மும்மலங்களையும் குறிக்கும், இயல்பாக மலங்களோடு கூடியிருக்கும் உயிர் அவற்றைவிட்டுப் பிரிந்து, இறை வனோடு பொருந்துதலே முத்தி என்பது இம்முத்திரை யால் உணர்த்தப்படும் பொருளாகும் ; அங்குட்டம் — கைப்பெருவிரல் ; சிவமாலை — உருத்திராக்கத்தாலான செபமாலை, இதனைப் பெருவிரலுக்கும் ஆட்காட்டி விரலுக்கும் இடையே சுழற்றி எண்ணுதல் மரபு

33. அம்பொன் பவித்திரம் பவித்திர முடிச்சாகச் செய்த மோதிரம், வைதிகச் சடங்குகளைச் செய்யும் போது தருப்பைப் புல்லை ஒருவிதமாக முடிந்து மோதிர விரலில் அணிந்து கொள்வர், அது பவித்திரம் எனப்படும். பிரேத காரியங்களுக்கு ஒரு தருப்பையும், தெய்வ காரியங்களுக்கு இரண்டு தருப்பையும், பிதுரு காரியங்களுக்கு மூன்று தருப்பையும், ரிஷி காரியங்-களுக்கு நான்கு தருப்பையும் பவித்திரம் செய்யப் பயன்படுத்தப்படும். இது கோவில் திருவிழாக்களில் காப்பு நாண் கட்டுவதைப் போன்றது, நாடோறும்

ஆலயப்பணியில் இருப்போர் பொன்னால் செய்த பவித்திர மோதிரத்தை அணிந்திருத்தல் மரபு ; ஆழி விரல் – மோதிர விரல், சுண்டு விரலுக்கு அடுத்த விரல்; புலித்தோல் கச்சும் அரவின் வீக்கும் என எண்ணும்மை விரிக்க ; வீக்கு–கட்டு; இவை சிவபிரான் அணிபவை ; கம்பி-சரிகை.

34. படி அளந்தோன்–உலகளந்தவன், திருமால்; கண் என்புழி எண்ணும்மை விரிக்க; திருமால் இறைவனை ஆயிரம் தாமரை மலர்களைக்கொண்டு பூசிக்கும்பொழுது ஒன்று குறையத் தன் கண்ணைப் பிடுங்கிப் பூசித்தார், இதனால் மகிழ்ந்த இறைவன் இவருக்குச் சக்கரப்படையை வழங்கினார் என்பது வரலாறு,

''தடமலர் ஆயிரங்கள் குறைவொன்ற தாக
நிறைவென்று தன்கண் அதனால்
உடன்வழி பாடுசெய்த திருமாலை எந்தை
பெருமான்உ கந்து மிகவும்
சுடரடி யான்முயன்று சுழல்வித்த ரக்கன்
இதயம்பி ளந்த கொடுமை
அடல்வலி ஆழிஆழி யவனுக் களித்த
அவன்ஆம் நமக்கொர் சரணே''
(தேவாரம் 4–14–10);

தட்டாது–பார்ப்பவர்களின் கண்களுக்குத்தெரியாமல்.

35. புண்டரம்–கோடு, திருநீற்றை மூன்று பட்டையாக அணிதலைக் குறித்தது, திரிபுண்டரம் என்பது வழக்கு; நறும் ஆரச் சாந்து என மாறுக, மணமிக்க சந்தனக் குழம்பு; வேரி–தேன் நிறைந்த.

36 விரை–நறுமணமுள்ள; மிலைந்து–சூடிக் கொண்டு; மருமலர் நல் சீ பாதம்–வாசனைமிக்க தாமரைமலரைப் போன்ற நல்ல திருவடிகள்.

37 சீபாதம் தாங்குவோர்-சிவிகை சுமப்பவர்; சிவிகை—பல்லக்கு; பூபாலர் – மன்னர்கள்; மாபூதி-பெருஞ்செல்வமாகிய திருநீறு. '' நன்காய் ஈட்டும் திரவியங்கள் தூளம் தருபால் வெண்ணீறும் உலகுக்குயிராம் தோயமுமே'' (பிரமோத்தர காண்டம் 16-32)

38. கான் நிலவும்-வாசனை வீசும்; ஆலவட்டக் கால்—விசிறியால் வருகின்ற காற்று, மூன்றன் தொகை, வெட்டிவேர், விலாமிச்சைவேர் முதலியவற்றாற் செய்யப்பெற்றதாதலின் விசிறி மணத்தைப் பரப்புகிறது; மேல் நிலவு-உயரத்தே விளங்குகின்ற.

41. மாணிக்கவாசகம் – மாணிக்கவாசகரால் அருளப்பெற்ற திருவாசகம் ; கரைந்திசைப்ப,

''திருவா சகம்இங் கொருகால் ஓதில்
கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்துநீர்பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அன்பர் ஆகுந ரன்றி
மன்பதை உலகில் மற்றையர் இலரே''
(நால்வர் நான்மணி மாலை 4:8–13)

என்பதனை நினைந்து கூறியது.

42. பல்லாண்டு - திருப்பல்லாண்டு, சேந்தனாரால் அருளிச்செய்யப்பெற்று ஒன்பதாந் திருமுறையில் சேர்க்கப் பெற்றுள்ளது.

43. பாற்கரன் — சூரியன், அடியார்களின் திருநீற்றின் ஒளிக்கு எதிரே கதிரவன் ஒளிமங்கிச் சந்திரனைப்போலக் காட்சிதருகிறான் என்றபடி.

44. உம்பர் எங்கும் மறைத்து வயங்க என இயையும், தேவர்கள் எல்லா இடங்களிலும் தங்களை மறைத்துக்கொண்டு திரிய, வரத்து ஒழுகும்-மேன்மையோடு விளங்கும்.

45. ஆறுசமயம் — பாடாணவாத சைவம், பேதவாத சைவம், சிவசமவாத சைவம், சிவசங்கிராந்த வாத சைவம், ஈசுர அவிகாரவாத சைவம், சிவாத்து-வைத சைவம் என்னும் அகச் சமயங்கள் ஆறு; இவ்வாறன்றிச் சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், பைரவம் என்றோ அல்லது இக்காலத்தே பெருவழக்கிலுள்ளபடி சௌரம், சைவம், சாக்தேயம், வைணவம், காணாபத்தியம், கௌமாரம் எனவோ கொள்ளலாகாதோ எனின் இவ் வுலா மெய்கண்ட சந்தானத்துச் சைவசித்தாந்த நூலாதலின் அங்குக் கூறப்படும் அகச்சமயங்களைக் கொள்ளலே முறை என்க.

46–48. சின்னம், காகளம், சங்கு, இடக்கை, வயிர், ஆகுளம், மொந்தை, பேரி, படலிகை, தண்ணுமை, பண், பதலை, தட்டை, படகம், சல்லரி-இசைக்கருவி வகைகள்.

49. உம்பர் — ஆகாயம்.

50. கதலி யூகம்-வாழை மரம், யூகம் மரப் பெயராதலை,

" தாருநகம் சாகிகுசம் தாபரம்யூ கம்துருமம்
பூருகம்த ருச்சாலம் பொங்கடவி - சேரகலி
யம்பாத வம்விருக்கம் அத்திரிம ரப்பொது"
(நாமதீப நிகண்டு 364)

என்பதால் அறியலாம் பூகம்-கமுகு; பொற்குடம்-பூரண கும்பம்; நாகம்-ஆகாயம்.

51 நலங்கொள்மலர்—இவ்விடத்தே இது கனிச்சீர் அன்று, கருவிளங்காயாகவே கொள்ளப்படும்; கொள்ம—நிரையசை; இரு எழுத்துக்களுக்கிடையே ண, ய, ர, ல, ழ, ள, ன போன்ற ஒலி அழுத்தமற்ற மெய் யெழுத்துக்கள் நின்றால் சில சமயங்களில் இடைநின்ற இம் மெய்களைக் கருதாது இரண்டு எழுத்துக்கள்

இணைந்த நிரையசையாகக் கொள்ளப்படும்; இதற்கு இலக்கண விதி,

> 'செய்கை தர்மம் கல்வி தன்மை
> பொன்வில் எனும்இவை போன்றநேர் நேரும்
> **நிற்கும் இடத்தால்** நிரைஎனப் படுமே'
>
> (அறுவகை இலக்கணம் 239)

என்பதாம்; இந் நுட்பமறியாதார் தாம் பதிப்பிக்கும் நூல்களில் இத்தகைய சீர்களுக்குக் கீழே கனிச்சீர், நால-சைச்சீர் எனக் காட்டி நூலாசிரியரை இழிவுபடுத்துவர்; அது முறையாகாது; நாற்றி-தொங்கவிட்டு.

எட்டாத தன்மையான் (2), அமுதளித்தோன் (6) பாதம் உடையோன் (7), தீவிழித்தோன் (8), எரியை ஊட்டினோன் (10), காட்சி நயந்தருள்வோன் (11), அமர்ந்தருள்வோன் (12), விளங்குவோன் (14), அருளி னோன் (16), பெரியோன்(17), அமலன், அபயன், அபங்கன்,ஆதி,தீரன் (18), நடம்புரிவோன்(19),(ஆகிய சிவபெருமான்) விஞ்ஞானகலர் மலம் நின்றறுத்து (19) பிரளயாகலர்க்கு மலகன்மம் வீட்டியே (20), சகலர் மும்மலமும் மாற்ற அவர்போலும் உருவுகொடு (21), ஞானஅபிடேகம் கொண்டருளி (24), நாமம் கனகசபை நாதன் எனத் தரித்தருளி (25), அக்க மாலையினைச் சூடியே (26), திலகம் அணிந்தே (27), சட்குண்டலம் அணிந்தே (28), கண்டசரம் அண்ணவே (29), வயங்க அணிந்து (31), ஓர் கரத்தில் சேர்த்தே (32), விரல் அணிந்து (33), பட்டாடை சாத்தி (34), வீரக்கழல் புனைந்து, சாந்தும் அணிந்தருளி (35), மாலை மிலைந்து (36), சிவிகை புகுந்தேறி(37), அடியார் சூழ, சாமரை இரட்ட, ஆலவட்டக் கால் வீச (38), குடை-கவிப்ப (39), தேவாரம் ஏத்தெடுப்ப (40), மாணிக்க வாசகத்தைக் கரைந்திசைப்ப (41), திருவிசைப்பா பல்லாண்டின் துதித்து வர (42), பாற்கரன் வெண்மதி யாய்த் தோற்ற (43), உம்பர் எங்கும் வயங்க, மறை யோர் மருவ (44) ஆறு சமயத்தோரும் இசைப்ப(45)

அகிலத்தோர் அணைய, முரசம் முழங்க (46), சின்னம் ........ சல்லரி ஒலி ஓங்க (46—49), பொன்மாட வீதியினில் போதுதலும் என்பது இதுவரை நடந்து முடிந்த பொருள் முடிபு.

52–53. பொற்பு அமைந்த – அழகுடைய ; சத்திபாதர்–சத்திநிபாதம் பெற்றவர், 16 ஆம் கண்ணி உரை காண்க; இவர்நிலை மந்தர், மந்ததரர், தீவிரர், தீவிரதரர் என நால்வகைப்படும் ; இதனை முறையே மிகக் குறைந்த நிலை, குறைந்த நிலை, அதிகமான நிலை, மிக அதிகமான நிலை எனலாம்; இவற்றின் விரிவை, 'உரைதரும்இப் பசுவர்க்கம்' எனத்தொடங்கும் சிவஞான சித்தியாரின் 254ஆம் பாடல் விரிவுரைகளில் காணலாம்.

உலா நூல்களில் மகளிரின் வயதைக் கொண்டு பேதைமுதல் பேரிளம்பெண்ஈறாக ஏழு பிரிவாகப் பிரிப்பது மரபு. இவ் வுலா வாய்ப்பாடளவில் அதனை மேற்கொண்டு சகலர்களில் மந்த சத்திநிபாதர், மந்ததரர், தீவிரர், தீவிரதரர், மாதீவிரத்தில் மந்ததரர், மாதீவிரத்தில் தீவிரர், மாதீவிரத்தில் மாதீவிரதரர், என ஏழுவகையான பிரிவினரைக் கூறுகிறது. பரம் பொருள் ஒருவனே ஆடவன்; பசுவர்க்கம் அனைத்தும் அவனைச் சென்றணைய வேண்டிய மகடூஉக் குணம் கொண்டதே என்பது பல சமயத்தாரும் ஒப்பமுடிந்த ஒன்றே.

55. குருச் சிவிகை – பெருமை உடையவர்கள் ஊர்ந்துசெல்லும் பல்லக்கு, ஏறிச் செல்பவர்களின் பெருமை ஊர்திக்கு ஏற்றப்பட்டது, உபசார வழக்கு.

56. போதாந்தம் – போத அந்தம், ஞானத்தின் எல்லை, வடமொழி தீர்க்க சந்தி ; பொருப்பன்- மலையை உடையவன் ; மலை தசாங்கத்துள் ஒன்று ; ஒரு தலைவனுக்குரிய பத்து உறுப்புகள் தசாங்கம்

எனப்படும்; அவை,

"மலையே யாறே நாடே ஊரே
பறையே பரியே களிறே தாரே
பெயரே கொடியே என்றிவை தசாங்கம்"
(பன்னிரு பாட்டியல் இனம்-56)

வெண்பாப் பாட்டியல் இவற்றுள் பெயரை நீக்கிச் செங்கோலைக் கூறும்; தசாங்கம் பற்றிய பாட்டியற் செய்திகளை அறுவகை இலக்கணம் 600ஆம் நூற்பா உரையிற் காண்க; ஆதாரம் ஆறு-மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை; இவற்றின் விளக்கத்தை விரிவான யோக நூல்களிற் காண்க.

57. பேரின்ப ஆறு—"ஆனந்தம் என்பதோர் ஆறுடையான்"(நெஞ்சுவிடு தூது 57)என்னும் உமாபதி சிவம் இதனை மிகச் சிறப்பாக முற்றுருவக மாக்கும் அழகை அங்கே காண்க (கண்ணி 40—57); நாதம்-சிவ தத்துவம், இறைவன் சத்தியோடு அதில் உறைதலை,

"மண்முதல் நாளம்மலர் வித்தை கலாரூபம்
எண்ணிய ஈசர் சதாசிவமும் — நண்ணில்
கல்லையுருவாம் நாதமாம் சத்தியதன் கண்ணா
நிலையதிலாம் அச்சிவன்தாள் நேர்"

(சிவஞான போதம்—ஒன்பதாம் சூத்திரம்—மூன்றாம் அதிகரணம்-உதாரணம் 3) என்பதால் அறியலாம்.

58, ஊரன்-ஊருக்குத் தலைவன்; "சிவஞான மோனத்தால் ஒட்டற்று வீற்றிருக்கும் ஊருடையான்" என்பார் உமாபதிசிவம் (நெஞ்சுவிடு தூது 60); புரையில்-குற்றமற்ற; வரம்-மேன்மை

59. மேதக்கோர் உள்கவரும் மெய்த்தாரன்-
''.........நாட்டத்தால்
தெண்ணீர் அருவிவிழச் சிந்தைமயக் கந்தெளிந்
துண்ணீர்மை எய்த உரோமமெலாம்-நண்ணும்
புளகம் புனைமெய்யர் பொய்யிற்கூ டாமல்
உளகம்பங் கொண்டுள் உருகி-அளவிலா
மாலாய் இருக்கு மவர்மனத்தை வாங்கஅருள்
மேலாய் விலங்கலங்கல் மெய்யினான்''
(நெஞ்சுவிடு தூது 60—63);
பேதித்து உரைகள் பெருகாது அதீதத்து; அதீதம்-மனம், மொழி மெய்களைக் கடந்த நிலை.

60. மணி மா-அழகிய குதிரை; அவாவின்மை-ஆசையற்ற நிலை; கயம்-யானை.

61. நித்தன்-எப்போதும் உள்ளவன், அழிவற்றவன்; நிமல அருள்-மாசற்ற தூயதிருவருள்; முத்தித் துவசம்-வீட்டின்பமாகிய கொடி, இதனை உமாபதி சிவம், ''இருமுச் சமயம் கடந்து தனக்கொப்பி லாது சுமைதுன்பம் நீக்கும் துவசன்'' (நெஞ்சுவிடு தூது 74) என்பார்.

62. சுத்த ஒலி நாதம்-இது சிவதத்துவம், இலயதத்துவம், நிட்கள தத்துவம், சக்திமான் என வழங்கப்படும் ; நான்கு விதமான வாக்குகளில் சூக்கு-மைக்குப் பற்றுக்கோடு இது; இதன் விரிவைச் சிவஞான போத மாபாடியம் 2 ஆம் சூத்திரம் 2 ஆம் அதிகரணத்துள் காண்க;இந் நாததத்துவமே முரசாக உருவகிக்கப் படுகிறது; ஓதம் - அலைகள்.

63. சிவஞானமே செங்கோலாம் ; புங்கவன்-உயர்வுடையோன்.

64. எல்லா வடிவும்-ஓர் உபதேச பரம்பரையில் வருபவர்களை ஆதி குருவாகவே கருதுதல் சமய உலக மரபு ; மெய்கண்டார் முதல் இவர்வரையான குருமரபு 22 ஆம் கண்ணி உரையில் காட்டப்பெற்றது; முனம் ஒல்லை வந்து என மாறுக ; ஒல்லை – விரைவில் ; இறைவன் மணிவாசகரை விரைவில் ஆட்கொண்டமை:

''அத்தகு தொண்டர்க் கெல்லாம்
அதிபராம் அவரை நோக்கி
இத்தவம் உடையோன் எய்தும்
இடர்ஒழித் தாள்வ திந்நாள் ;
வித்தக ! இதற்கு வேண்டும்
கருமம்நீ விரைவில் செய்கென்று
உத்தம வடிவம் காட்டும்
உண்மையார் உரைத்தல் செய்தார்''.

(திருவாதவூரடிகள் புராணம் 90)

65. சுந்தரன் – சுந்தரமூர்த்தி நாயனார்.

66. இறைவன் முதுமறையோனாக வந்து சுந்தரரின் திருமணத்தைத் தடுத்து வல்வழக்கிட்ட வரலாறு வெளிப்படை ; முந்தை – மிகப் பழங்காலத்தே தோன்றிய.

68 அஞ்செழுத்து – ஸ்ரீபஞ்சாட்சரம் ; மேதினி – உலகம் ; குருநாதபரன் - குருநாதனாகிய பரம்பொருள், இருபெயரொட்டு; மண்ணில்-நிலஉலகில்.

69. இரவி – சூரியன் ; புன்சமய – இழிந்த நெறிகள் ஆகிய.

70. பரிபாலன்-காக்கின்றவன்; ஓர்ஒருகால்-சிற்சில சமயங்களில்.

71. பொறிகள்-கண் முதலிய அறிகருவிகள்.

72. எண்கழி கண்-எண்களை நீத்த கண்கள் அளவற்ற; ஒப்பு:

தண்ணார் புனல்தில்லைச் சிற்றம்
பலந்தன்னில் மன்னிநின்ற
விண்ணாள னைக்கண்ட நாள்விருப்
பாய்என் உடல்முழுதும்
கண்ணாங் கிலோதொழக் கையாங்
கிலோ திரு நாமங்கள் கற்
றெண்ணாம் பரிசெங்ஙும் வாயாங்கி
லோஎனக் கிப்பிறப்பே.

(கோயில் திருப்பண்ணியர் விருத்தம் 12)

73. மால் அளவு காணா-திருமாலால் எல்லை அறியப்படமுடியாத; மால்அளவு காணார் மயங்குவார்-ஆசையின் எல்லையை அறியாராகித் திகைப்பர், பேராசை கொள்வர் என்றபடி; காணார்-வினைமுற்றே எச்சமாக வந்தது,

குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்நெல்
முகந்தனர் கொடுப்ப உகந்தனர் பெயரும்
(புறநானூறு 33:5, 6)

என்புழிப் போல; தோல்-புலித் தோலாலான உடை. மால்அளவு காணா என்னும் சொற்றொடர் எதுகையில் இருமுறை பயின்று வந்தது மடக்கணி.

74. மருங்குல்-இடுப்பு; தமதிடைசூழ் மாயைக் கலை-சிலேடை; 1. தம் இடுப்பைச் சூழ்ந்திருக்கும் அழகிய உடை, இப் பொருளில் மாயை என்புழி ஐகாரம் அகரத்திற்குப் போலி. மாயம்-அழகு; 2. தம்பாற் பொருந்திய பொய்யான கல்வியறிவு, நிலையற்றதனை நிலையானதெனக் கருதி மயங்க வைக்கும் உலகியலறிவு,

"அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லாது
உலகுநூல் ஓதுவ தெல்லாம் - கலகல
கூஉம் துணைஅல்லால் கொண்டு தடுமாற்றம்
போஒம் துணைஅறிவார் இல்"
(நாலடியார் 140)

"சிறியனேன் பசுஞானக் கூனை நீக்கிவந் தாண்டிட யான்முனம் குயிற்றிய தவம் என்னே" (இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி 78) என்பார் சிவஞான முனிவர்; குருநாதரின் தரிசன மாத்திரத்தால் பாசஞான, பசு ஞானங்கள் நீங்குகின்றன என்றபடி; இது பதிஞானம் பெறுதற்கான தொடக்கமாம்; தன்னால் காதலிக்கப் பட்டவனைக் கண்டஉடனே காமமிகுதியால் காதலிக்கு உடை நெகிழ்வதைப்போலக் குருவின் தரிசனத்தால் பக்குவ ஆன்மாக்களுக்குப் பாச பசுஞானம் நெகிழ்ந்து விடப் பதிஞான நாட்டம் உண்டாகிறது என்பது கருத்து; குருநாதர் கருணையோடு எதிர்நோக்கு நோக்கிய உடனே ஞானம் கிடைக்கிறது; விட்டு என்பு- திருமாலின் எலும்புகள், விண்டு எனற்பாலது எதுகை நோக்கி வலித்தல் விகாரம் பெற்றது.

75. மணி உரம்-அழகிய மார்பு, ஐம்பால் வினைமாலை என மாறுக, 1. ஐம்பால் வினைமாலை- ஐந்தாகப் பகுத்துப் பின்னப்பெற்ற கூந்தலில் அணியப் பெற்ற அழகிய கைவேலைப்பாடுள்ள மலர்ச்சரம். 2. ஐந்து புலன்களால் தோன்றுகின்ற இரு வினைக ளாகிய நோய்; நல்வினை தீவினை இரண்டும் பிறவிக்குக் காரணம் ஆதலின் நோய் என்றே கருதப்படும். பிறவிக்குக் கூறப்படும் நோய் என்னும் உவமை இங்குக் காரணமாகிய வினைகளுக்குக் கூறப்பெற்றது. வினை களே பிறவிக்குக் காரணமாவதைச் சிவஞான சித்தியார் இவ்வாறு விளக்கும்.

''உடற்செயல் கன்மம்: இந்த
உடல்வந்த வாறே தென்னின்
விடப்படு முன்உ டம்பின்
வினைஇந்த உடல்வி ளைக்கும் ;
தொடர்ச்சியால் ஒன்றுக் கொன்று
தொன்றுதொட் டனாதி வித்தின்
இடத்தினில் மரம்ம ரத்தில்
வித்தும்வந் தியையு மாபோல்'' (100)

ஐம்பால்—ஏழன் உருபேற்ற தொகைக் குறிப்புப் பெயர். காணார்—எச்சம்.

76. களம்—கழுத்து ; கணிப்பில்-கணக்கற்ற ; மாமாயை பொருந்துவளை— 1. மிகுந்த வஞ்சனையை உடைய கைவளையல்கள், விரும்பி அணிந்தோரை விட்டகல்தலின் வஞ்சனை யுடையதாயிற்று, இனி எப்போது எப்படி அகன்றது என அறிய வியலாமல் மாயாசாலம் போல் அகன்றன எனினும் ஆம் ; 2. பெரிய மாயாமலமாகப் பொருந்துகின்ற, களங்கம்; மாயாமலம் சம்பந்தமலம் எனப்படுதலின் பொருந்துகின்ற களங்கம் என்றார் ; காணார்—எச்சம் ; கழுத்தில் உள்ள களங்கமாகிய ஆலகாலத்தை மறைத்துள்ள வடிவத்தைப் பார்த்தவர்கள் தம் உயிரின் களங்கமாகிய மாயையைப் பாரார் (மறைக்கப்பெறுவர்) என்றது நயம்.

73-76 ஆம் கண்ணிகளில் காண்பார் காணார், பார்த்தார் பாரார் எனப் பயின்றது முரண்தொடை; இவற்றில் வந்துள்ள சிலேடை மேலே காட்டப் பெற்றன.

76. அபயம்—அஞ்சேல் என அருட்குறி தாங்கும் கை; அனல் – தீ; துடி—உடுக்கை ; உபயகரம்—இரண்டு கைகள்; சுபம்-மங்கலமாகிய சிவம்; சுப ஞானம்-சிவஞானம்.

77. போதம்-ஞானம், இங்கு சின்முத்திரை, 32ஆம் கண்ணி உரை காண்க; ஏதம் அற-அறியாமை யாகிய தீமை அழியுமாறு; இகல்-உயிருக்கு இயல்பாகவே பகையாக உள்ள மூலமலம், ஆணவம், "வாதித்த தேது மலம்ஆமால்" என்பது சித்தாந்த சிகாமணி(11); காண்பார்—பயனிலை; காண்பார் காணார் முரண்-தொடை.

79. சட்குண்டலம் — ஆறுகட்டி என்னும் காதணி; தங்கு அ மல வம்பு—நிலைத்துத் தங்கியுள்ள அந்த ஆணவத்தால் விளையும் தீமை; ஆணவம் உயிரைப் போன்றே உள்பொருளாதலானும், அரிசி யோடு பொருந்திய தவிட்டினைப் போலக் கூடவே பொருந்தியிருப்பதாலும் தங்குமலம் என்றார், வினைத் தொகை;

"அன்றளவி உள்ளொளியொ டாவி யிடைஅடங்கி
இன்றளவும் நின்ற திருள்" (திருவருட்பயன் 24)

என்பது சாத்திரம்; அ-நெஞ்சறி சுட்டு; மல வம்பு-மூன்றன்தொகை. காண்பார் காணார் முன் கூறப் பெற்றவாறே.

80. அங்கிச் சிகை – தீக்கொழுந்து, இங்கே நுதற்கண்; நானம்-கத்தூரி; தக நிறுத்தும் மாசு-தன் பயனுக்கேற்றபடிப் பலவிதமான பிறவிகளைத் தந்து அதற்கேற்பப் புசிப்புக்களை உண்டாக்குகின்ற மலமாகிய கன்மம்.

81. கண்ணப்பர்–திருக்காளத்திக் கண்ணப்ப நாயனார், இவர் வரலாறு வெளிப்படை; ஏர் – அழகு.

82. திமிரமலம்–இருள்மலம், ஆணவம்; இதன் தன்மை

"பலரைப் புணர்ந்தும்இருட் பாவைக்குண் டென்றும்
கணவற்குந் தோன்றாத கற்பு" (திருவருட்பயன்25)

என்பதால் அறியப்படும்; திசைமுகன் – நான்கு தலைகளைஉடைய பிரமன்; அமலமுடி - தூய்மைமிக்க தலை; காண்பார் – வினையாலணையும் பெயர், எழுவாய்; அயர்வார்- (தமக்குக் கிடைத்த பெறுதற்கரிய பேற்றினை நினைத்து) மயங்குவர்.

83. நாட்டம் - கண்; நாகர் – தேவர்கள், இவர்கள் கண் இமைக்கமாட்டார்கள்; கீழ்ப்பிலம்- கீழே உள்ள பாதாளம், எதுகை நோக்கி ழகரம் டகரமாகத் திரிந்தது; நாகர் கிளை – பாம்பின் இனம்; வேட்கை - விருப்பம், இங்கே இறையன்பாகிய பகதி.

84. "கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்" (திருவாசகம் 218); கண்முத்து– கண்ணீர்த்துளி; நீர் - அன்பு; திண் உற்ற-வலிமைமிக்க.

85. நெடிதுயிர்ப்பார்-பெருமூச்சு விடுவர்; எஞ்சல் இலா-குறைவற்ற.

86. ஆணவ நல் ஏண்-மூலமலத்தின் சிறந்த வலிமை, உயிர்க்குத் தீமை செய்கின்றதெனினும் ஆணவத்தின் வலிமை எளிதில் அடக்க முடியாதபடி மிக வலிமை வாய்ந்ததாதலின் நல் ஏண் என்றார். அவனுக்கு நல்ல காய்ச்சல் என்பதைப் போன்ற ஆட்சி; இதன் தன்மை,

"ஒருபொருளும் காட்டா திருள்உருவம் காட்டும்;
இருபொருளும் காட்டா திது" (திருவருட்பயன் 23)

என விளக்கப்படும்,

87. மையல் தொலை — என் மயக்கத்தைப் போக்கு.

88. தம் ஆசைக்கடலுள்-இடைநிலைத் தீபகமாக ஆழ்வார், அலைந்தெழுவார் என இரண்டுடனும் பொருந்தும், தாப்பிசைப் பொருள்கோள்; கூசற்று- (பெண்களுக்கு இயல்பாக இருக்க வேண்டிய பயிர்ப்பு என்னும்) கூச்சம் இல்லாமல்.

**90.** சொல் இழந்து என வாக்கு, உள்ளச்செயல் என மனம், சித்திரம் போல் நின்று அசையார் எனக் காயம் ஆக மூன்று கரணங்களின் செயலற்ற நிலையும் கூறப்பெற்றது; நின்றசையார்—அசையாராக, எச்சம் திகைத்திருப்பார் என்னும் முற்றைக்கொண்டு முடிந்தது; சுத்தன்-தூயன், இறைவன்.

குருநாதரைக் கண்ட அடியார்களின் மெய்ப்பாடுகளை மகாவித்வான் அவர்கள் இவ்வாறு காட்டுவார்:

''அழுவார் அயர்ந்து விழுவார்நின்
றாடிப் பாடி அரனென்று
தொழுவார் துதிப்பார் பெருங்கருணை
சுரக்கு மாறு நினதடியார்
உழுவார் செறியும் கோமுத்தி
ஒருவா அருள்அம் பலவாணா
வழுவார் கடையேன் நின்எதிர்எவ்
வலிகொண் டடையக் கடவேனே?''

(அம்பலவாண தேசிகர் கலம்பகம் 29)

**91—92.** நீடி எங்கும் ஆரும் பரிபூரணம்-பார்க்கும் இடம் எங்கணும் ஒரு நீக்கமற நிறைந்திருக்கும் பரத்வம்; "எங்கும் நிறைந்த நீ அத்தன்மை மாறாமல் ஒரு மானிடச்சட்டை தாங்கிக் குருவடிவில் எழுந்தருளியது எவ்வாறு'' என்று வியக்கின்றனர்; சிவபெருமான் சகலரின் மலத்தை அடக்கி ஆட்கொள்ள மானிடச்சட்டை தாங்கி வருகிறார்; அக் குருநாதர் சீவபோதம் இன்றிச் சிவபோதத்தில் நிற்பவராதலின் அவருடைய பிறவியும் வாழ்க்கையும் மற்றவர்களுடையனவற்றைப் போன்றனஆகா; இருவினை வயப்பட்ட பிற உயிர்களைப் போலக் குருநாதரைக் கருதலாகாதென்பது சைவநூற்றுணிபு;

"ஒன்றும்உருத் தோன்றாமல் உள்ளடக்கி-என்றும்
இறவாத இன்பத் தெமைஇருத்த வேண்டிப்
பிறவா முதல்வன் பிறந்து-நறவாரும்
தாருலா வும்புயத்துச் சம்பந்த நாதன்என்று
பேரிலா நாதன்ஒரு பேர்புனைந்து-பாரோர்தம்
உண்டி உறக்கம் பயம்இன்பம் ஒத்தொழுகிக்
கொண்டு மகிழ்ந்த குணம்போற்றி"
(போற்றிப்பஃறொடை 68—71)

"மறையவன் படைத்தல் மாயவன் புரத்தல்
வாய்த்திடா ஒருதிரு உருவம்
அறைபெரும் புகழ்நீ கொண்டகா ரணத்தால்
அன்னநான் முகவிதி படைத்தல்
நறைகெழு துளவத் தாரினான் புரத்தல்
நவில்பல உருவம்யாம் ஒழிந்தேம்
துறைகெழு பொன்னி வளப்பெரும் துறைசைச்
சுப்பிர மணியதே சிகனே"
(சுப்பிரமணிய தேசிகர் மாலை 35)

என்பனபோல் வருவனவற்றால் இக் கொள்கையை உணரலாகும்.

93—94. பானு - சூரியன்; திமிரம் - இருள்; இக் கண்ணிகள்,

"நீடும் ஒளியும் நிறைஇருளும் ஓர்இடத்துக்
கூடல் அரிது கொடுவினையேன்—பாடிதன்முன்
ஒன்றவார் சோலை உயர்மருதச் சம்பந்தா
நின்றவா றெவ்வாறு நீ" (வினாவெண்பா 1)

என்னும் சாத்திரப் பாடலை அடியொற்றியது; நந்தா-குறையாத.

95. அருக்கன் – சூரியன்; உமை – முதலது உம்மை என்பதன் இடைக்குறை, பின்னது உமா தேவியார்.

96. உபாங்கம் – ஒருவரால் அணியப்பெறும் உடை, அணிகலன், படைக்கலம் முதலியன.

97. அனுக்கிரகம் செய்ய-கருணை காட்டியருள; கிரகம் மாள-ஒன்பான் கோள்களால் உண்டாகும் துன்பங்கள் ஒழிய, கிரகசாரம் என வழங்கப்படும்; எமை-எமக்கு, உருபு மயக்கம்; இனி எமை கிரகம் மாள அனுக்கிரகம் செய்ய அருள்உருவம் கொண்டீர் என இயையும்.

## பேதை

98. பேதை–ஏழு வயதுப்பெண்.

99. சத்திநிபாதம்-16 ஆம் கண்ணி உரையில் கூறப்பெற்றது; இது பொதுவாக நான்கு வகையாகக் கூறப்படினும், '' நால்வகைப்பட்டு அவற்றுள்ளும் பல வேறு வகைப்பட்டு நிகழும் எனக் கொள்க '' (மேலது) என்னும் ஆசிரிய வசனத்திற்கிணங்க இவ்வுலா ஆசிரியர், பிரபந்த மரபிற்கேற்ப மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிர தரத்தில் மந்தம், தீவிர தரத்தில் மந்ததரம், தீவிர தரத்தில் தீவிரம், தீவிர தரத்தில் தீவிரதரம் என ஏழாகக் கொள்கிறார்; மந்த சத்திநிபாதம்–மந்தம் என்ற சொல் மெதுவாக, கொஞ்சமாக எனப் பொருள்தரும்; தரம் என்னும் பின்னொட்டு மிகுதியான என்பதனை உணர்த்தும்; எனவே மந்ததரம் என்பது மிகவும் கொஞ்சமாக அல்லது மெதுவாக எனப் பொருள் தரும்; தரவே சத்தி நியாதத்தின் முறைவைப்பு ஏறுவரிசையாக மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என இருத்தலே தக்கதாம்; சிவஞானமாபாடிய முறைவைப்பும் இதுவேயாதல் மேலே காட்டப்பெற்றது; ஆனால் இவ்வுலாவுடையார் மந்தம், மந்ததரம் என வரிசைப்படுத்துகிறார்; மந்தத்-தைவிட மிகுதியான சத்திநிபாதம் எனக் கொள்கிறார் போலும்; ஆனால் இது ஆன்றோர் மரபிற்கு மாறானது என்பதையும் உணர்தல் கடனாம்; மாபாடியம் கூறும் மந்ததரத்தை இவர் மந்தம் என்கிறார்.

100. ஆடவர்களின் அறிவு மகளிரின் உறுப்பழகால் அழிதலை,

''இடைஒரு சற்றுவாள் நுதல்சற் றேழையர்
படைவிழி சற்றுவாய்ப் பவளம் சற்றிணைக்
குடம்ஒரு சற்றிவண் கொள்ளை கொள்ளநம்
புடைபெயர் அறிவெலாம் போயிற் றேஎன்பர்''.
(பிரபுலிங்க லீலை–மாயைபூசை கதி–33)

என்பதால் அறியலாம்; உறுப்புகள் வளர்ச்சியுறாத ஏழுவயதினள் ஆதலின் இவள் ஆடவருக்குத் துன்பந் தரவில்லை;

''அளியோர்
திருத்திய உள்ளத் திறம்போல் பிறரை
வருத்தி அறியா வடிவாள்''
(திருவாரூர் உலா 195–196)

என்றதும் இது.

101. ஒப்பு:–

''புன்கவிஞர்
பாட்டின் எழுவாய் பயனிலைபோல் ஒன்றொன்று
கூட்டி முடியாக் குழலினாள்''
(கடம்பர் கோயில் உலா 147–148);

நாட்ட-பார்வையால்.

102. வினையம்–வஞ்சகம்,

'' சீலத்துஅளவில்திருத்தொண்டர்அகம்போலநாளும்
களவு கொலைஅரும்பாக் கண்ணாள்''
(திருமயிலை உலா 249-250)

103. பண்டிதன்-மருத்துவன்.

104. மாளிகை சார் இல் - அரண்மனை போன்ற வீடு, சார் உவம உருபு; தமர் – உறவினர்; சேடியர்–தோழியர்; தமர்சேடியர் – உம்மைத்தொகை.

105. வண்டல்-பெண்கள் விளையாட்டு, ஒப்பு:

''பிறந்து மொழிபயின்ற பின்எல்லாம் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்''
(அற்புதத் திருவந்தாதி 1)

**106.** பாவை–பொம்மை; மை கரந்த–நஞ்சின் கரியநிறத்தை மறைத்த.

**107.** கண்டத்தான் - கழுத்தை உடையவன்; அன்பிலவர்–பக்தி இல்லாதவர்களுக்கு; கண்டத்தான்–விபத்தைப் போன்றவன்; இனி அன்புஇலவர்கண தத்தான் எனப்பிரித்துப் பக்தியில்லாதவர் மாட்டுச் சென்றடையாதவன் எனினும் ஆம்; இப்பொருளில் கண் ஏழன் உருபு; தத்தான்-பாய்ந்து செல்லாதவன்;

''அன்பர்க்கு மெய்யானை அல்லாதார்க் கல்லாத
வேதியனை'' (திருவாசகம் 187)

என்றதூஉம் இது. அன்புடையவர் - அடியார்களுக்கு; கண்டத்தான் வெல்லம் போல் இனிப்பவன்; இன்புஉரு அகண்டத்தான்-ஆனந்தமயமான வடிவத்தைப் பிரிக்க முடியாத பூரணமானதாக உடையவன்; கண்டத்தான் என்ற சீரே நான்கு முறை வந்தது சொல்பின்வரு நிலை மடக்கும் ஆம்.

**109.** மறுகு–தெரு; அன்னை–அண்மைவிளி இயல்பாயிற்று.

**110.** செவ்வி - அழகிய ; எற்கு–எனக்கு ; நவ்வி–மான்.

**111.** விமலன் விழியின் வழியாய் வரு கண்மணி - சிவபிரான் முப்புரங்களை எரித்தபோது சினத்தால் அவர் கண்களில் நீர்த்துளிகள் தோன்றின, உருத்திராக்கம் அத்துளிகளில் தோன்றியது.

**113,** தனி மா மணி–ஒப்பற்றதும் பெருமை மிக்கதுமாகிய உருத்திராக்கம்; வேளை – காலம், சரியான பக்குவம் என்பது குறிப்பு.

**114.** வியன்-பெருமைமிக்க; சாற்ற அரிது–கூறி முடிக்க இயலாதது.

**115.** பதமுத்தி-வீட்டுப் பேறாகிய முத்தி, பத முத்தி, பரமுத்தி என இருவகைப்படும்; சரியை, கிரியை, யோகத்தால் முறையே கிடைக்கும் சாலோக, சாமீப, சாரூபங்கள் பதமுத்தியாம்;

"ஒருவர் மனையிற் பணிசெய்யும் அகத் தொண்டர்க்குளதாகிய உரிமைபோல், அவ்வுலகத்துள் யாண்டும் தடையின்றி இயங்கி அவ்வப் போகங்களை நுகர்ந்து வாழ்வது சாலோகம். அவ்வளவினன்றி மைந்தர்க்குளதாகிய உரிமைபோல அவ்வப் புவனபதி-களுக்கு அணுக்கராய்வைகி அவ்வப் போக விசேடங்களை நுகர்ந்து வாழ்வது சாமீபம். அவ்வளவினன்றி, தோழர்க்குரிய உரிமைபோல அவ்வப் புவனபதிகளோடு ஒத்த வடிவமும் ஒத்த அணிகலனும் ஒத்த போக நுகர்ச்சியும் பெற்று வாழ்வது சாரூபம்".
(சிவஞானபோத மாபாடியம்-8ஆம் சூத்திரம்-முதல் அதிகரணம்-இரண்டாம் உதாரணம்)

**116.** யோகம் - ஐம்புலன்களின்வழி உள்ளத்தைச் செலுத்தாமல் ஒருமுகப்படுத்தி இறைவ-னையே தியானித்து நிட்டைகூடுதல்; தீரம்-இறைவனை விடாது பற்றியிருக்கும் மனத்திண்மை ; விரதம்-நோன்பு; யாகம்-அக்னிஷ்டோமம், அத்யக்னிஷ்டோமம், உத்தியம், ஷோடசம், வாஜபேயம், அத்திசாத்திரம், அப்தோரியாமம், அக்னியாதேயம், அக்னிகோத்திரம், தர்ஸபூரணமாசம், சாதுர்மாஸ்யம், நிரூட பசுபந்தம், ஆக்கிரணம், சௌத்திராமணி, அட்டகை, பார்வணம் சிராத்தம், சிராவணி, ஆக்ரகாயணி, சைத்திரி, ஆஸ்வயசு என்னும் இருபத்தொரு வேள்விகள்; சாந்தி-கருதிய பலனை அடைவதற்காகச் செய்யப்படும் வைதீகச் சடங்கு; தாகம் - இறையருள் பெறவேண்டு மென்னும் பேரவா,

**117**. மகாதானம்–பெரிய கொடை; ஆசிரமம்-பிரமச்சரியம், இல்லறம், வானப்பிரத்தம், சன்னியாசம் என்னும் நான்கு நிலைகள்.

**118**. தாணு - அழியாத நிலைபேறுள்ளவனாகிய சிவபெருமான்; ஏண்-பெருமை.

**122**. காமர் - அழகிய; தேம் மலர் ஆர் - தேன் நிறைந்த பூக்களை நிறையப் பெற்ற.

**123**. நந்தவனம்-பூஞ்சோலை; சரிதை-சரியை, இது வருமாறு:–

''தாதமார்க் கம்சாற்றில் சங்கரன்தன் கோயில்
 தலம்அலகிட் டிலகுதிரு மெழுக்கும் சாத்தி,
போதுகளும் கொய்தும்பூந் தார்மாலை கண்ணி
 புனிதற்குப் பலசமைத்தே புகழ்ந்து பாடி,
தீதில்திரு விளக்கிட்டுத் திருநந்த வனமும்
 செய்துதிரு வேடங்கண் டால், ''அடியேன் செய்வது
யாதுபணி யீர்''என்று பணிந்தவர்தம் பணியும்
 இயற்றுவது; இச் சரியைசெய்வோர் ஈசன்உல
 கிருப்பர்''
(சிவஞானசித்தியார் 271)

அந்திவண்ணன்-மாலைக்கால வானத்தைப் போன்ற நிறம் பெற்ற சிவபிரான்.

**124**. தாமம் ஆர்-புகழ்மிக்க; மூவாயிரத்து–தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களில்; ஊனம் அறும்–குற்றமற்ற; ஒப்பு:–

''எல்லைகாண் டற்கரிய இறைவன்இவர்
 தம்மில்யான் ஒருவன் என்னும்
தொல்லைமா மரபுடையோர்; மன்றுடையான்
 அருச்சனையால் தூய்மை பூண்டோர்;
மல்லல்ஆ கமவிதியும் மகச்சடங்கும்
 மாமறையும் வரம்பு கண்டோர்:
தில்லைமூ வாயிரமாம் முனிவர்அருட்
 பதங்கருதிச் சிறந்து வாழ்வாம்''.
(சிதம்பர புராணம்-பாயிரம் 9)

125. கப்பரை–திருவோடு.

126. விடங்களத்தின் ஆணை– ''தீண்டுவீர் ஆயின் எம்மைத் திருநீல கண்டம் என்றார்'' (பெரியபுராணம்–திருநீலகண்டர். 6), விடக்களத்தின் எனற்பாலது எதுகைநோக்கி மெலிந்தது; இந் நாயனார் வரலாறு வெளிப்படை.

128. மாரி தணியாது—மழை குறையாமல்; சாமம்—நள்ளிரவு ; இளையான்குடி மாறநாயனார் வரலாறு வெளிப்படை.

132. கமர்–நிலத்தின் வெடிப்பு. அரிவாட் டாயர்–இவர் கணமங்கலம் என்னும் ஊரில் இல்லறத் தொழுகிய வேளாளர். நாள்தோறும் இறைவனுக்குச் செந்நெல் அரிசிச்சோறும், கீரையும், மாவடுவும் படைத்து வந்தார். வறுமை வந்தும் விரதத்தைக் கடைப்பிடித்து வந்தார். ஒருநாள் அமுது முதலியவற்றை ஏந்திக் கோயிலுக்குச் செல்லும்போது உணவில்லா இளைப்பால் கால் இடறி வீழ்ந்து நிவேதனத்தை நிலத்தின் பிளவில் சிந்திவிட்டார். தன் நோன்பு இடையீடுபட்டதே என அரிவாளெடுத்துக் கழுத்தை அறுத்துக்கொள்ள முனையும்போது சிவபிரான் அவ் வெடிப்பிலிருந்து நாயனாரின் கையைப் பிடித்துக் கொண்டதோடு மாவடுவைக் கடித்துண்ணும் ஓசை-யையும் கேட்பித்து நாயனாரைச் சிவலோகம் சேரச் செய்தார்.

133. தாவு இல்–அழிவற்ற, வற்றுதல் இல்லாத என்றபடி.

134. விட மிடற்றார்–நஞ்சுண்ட கண்டன்.

136. நசையால்–பக்தியால்.

137. அதிபத்தர்–இவர் நாகப்பட்டினத்தை

அடுத்து வாழ்ந்த வலைஞர். தினமும் தன் வலையில் சிக்கும் முதல் மீனை இறைவனுக்கு என விட்டுவிடுவார். வறுமை மிக்கது. ஒருநாள் பொன்மீன் ஒன்று வலையிற் சிக்க அதனையும் விட்டு விட்டார். உடனே சிவபிரான் திருக்காட்சியளித்து இவரைச் சிவலோகம் சேரச் செய்தார்; ஆரணம்–வேதம்.

138. கதி செப்பு சீருத்திரம்-முத்தியைத் தரும் சொல் ஆகிய சதருத்ரீயம்; இது யசுர்வேதத்தில் உள்ளது; பதினோரு அநுவாகங்களாக (பிரிவு) அமைந்தது. உருத்திர பசுபதி நாயனார்-திருத்தலை யூரில் வாழ்ந்த அந்தணர். நாள்தோறும் இரவும் பகலும் குளத்தில் கழுத்தளவு நீரில் நின்று ஸ்ரீருத்ரத்தைச் செபித்து வந்தார். இதனால் சாலோக முத்தி பெற்றார்.

139. காரி என்னும் சொல் கோவை–எளிதில் பொருள் விளங்காத கடினமான சொற்களாலியன்ற பிரபந்தங்கள்; தமிழ்ச் சொற்களை வெண்மை, செம்மை, கருமை என மூன்றாகப் பகுப்பர், இவை முறையே மிக எளியன, ஓரளவு கல்வியுடையாரால் அறியத்தக்கன, மிகவும் கடினமானவை எனலாம்;

"இயல்இசை நாடகம் என்னும்முத் தமிழ்ச்சொல்
பொதிய மால்வரைப் பொழில்என இருண்டும்,
உலவா முனிவோர் உடைஎனச் சிவந்தும்,
வீழ்புனல் அருவியில் வெளுத்தும் தோன்றும்என்று
அறிவார் மலர்த்தாள் அணிதலை எமதே"

"பேயொடு குன்றும் பிளக்கு மாறு
கழறும்நூல் ஆதிய கருத்த நிறமே"

(அறுவகை இலக்கணம்-171, 174)

இவற்றின் விரிவை அறுவகை இலக்கண உரையிற் காண்க. காரியார் இயற்றிய பாடல்கள் எளிதில் பொருள் கொள்ள இயலாதபடி இருந்ததை,

..............................''வண்டமிழின்
துறையானபயன் தெரிந்து சொல்விளங்கிபொருள்மறையக்
குறையாத தமிழ்க்கோவை தம்பெயரால் குலவும்வகை
முறையாலே தொகுத்தமைத்து மூவேந்தர்
பாற்பயில்வார் ''
(பெரியபுராணம்—காரிநாயனார். 1)

என்பதால் அறியலாம்,

140. காரி நாயனார்—திருக்கடவூரில் வாழ்ந்திருந்த ஓர் அந்தணக் கவிஞர். பிறரால் எளிதில் பொருள் காணமுடியாதபடி சித்திரமான பிரபந்தங்கள் பாடி அவற்றை மன்னர்களுக்கு விளக்கிப் பொருள் பெற்றுச் சிவாலயத் திருப்பணிகள் செய்து சிவலோகம் பெற்றார். ஆண்டகைமை-கொள்கையில் உறுதி.

141. அருகர் சமயம் - சமண மதம்; புகலி—சீகாழி.

142. திருஞானசம்பந்தரால் சைவத்திற்குத் திரும்பிய பாண்டிய மன்னர் நின்றசீர் நெடுமாற நாயனார் வரலாறு வெளிப்படை.

143. படை வெட்டி-எதிர்க்கும் சேனைகளை அழித்து; அடிசில்-உணவு; வடுஇல்-குற்றமற்ற.

144. முனையடுவார் – திருநீடூரில் வாழ்ந்த ஒரு வேளாளர். பிறருக்காகக் கூலிப்படையோடு சென்று போர்புரிந்து, அதனால் பெற்ற வருமானத்தால் சிவனடியார்களை உபசரித்துச் சாலோக முக்தி பெற்றவர்.

145. மூர்க்கர் – திருவேற்காட்டில் வாழ்ந்த வேளாளர். அடியார்களுக்குத் தவறாமல் அமுதளித்து வந்தார். வறுமை ஏற்பட்டது. தாம் நன்கு கற்ற சூதாட்டத்தால் பொருள் சம்பாதித்துக் குடந்தையில் அடியார்களுக்கு உணவருத்திவந்தார். சூதாடும் போது

எதிர்த்துப் பேசுபவர்களைக் குத்துவாளால் குத்தும் காரணத்தால் மூர்க்கர் எனப்பட்டார். இறுதியில் சிவலோக பதவி பெற்றார். சமணர் தமை அடுத்து- சாக்கிய நாயனார் புத்த சமயத்தைச் சேர்ந்திருந்தார் என்பதே வரலாறு; சாக்கியம் என்னும் சொல் பௌத்தம், சமணம் இரண்டையும் குறிக்குமேனும் சாக்கிய நாயனார் சார்ந்திருந்தது பௌத்தமே, சமணமன்று; சார்புமான சார்பு—அடைக்கலமடையத் தக்க கடவுள்; உமை இடத்தில் வைத்தோன்-மாதொரு பாகன்.

147. தீன்உணவு — ஒருபொருட்பன்மொழி; அவமதியால் - அறிவின் தளர்ச்சியால்; அயர்ந்தே- மறந்து; உவமை இலார் — சிவபக்தியில் இணையற்ற சாக்கியர்.

149. சாக்கியர் - திருச்சங்கமங்கை என்னும் ஊரைச் சேர்ந்த வேளாளர்; காஞ்சியையடைந்து பௌத்தராகி அத் தத்துவத்தைப் பயின்றார்; பின் அதில் பற்றிலராய்ச் சைவத்தில் பற்றுக் கொண்டார்; தம் பௌத்த சமய வேடத்தை விட்டுவிடாமல் நாள்தோறும் சிவலிங்கத்தின்மேல் ஒரு கல்லை எடுத்து எறிவதையே வழிபாடாகக் கொண்டு வந்தார்; ஒருநாள் மறந்து உணவுகொள்ள உட்கார்ந்த உடனே நினைவு வந்தவராக ஓடிச்சென்று சிவலிங்கத்தின்மேல் கல் எறிந்தார்; இறைவன் காட்சியளித்துச் சிவலோக மடைவித்தார்; ஆதி–சிவபெருமானின்.

151. அந்தம் இலான்-அழிவற்ற சிவபெருமான்

153. அனல்கண்—நெற்றியில் உள்ள தீவிழி

154. விடையான்-இடபவாகனத்தர்

155. திருக்குறிப்புத் தொண்டர் - காஞ்சி புரத்தில் வாழ்ந்த ஏகாலியர்; அடியார்தம் குறிப்பின்படி அவர்களுடைய துணிகளை வெளுத்துத் தருபவர்;

ஒருநாள் இறைவன் ஒரு முனிவர் வேடத்தில் சென்று தம் ஆடையை உடனே வெளுத்துத்தர வேண்டினார்; மழையால் இயலவில்லை; தம் இயலாமைக்கு வருந்தித் தலையைக் கல்லின்மேல் மோதிக்கொள்ள முனைந்த போது தடுத்துச் சிவலோகம் அளிக்கப் பெற்றார்.

**156.** சோமாசி மாற நாயனார் – திருஅம்பர் என்னும் ஊரைச் சேர்ந்த வேதியர்; திருவாரூரடைந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளிடம் பேரன்பு பூண்டுச் சாலோகம் பெற்றவர்.

**157.** முட்ட–முட்டுப்பாடு ஏற்பட

**158.** தோட்டி-கோடரி.

**159**- கலிநீதி நாயனார்-கலிய நாயனார்; இவர் திருவொற்றியூரில் வாழ்ந்த வாணியர்; திருக்கோயிலில் விளக்கிட்டு வந்தார்; வறுமை வந்தது; மனையாளையே விற்கத் துணிந்தும் வாங்குவாரில்லை; விளக்கெரிக்க எண்ணெய் வாங்கப் பொருள் இல்லாததால் தம் கழுத்தை அரிந்து இரத்தத்தால் விளக்கேற்ற முனைந்த போது இறைவன் காட்சியளித்துச் சிவலோகம் அடையச் செய்தார்.

**160.** பொய்யடிமை இல்லாப் புலவோர்–தொகையடியார்கள்; கடைச்சங்கப் புலவர்கள் என்பர்; எனினும் வரலாற்றடிப்படையில் இது மேலாய்வுக்குரியது.

**161** கையர் – இழிந்தவர்; கைதவன் – செம்மொழிச் சிலேடை 1. பாண்டியன், 2. வஞ்சகன்;

**162.** காழி மன்னற்கு-திருஞானசம்பந்தருக்கு.

**163.** நின்றசீர் நெடுமாறனின் அமைச்சர் குலச்சிறை நாயனாரின் வரலாறு வெளிப்படை; நலக்குறு நாள்-வறுமையால் நலியும் காலத்தே.

**165.** பவத்தை—பிறவியை.

**166** கணம்புல்லநாயனார்-இருக்குவேளூரினர்; தீபத் திருப்பணி செய்துவந்தார்; வறுமை எய்தியது; சிதம்பரம் சென்று தன்பொருள்கள் எல்லாவற்றையும் விற்றுத் திருவிளக்கிட்டார்; அப்படியும் பொருள் முட்டுப்பட்டது; கணம்புல் அரிந்து விற்றார்; ஒருநாள் புல்லும் விலைபோகவில்லை; அப்புல்லையே தீபமாக எரிக்க முயன்றார்; போதவில்லை; தன் தலைமுடியை எரிக்கத் துணிந்தார்; அப்போது இறைவனால் சாலோகம் அருளப்பெற்றார்.

**167.** தேசிகன் - குருநாதர்; ஆசுஇல்—குற்ற மற்ற,

இவ் வுலாவின் பேதைப் பருவப் பகுதியில் திருநீலகண்டர், இளையான் குடிமாறர், அரிவாட் டாயர், அதிபத்தர், உருத்திர பசுபதியார், காரியார் நின்றசீர் நெடுமாறர், முனையடுவார், மூர்க்கர், சாக் கியர், திருக்குறிப்புத் தொண்டர், சோமாசி மாறர், கலியர், குலச்சிறையார், கணம்புல்லர் ஆகிய பதினைந்து தனியடியார்களும் தொகையடியார்களுள் தில்லை வாழந்தணர், பொய்யடிமையில்லாப் புலவோர் ஆகிய இருதிறத்தாரும் இடம்பெற்றுள்ளனர். இவர்கள் அனைவரும் சரியைநெறி நின்று சாலோகமாகிய பதமுத்தி அடைந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது

## பெதும்பை

**169.** பெதும்பை - ஒன்பது வயதுப் பெண்; கந்தமிகும் கூழை – நறுமணமிக்க கூந்தலையும், எண்ணும்மை விரிக்க; கவின் நோக்காள் - அழகிய கண்களையும் உடையவள், இங்கும் உம்மை தொக்கது; சந்தம்-சந்தனம்.

170 இணைய—இரட்டையான; நனை-மலர் மொட்டு, இங்கே தாமரை முகை; நகில்-முலை; தாமரை என்றது என்னை?

''மைந்தர் உகமை அழகோடே உள்அரும்பும் கஞ்ச
முகையின் முகைபோலும் முலையாள்''
(ஏகாம்பரநாதர் உலா 226)

என்ப ஆதலின்.

172. நத்துவாள்—விரும்புவாள்.

173. காயம்-உடல்; மனம் வாக்கு காயம் இவை திரிகரணம் ஆகும்.

174. அரன் - உயிர்களுடைய மலங்களை அரிப்பவன், சிவபெருமான்.

175. கையில்பணி-கரங்களால் இறைவனுக்குச் செய்யும் தொண்டு, ''கைகாள் கூப்பித்தொழீர் கடிமாமலர்த் தூவிநின்று பைவாய்ப் பாம்பு அரை ஆர்த்த பரமனைக் கைகாள் கூப்பித்தொழீர்'' (தேவாரம் 4-9-7); காதில் பணி— ''செவிகாள் கேண்மின்களோ சிவன்எம் இறை செம்பவள எரிபோல் மேனிப் பிரான் திறம் எப்போதும் செவிகாள் கேண்மின்களோ'' (தேவாரம் 4-9-3 ; காலில்பணி-''கால்களாற் பயன் என் கறைக்கண்டன் உறைகோயில் கோலக் கோபுரக் கோகரணம் சூழாக் கால்களாற் பயன்என்' (தேவாரம் 4-9-9), மற்ற பணிகள் யாவும் இம்மூன்றுள் அடங்கும்.

''சிந்தனை செய்ய மனம்அமைத் தேன்செப்ப
நாஅமைத்தேன்
வந்தனை செய்யத் தலைஅமைத் தேன்கை
தொழஅமைத்தேன்
பந்தனை செய்வதற் கன்பமைத் தேன்மெய்
அரும்பவைத்தேன்
வெந்தவெண் ணீறணி ஈசற் கிவையான் விதித்தனவே''
(பொன்வண்ணத்தந்தாதி 72)

''கண்கள்நிற் பரிந்து கண்டுவப் பனவே
கைகள்நிற் றொழுபவே செவிகள்
பண்களிற் புகழும் புகழ்ச்சிகேட்பனவே
பதம்நினை வலம்புரி வனவே''
(சோணசைலமாலை 75)

என்பன போன்ற ஆன்றோர் வாக்குகள் ஒப்பிடத்தக்கன

176 பொன்மேடை உம்பரின்மேல்-(ஏழன்) உருபுமேல் உருபு.

177. வில் உமிழும்-ஒளிவீசும்.

178. பாவகம் - எண்ணம், மனாதீதன் இறைவன் என்றபடி; ''வாக்குமனம் அணுகாத பூரணப் பொருள்'' என்பர் தாயுமானவர் (சின்மயானந்த குரு 2:3); தீவகம் - பறவையைப் பிடிக்கும் வேடர்கள் அவற்றைக் கவர்ந்திழுக்கத் தம்பால் வைத்திருக்கும் பழகிய பறவை பார்வை எனப்படும்; ''தீவகமாம் என உருவாய் வந்து நாதன்'' என்னும் சிவப்பிரகாசம் பாயிரம் 8ஆம் பாடற் பகுதிக்கு, ''யாதாமொரு பட்சியையோ மிருகத்தையோ பிடிக்க வேண்டினவர்கள் அதற்கதற்கேற்ற பார்வையைக் காட்டிப் பிடித்தாற்-போல'' என்னும் மதுரைச் சிவப்பிரகாசர் உரையைக் காண்க; மனித உயிர்களைத் தன்பாற்படுத்த இறைவன் மானிட வடிவமேற்றுக் குருநாதனாக வருகிறான் என்பது கருத்து.

180 இருவிழியின் வல்லவம்-சட்சு தீட்சையைச் சுட்டியது; மீன் தன் சினையைப் பார்த்தல் போலப் பக்குவமுற்ற உயிரைத் தானாம்வண்ணம் பார்க்கும் அருட்பார்வை என்பர் சமயநூலோர்; பரிசத்தால்-குருநாதர் சீடனைத் தம்கைகளாலோ திருவடிகளாலோ தீண்டுதல், முட்டையைச் சிறகால் பறவை தொடுதல் போல மாணவனை ஆசான் தன் கைகால்களால் தொடும் தீட்சை.

181. மலர்க்கையின் சயம்-சீடரின் தலையைத் தொட்டு (அஸ்தமஸ்தக சையோகத்தால்) அவனுடைய மலமாசினைப் போக்கும் வெற்றி, பரிச தீட்சையால் ஆட்கொள்ளல்; வாக்கு அருள்–பஞ்சாக்கர மந்திரத்தை உபதேசித்து ஆட்கொள்ளுதல், உபதேச தீட்சை எனப்படும்; ஐயம்-உபாசனையிலே சாதகனுக்குத் தோன்றும் சந்தேகங்கள்.

182. பாவகம்-பாவனா தீட்சை, ஆமை கரையில்இருக்கும் முட்டையைத் தன் உள்ளத்தால் நினைத்துக் கொண்டேஇருந்து தன்வடிவம் தருதலைப் போல ஆசிரியர் சீடனைத் தம் ஞானசொரூபமாகக் கொள்ளும் பாவனை. பவங்கள்-பிறவிகள்; சேவகம்–வீரம்; மனத்தின் சேவகம் என்பது குருநாதர் தம் மனத்தில் பாவித்துச் சீடனின் பிறவியறுக்கும் செயலைக் குறிக்கிறது.

183. வேதாகமங்கள் விரிக்கும் செயல் என்றது ஆகம தீக்கையை; இது அளவை, இலக்கணம், சாதனம், பயன் என்னும் நான்கையும் கற்பித்துப் பொது சிறப்பு இயல்புகளை மாணவன் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் நிட்டைகூடல் என்னும் நான்கு விதங்களாலும் உணரச் செய்தல் ஆகும்; தாவுஇல்--(இறைவனைத் தவிர வேறு) பற்றுக்கோடு இல்லாத,

184. யோக அருள் செய்யும் என்றது யோக தீட்சையை; இது சீடனின் அறிவிலே சிவஞானத்தையும் சிவயோகத்தையும் ஏற்படுத்தல்; ஆறாதார அட்டாங்க யோகங்கள் இவற்றிற்குத் துணையாகும்;

இதுகாறும் எழுவகைத் தீக்கைகளுள் ஔத்திரி எனப்படும் வேள்வியோடு கூட்டிச் செய்யும் ஒன்றினைத் தவிர மற்ற ஆறும் கூறப்பெற்றன. இவற்றுள் திரு-

நோக்கம் (சட்சுதீட்சை), பரிசம் ஆகிய இரண்டும் ஆசானின் உடல்தொழில்; உபதேசம், ஆகமம் ஆகிய இரு தீக்கைகளும் வாக்கின் தொழில்; பாவனையும், யோகமும் அறிவின் தொழில் எனச் சாத்திர நூலோர் பிரித்துக் காட்டுவர்; ஔத்திரியில் முக்கரணங்களும் செயற்படும்.

ஐ அமரும் - அழகுபொருந்திய; தையலர்-தோழிப் பெண்கள்.

185. ஒண் தரளம் - ஒளிவீசுகின்ற முத்து; முத்துக்களை ஏந்தி விளையாடுதலை, ''வலம்புரி ஈன்ற நலம்புரிமுத்தம் கழங்காடு மகளிர் ஓதை ஆயத்து'' (சிலம்பு. நீர்ப்படைக், 244 - 245) என்பதனால் அறியலாம்

186 இறைவனுக்கு நஞ்சினைத் தந்த கடலில் தோன்றிய நித்திலம் எனக்கும் ஆகாததாம் என்னும் இந்த மனநிலையை,

''இலவுஇதழி பாகனில் இழிந்தமலர்க் கைதை
கலவியது; கார்அமிழ்து கான்றது; ஒழி யாத
புலவுஉடையது என்றுகடல் போக்கிநிலம் மூன்றில்
குலவிவளம் மெத்தியது கொங்குவள நாடு''
(பேரூர்ப்புராணம், திருநாட்டுப் 5)

என்புழியும் காணலாம்; அடித்துணை—துணையடி என மாறுக, இரு திருவடிகள்.

187. சாமீபம்—இறைவனுக்கு அருகிலே இருக்கின்ற நிலை; இது கிரியை முற்றியவழிக் கிடைக்கும் முத்தியாகும்.

189. அடிஎடுத்துச் சொல் என்றது இறைவன் சுந்தரருக்குத் திருத்தொண்டத்தொகை அருள ''தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்'' எனத் தொடங்கிக் கொடுத்தது; தொண்டத் தொடை-திருத்தொண்டத் தொகை.

190 துடி இடையாய்–உடுக்கையைப் போன்ற இடுப்பைஉடையாய்

191. விட தூர்த்தன்-காமம் மிக்கவன். ஒரு பொருட்பன்மொழி அல்லது நஞ்சைப் போன்ற காமி என உவமைத்தொகை ஆக்கினும் அமையும்.

192 விமலன்–மலங்கள் அற்ற இறைவன் மனையை – மனைவியை.

193. மறித்தவரை - (தன் மனையாளை அழைத்துச் செல்வதை) தடுத்த உறவினர்களை; இயற் பகை நாயனார் வரலாறு வெளிப்படை.

194. இக் கண்ணியின் இரண்டாம் அடியில் கோ என்னும் முதற்சீர் முதல் எழுத்திற்குரிய மோனை மூன்றாம் சீரின் இரண்டாம் அசையில் வந்தது. இலக்கி யங்களில் இத்தகைய மோனை அமைப்பை ஆங்காங்கே காணலாம். இந்த உலாவிலும் 6–1, 195-2, 215 1, 231-2, 382-2, 390-2 போன்ற அடிகளில் மோனைஉரிய இடத்திற்கு முன்னோ பின்னோ உள்ள சீரின் அசையாக நிற்கக் காணலாம். அறுவகை இலக்கணம் இத்தகைய அமைப்பைச் சொல்நடுஉறு மோனை எனும். 493 ஆம் நூற்பாவும் உரையும் காண்க.

196. துலை – தராசு.

197. ஆசு இலர் – குற்றமற்றவர்; அமர்நீதி நாயனார்–இவர் பழையாறை வணிகர்; திருநல்லூரில் சிவனடியார்களுக்காக ஒரு திருமடம் அமைத்திருந்தார். ஒருநாள் இறைவன் ஒரு பிரமசாரி வடிவத்தில் வந்து தம் கோவணத்தைப் "பத்திரமாக வைத்திரு; பிறகு வந்து பெற்றுச் செல்கிறேன்" எனக் கொடுத்துச் சென்றார்; அது மாயமாக மறைந்துவிட்டது; சினங் கொண்ட மாணி "முன்கொடுத்த கோவணத்திற்கு இணையான மற்றொன்று என்பால் உள்ளது. அதன்

எடைக்குச் சமமாக உள்ள ஒன்றைத் தந்தால் பெற்றுக் கொள்வேன்'' என்றார். அது தராசில் வைக்கப் பெற்றது. அமர்நீதியாரின் உடைமைகள் அனைத்தையும் மறுதட்டில் வைத்தும் துலை நேராகவில்லை, இறுதியில் தம் மனைவி மைந்தனுடன் தாமே தராசில் ஏறி அமர்ந்தார். அத் தராசே விமானமாகச் சிவலோகம் சேர்ந்தார்,

199 பாவி ஒரு மன்னன்—முத்தநாதன்.

200 பத்திரம்-குறுவாள்; தத்த-விளி, மெய்ப் பொருள் நாயனாரின் மெய்க்காவலர்.

201. மெய்ப்பொருள் நாயனார் வரலாறு வெளிப்படை; ஐ வாள்-படைக்கலங்களுள் தலைமை பெற்றதாகிய உடைவாள்; பயிற்றி - (வாட்போர்) கற்பித்து.

202. அதிசூரன் - ஏனாதிநாத நாயனாரிடம் பகை கொண்ட ஒரு வீரன்; வாளில் அவற்கு உடைந்து- கத்திச்சண்டையில் நாயனாரிடம் தோற்று, செய்யு-ளாதலின் இயற்பெயருக்கு முன்பே சுட்டு வந்தது; வதிய-நிலைத்திருக்க; மன்ன-போர்செய்யப் பொருந்த.

203. கண்டு அவன் (அதிசூரன்) உள்ளத்தில் கருதும்படி செல்ல-அதிசூரன் ஏனாதிநாதரை வஞ்சகத் தால் கொன்றுவிட்டான்; சிவனடியாருக்குநேர்ந்த இத் தீமையைக் காப்பியத்தும் தம் வாயால் சொல்ல விழை யாத தெய்வச் சேக்கிழார் பெருமான் ''முன்நின்ற பாதகனும் தன்கருத்தே முற்றுவித்தான்'' (பெரிய ஏனாதிநாத. 40) என்பார். இவ்வுலா ஆசிரியர் அதனையே பின்பற்றுகிறார். மெய்ப்பொருள் நாயனார் புராணத்தில் ''தான்முன் நினைந்த அப்பரிசே செய்ய'' (15) என்றதும் இத்தகையதே; மகிழ்-தான் இறந்தாலும் திருநீறணிந்தவன் கையால் இறக்கிறோம் என உவகை

கொள்ளும்; ஏனாதிநாத நாயனார்:- இவர் எயினனூரில் ஈழகுலத்தில் தோன்றியவர்; வாட்போர் கற்பித்தலைத் தொழிலாகக் கொண்டவர்; சிவனடியாருக்கு அன்பு பூண்டுஉபசரித்து வந்தவர்; அதிசூரன் என்னும்மற்றோர் வாளாசிரியர் தொழில்முறைப் போட்டியால் பகைமை கொண்டார்; முதல்நாள் நேரில் போருக்கழைத்துத் தோற்றோடி மறுநாள் திருநீறணிந்து அதனைத் தம் கேடயத்தால் மறைத்துப் போருக்கு வந்தார்; நெருங் கியதும் நெற்றியில் விபூதியைக் கண்ட நாயனார் அவரைத் தாக்காமல் தாம் தாக்குண்டார்; அதனால் சிவலோகம் பெற்றார்.

*204*. கோல்தேன் - கொம்புத்தேன்; சேட் புலத்தில்–தூரத்தில்,

*205*. கணில் - **கண்ணில்**.

*207*. ஒரு கண் உளது அக்கண்ணையும்.

*208*. எய்யும் கருவி–எய்யப்படும் கருவி என்ற பொருளில் ஆட்சி, அம்பு; கண்ணப்ப நாயனார் வரலாறு வெளிப்படை; பொருவு இல்–இணையில்லாத.

*209*, துளைக்கருவி-புல்லாங்குழல்.

*210*. ஆனாய நாயனார் மழ நாட்டு மங்கல ஊரில் ஆயர் குலத்தில் தோன்றியவர்; புல்லாங்குழலில் திருவைந்தெழுத்தை முறைப்படி இசைத்து வந்தார்; இத் தொண்டால் இவர் சிவலோகம் பெற்றார்.

*212*. வதுவை-திருமணம்; அடியார் போல உருஎய்தி சிவன் வரக்கண்டு அவர்பால் (சிவபிரானிடம்) இன்புற்றே என்க; சிவன்–எழுவாய்;

*213*. பஞ்சவடி-மயிர்க்கற்றையால் ஆன பூணூல்; மாவிரத சைவர் இதனை அணிவர்; கோதை-கூந்தல்; சுரிகை-உடைவாள்; சீதம் மலி-குளிர்ச்சி மிக்க

214. கூனற்பிறை-வளைந்த பிறைமதி; மானக் கஞ்சாற நாயனார்:- இவர் கஞ்சாறூரில் வாழ்ந்த வேளாளர்; இவர் பெண்ணை ஏயர்கோன் கலிக்காம நாயனாருக்கு மணமுடிக்க எண்ணியிருந்தனர். திருமணத்திற்குச் சில நாட்களுக்கு முன்பு இறைவன் ஒரு மாவிரதசைவ வடிவங்கொண்டு மானக்கஞ்சாறர் வீட்டை அடைந்தார் மணமகள் வந்து வணங்கினாள்; அவளுடைய நீண்ட அழகிய கூந்தல் தாம் அணியும் உரோமப் பூணூலுக்கு உபயோகப்படும் என்ற உடனே கஞ்சாறர் அதை அரிந்து கொடுத்துவிட்டார்; மணமகனாகிய கலிக்காமர் வந்தடைந்து தலைமழித்த மகளை மணப்பது மரபல்லவே எனத் தயங்கியபோது அவள் கூந்தல் உடனே வளர்ந்தது திருமணம் சிறப்பாக நிறைவேறியது. திருமணத்தின்போது மகளின் கூந்தலை அரிந்தளித்த நாயனார் சாமீப முத்தி பெற்றார்.

215. கானஇயத்து உறுப்பு - இசைக்கருவிகளுக்குத் தேவையான போர்வைத்தோல், வார், வீணைக்குரிய நரம்பு முதலிய உதிரிப்பொருள்கள் எயில்புறம்-வெளி மதில்.

217. உனியே-உன்னியே, கருதி.

218. திருநாளைப்போவார் என்னும் நந்தனார் வரலாறு வெளிப்படை.

219. பார் வேந்தன்-நாட்டை ஆளும் அரசன்

220. நெற் கூடு-நெல் நிறைந்த களஞ்சியம்; இகல்முனை-போர்க்களம்.

221. போனார்-போனவராகி என எச்சப் பொருளில் வந்தது. வென்று, வந்து, பார்த்து, அரிந்து, எறிந்து, வாளின் ஏற்ற கோட்புலியார் என்பது முடிபு; வற்காலம்-பஞ்சம்.

223, கோட்புலி நாயனார்-நாட்டியத்தான் குடியில் இருந்த வேளாளர்; தொழிலால் படைத் தலைவர்; சிவாலயத்தில் தொடர்ந்து நல்ல திருவமுது செய்வித்துவந்தார். ஒரு சமயம் போர்மேற் சென்றிருந்த போது பஞ்சம் ஏற்பட்டுவிட்டது. எனவே கோட்புலியார் கோயிலுக்கு எனத் தனியே சேமித்து வைத்திருந்த நெல்லை அவருடைய உறவினர்கள் அவர் ஆணைக்கு எதிராக எடுத்து உண்டுவிட்டனர். திரும்பி வந்த நாயனார் அறியாக் குழவி உள்ளிட்ட உறவினர் அனைவரையும் கொன்று குவித்தார். அப்போது இறைவன் காட்சியளித்து இறந்த உறவினர்களுக்குச் சுவர்க்கத்தையும் நாயனாருக்குச் சாலோகமும் தந்தருளினார்.

224. திருமுகம் - சிறப்புக்குரிய பெரியோர் எழுதும் கடிதம்; ஏலவே-அதற்கேற்றவாறே, கடிதத்திற் சொல்லியபடி; பத்திரர்-பாணபத்திரர்.

225. வண்ணான் ...... பணிந்தும்-சேரமான் பெருமாள் ஒருநாள் யானைமீது உலா வருகையில் வண்ணான் ஒருவன் தன் தலையில் தாங்கிய உழமண், மழையால் கரைந்து உடலெங்கும் திருநீறு பூசியவனைப் போன்ற தோற்றத்துடன் எதிரே வந்தான். அச் சிவ வேடத்தைக் கண்ட அரசன் அவன் எதிரே சென்று வணங்கினார். நடன்-நடராசன்.

226. தாட்க-தாமதிக்க, தாழ்க்க, எதுகை நோக்கிய போலி.

229. தமிழ்பாடும்-திருக்கைலாய ஞானஉலா என்னும் ஆதிஉலாவை அருளிச் செய்யும்; கழறிற் றறிவார் - இவ்வுலகிலுள்ள பறவை, விலங்குகளின் மொழியும் அறிந்தவர் என்பது சொற்பொருள், இவர் சேரமான்பெருமாள் நாயனார், இவர் வரலாறு வெளிப்படை.

230. அற்பினொடு-அன்புடன்; வில் திகழும்-ஒளி மிக்க.

234. இயம்பினளை - கூறிய மனைவியை, வினையாலணையும் பெயர்.

235. அண்டன்—தலைவனாகிய சிவபெருமான்

236. தமிழ் - திருவாலங்காட்டு மூத்த திருப் பதிகம், மூத்த திருப்பதிகம், திரு இரட்டைமணிமாலை அற்புதத் திருவந்தாதி ஆகிய நான்கு பிரபந்தங்கள்; இவை பதினொன்றாம் திருமுறையில் தொகுக்கப் பெற்றுள்ளன; காரைக்கால் அம்மையார் வரலாறு வெளிப்படை.

238. ஆலம் பரித்த களன்-நஞ்சைத் தாங்கு கின்ற கழுத்தினன் என்னும் இத்தொடர் விடம்போன்ற சொற்களைக் கூறும் மிடற்றினன் என்கின்ற ஒரு தொனிப்பொருளையும் பயப்பதால் கருத்துடை அடை கொளியின் பாற்படும்; பசுப்படுக்கில் - உயிருள்ள சீவனைக் கொன்று அளித்தால், சீவபோதத்தை அழித்துவிட்டு என்னை அடைந்தால் விழுங்கி விடுவோம் என்பது தொனி; இதனைச் சிவஞான முனிவர் ''என்னை எடுத்து விழுங்கி எனக்கே தன்னை அளித்-தருள் தத்துவ நாதன்'' (இளசைப் பதிற்றுப்பத் தந்தாதி 42) என்பார்; அருத்தி—விருப்பம்.

240. சிறுத்தொண்ட நாயனார் வரலாறு வெளிப்படை. தூக்கில்—ஆராய்ந்து பார்த்தால்.

242. எம் கோணை-உயிர்களாகிய எம்பால் உள்ள மாறுபாட்டை; எவ்வம்—குறை.

243. ராயன் - தலைவன்; எண்கொள்—மதிப்புப்பெற்ற.

245. ஏய-பொருந்தும்படி.

246. பணிமொழியார் - கீழ்ப்படிந்த சொல்லுடையார்;

248. ஏலு திருமஞ்சனம் – தன்னால் இயன்ற அளவு செய்யப்பெறும் திருமுழுக்காட்டு; அஞ்சு சுத்தி— பஞ்சசுத்தி, சிவபூசைக்கு இன்றியமையாத ஐவகைத் தூய்மை, அவையாவன:- பூத சுத்தி, ஆன்ம சுத்தி, திரவிய சுத்தி, மந்திரசுத்தி, லிங்கசுத்தி; தத்துவங்கள் நாம் அல்ல, அவை சடப்பொருள்கள் ஆகும் என உணர்தல் பூதசுத்தி; இவ்வாறு பூதங்கள் சடம் என அறிதலும் நம் சிற்றறிவால் அன்று, திருவருள் உணர்த்துவதால்தான் என அறிதல் ஆன்மசுத்தி; ஆன்மா தானே சுயமாக அறிதற்கேற்ற அறிவற்றது என அறிந்து, ஐம்புலன்வழி அறிவது அனைத்தும் திருவருளால் என உணர்தல் திரவிய சுத்தி; திருவைந்தெழுத்தின் பொருளையும் தன்மையையும் அறிதல் மந்திரசுத்தி; பதியாகிய இறைவன் பசு பாசங்களிலும் கலந்துநின்று அவற்றை இயக்குவதை உணர்ந்து அப் பரமன் தன் வழிபடு மூர்த்தத்திலும் எழுந்தருளி விளங்குகிறான் என அறிதல் இலிங்க சுத்தி; இத்தகைய வழிபாட்டின் பயன் நிறைந்த ஞானமாகும்.

"பஞ்சசுத்தி செய்துநின்னைப் பாவித்துப்
பூசைசெய்தால்
விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே"
(தாயுமானவர்.-பராபரக்கண்ணி 112)

249. எஞ்சல் இலாது உன்னி-இடைவிடாமல் தியானித்து; அனல் ஓம்பும் உயர் தவத்தோர்-வேள்வித் தீ வளர்த்து வழிபடும் மேலான தவத்தைப் பெற்றுள்ள அந்தணர்; ஆன்மார்த்த பூசையோடு பரார்த்த பூசைக்கும் உரியவராய், கிரியைநெறி நின்று முப்போதும் திருமேனி தீண்டப்பெறுதலின் இவ்வாறு கூறினார்; முடியா-முடியாது, துவ்விகுதி தொக்கது.

**250.** பைய-மெதுவாக; பராபரம்-அனைத் திற்கும் மேலானது, பரம்பொருள்.

**251.** இவண் ஞானகுருவாகி நண்ணி ஈனம் இல்லா இவள்கண்ணே போந்தது எனக் கொண்டு கூட்டுக.

**252.** விரகம்-பிரிவாற்றாமை.

**253.** முன்போல் – சிவபிரான் யோகத்தில் இருந்தபோது, சூரனின் துன்பத்தைத் தாங்கமாட்டாத தேவர்களின் ஏவலால் அவர்மீது மலர்க்கணை ஏவி மன் மதன் அவர் நெற்றிக் கண்ணால் நீறானதைப் போல.

**254.** மொய் மலரின் புங்க வில் கை வேள்-வண்டுகள் மூசுகின்ற பூக்களாகிய அம்புகளையும் (கரும்-பாகிய) தனுவையும் கையில் ஏந்தியுள்ள மன்மதன்; புங்கவில்- உம்மைத் தொகை; மங்கை ஒளித்தவன்-திருமேனியின் இடப்பாதியிலுள்ள உமாதேவியாரை மறைத்துவிட்டு மானிடனாக வந்த ஆசான்.

இப் பெதும்பைப் பருவப் பகுதியில் இயற் பகையார், அமர்நீதியார், மெய்ப்பொருள் நாயனார், ஏனாதி நாதர், கண்ணப்பர், ஆனாயர், மானக்கஞ்சாறர், திருநாளைப்போவார், கோட்புலியார், சேரமான் பெருமாள், காரைக்கால் அம்மையார், சிறுத்தொண்டர் ஆகிய பன்னிரு நாயன்மார்கள் இடம்பெற்றுள்ளனர்.

## மங்கை

**255.** மங்கை - பன்னிரண்டுவயதுடையவள்; மா விரை-நிறைந்த நறுமணம்;

**256.** கோல் மின் இடையாள்-அழகிய மின் னலைப்போன்ற இடையை உடையவள், மின்னலுக்குக் கோல் எனப் புகழ்மொழி சேர்த்ததால் புகழுவமை

அணியாகும்; கிரியை - இறைவனுக்கு விதிப்படித் திருமஞ்சனம், மலர், தூபதீபம் முதலியவற்றால் அன்புடன் பூசை செய்தல்.

''புத்திரமார்க் கம்புகலில் புதியவிரைப் போது
புகைஒளிமஞ் சனம்அமுது முதல்கொண் டைந்து
சுத்திசெய்தா சனம்மூர்த்தி மூர்த்தி மானாம்
சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த
பத்தியினால் அருச்சித்துப் பரவிப் போற்றிப்
பரிவினொடும் எரியில்வரு காரியமும் பண்ணி
நித்தலும்இக் கிரியையினை இயற்று வோர்கள்
நின்மலன்தன் அருகிருப்பர் நினையுங் காலே''.
(சிவஞான சித்தியார் 272)

என்பது சாத்திரம்.

257. தேசு இரவி-ஒளிமிக்க சூரியன்; தகிக்கும்-சூடாக்கும்; மா சுரத்தில்-பெரிய பாலைநில வழியில்

258. விரும்புவ போல் - விரும்புவது போல், தொழிற்பெயர் இறுதித் துகரம் கெட்டது.

259 அம் கமலக்கண்ணன் - தாமரை போன்ற அழகிய கண்களை உடைய திருமால்.

260. படி பரிக்க-நிலம் சுமக்கும்படி.

261. இசைபாடி - புகழைப்பாடி; இரு மூன்று அங்கம், வேதத்திற்கு உறுப்புகளாகக் கூறப்படும் ஆறு கலைகள், அவையாவன:- சிட்சை, வியாகரணம், சந்தம், நிருக்தம், சோதிடம், கல்பம். இவற்றுள் சிட்சை-சொற்களின் எழுத்திலக்கணமும் உச்சரிப்பு முறைகளும் கூறுவது; வியாகரணம்-சொல்லிலக்கணம்; சந்தம்-யாப்பிலக்கணம்; நிருக்தம்-நிகண்டு, அகராதி போலச் சொற்பொருளை உறுதி செய்தல்; சோதிடம்-வைதிகச் சடங்குகள் செய்வதற்குரிய காலத்தைக் கோள்நிலையைக் கொண்டு தீர்மானித்தலும், கோள்

நிலையால் உயிர்களுக்கு ஏற்படும் பலன்களை அறிதலும்; கல்பம்-வைதிகச் சடங்குகளின் செயல்முறை விளக்கம்.

262 எண்ணெண்கலை – அறுபத்து நாலு கலைகள்; வடகலை-சமஸ்கிருதம்.

263. நால்ஏழாம் ஆகமம் - இருபத்தெட்டு சிவாகமங்கள், அவையாவன;- காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம் தீப்தம், சூட்சுமம், சகச்சிரம், அம்சுமான், சுப்ரபேதம், விஜயம், நிச்வாசம், ஸ்வயம்பூ, ஆக்னேயம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகபிம்பம், ப்ரோத்கீதம், லளிதம், சித்தம், சந்தானம், சர்வோத்தமம், பாரமேச்வரம், கிரணம், வாதுளம்; ஈட்டம்—வலிமை, ஆகமத்தின் வலிமையாவது மெய்ப்பொருளை ஐயந் திரிபற விளக்குதலாம்; வீட்டுநெறி-முக்திக்குரிய வழி.

264. பதினெண்புராணம்—சைவம், பவிஷ்யம், மார்க்கண்டம், இலிங்கம், காந்தம், வராகம், வாமனம், மச்சம், கூர்மம், பிரம்மாண்டம், காருடம், நாரதீயம், விஷ்ணு, பாகவதம், பிரமம், பதுமம், ஆக்னேயம் பிரமகைவர்த்தம் என்பன;

''பிரமம்நற் பதுமம் வைணவம் சைவம்
பேர்உல கேத்துபா கவதம்
அருமறை தெளித்த பவுடிகம் நார
தீயம்மார்க் கண்டம்ஆக் நேயம்
கருதரும் பொருள்சேர் பிரமகை வர்த்தம்
இலிங்கம்நல் வராகம்மெய்க் காந்தம்
மருவுவா மனம்சொல் கூர்மம்நீள் மச்சம்
காருடம் சிறந்தவா யவியம்''

(கூர்மபுராணம்–பூர்வகாண்டம் 1–8)

பிரம்மாண்ட புராணம் என்பதுவும் வாயவியமும் ஒன்றே; கோல்தொடியார் – அழகிய வளையல்களை அணிந்த மகளிர்.

265. உவந்து அன்பொடும், மகிழ்ந்து ஆதரித்தே; சேடியர்-தோழியர்.

266. துதைந்திருக்குங்காலை—நெருக்கமாகக் கூடியிருக்கும்போது; எற்றும்—அடிக்கும்.

269. அனகன்-பேரழகுடையவன்; அமலன்-மலங்கள் இல்லாதவன்; அசலன்-அசைவில்லாதவன், நிலைபேறுடையவன்; மனவகன் எனற்பாலது எதுகை நோக்கி விகாரமாயிற்று, உள்ளத்தில் உறைபவன், அல்லது அகமனன் என மாறிக்கொள்ளினும் அமையும், உள்ளத்தே நிலைத்த தலைவன் என்றவாறு "விரும்பும் அடியார் எண்ணகத்தாய்" என்பது திருவாசகம் (20-9); கனகன்-இரணியாட்சன்.

270. வெருவ—அஞ்சும்படி; விதலை-நடுக்கம்; அரி-இரட்டுறமொழிதலாகச் சிங்கம், திருமால் என இருபொருள் தந்து நின்றது; பிரகலாதனுக்காகத்தூணில் நரசிங்கமாகத் திருமால் வந்த வரலாறு வெளிப்படை.

271. பெரியன் சிறியன்-இவ்வுலா பனிரண்டாம் கண்ணியும் உரையும் காண்க; அதுலன் — நிகரற்றவன்; தெளிவன்-எப்போதும் அறிவிலே தெளிவை உடையவன்; அகுலன்-பிறவாயாக்கைப் பெரியோன் ஆகையால் குலம் இல்லாதவன், "சங்கறுப்ப தெங்கள் குலம் சங்கரற்கிங் கேதுகுலம்" என்பது தனிப்பாடல்; அறிவன் - ஞானமே வடிவானவன்; வரதன்-வேண்டுவோர் வேண்டுவதே ஈபவன்; அருவன் — உருவம் இல்லாதவன்;

272. விபுலன்—பெருமைமிக்கவன்.

273. கைத்தாய்—வளர்ப்புத்தாய்

274. நாடிப்புழை-சுவாசக்குழாயின் துவாரங்கள்; இருகால்—இடைகலை, பிங்கலை என்னும்

இரண்டு மூச்சுகள், இவை முறையே இட வல நாசிப் புழையின் வழி விடப்படுவன; சலம் - வஞ்சனை; இவற்றின் விரிவை,

''ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்
ஆறுதல் கும்பகம் அறுபத்து நாலதில்
ஊறுதல் முப்பத் திரண்டது ரேசகம்
மாறுதல் ஒன்றின்கண் வஞ்சக மாமே''

(திருமந்திரம் 568)

என்பதன் விரிவுரையிலும் பிற யோக நூல்களிலும் காணலாம்; ஆறாதாரம்-மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்பன, மனித உடலில் இவற்றின் இடங்கள் முறையே குதம், குய்யம், நாபி, இதயம், அடிநா, நெற்றி என்பனவாம்; ஆதார நலம் அறிதலாவது மூலாதாரத்தில் உறங்கிக் கிடக்கும் குண்டலினி சக்தியை யோக சாதனையால் எழுப்பி மேலேற்றி ஆஞ்ஞைவரை படிப்படியாக எட்டச் செய்தல்; ஆதாரத் தலம் அறிந்து எனினும் பொருந்துமாயினும் சுவடிப்பாடமே கொள்ளப்பட்டது.

**275.** மதிய மண்டலத்தில் அமுது உடலம் தேக்கியே – இதன் விரிவான விளக்கத்தைத் திருமந்திரம் கேசரியோகப் பகுதியிலும் (**799–824**) யோக சாத்திரங்களிலும் காணலாம்; சோதி நினைந்து- இறைவனைத் தியானித்து.

**276**. அட்டாங்க யோகம்-இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தியானம், தாரணை, சமாதி என்னும் எட்டு உறுப்புக்களை உடைய யோகநெறி.

''இயமம் நியமமே எண்ணிலா ஆதனம்
நயமுறு ப்ராணாயா மம்பிரத் யாகாரம்
சயமிகு தாரணை தியானம் சமாதி
அயமுறும் அட்டாங்கம் ஆவதும் ஆமே''

(திருமந்திரம் 552)

இவற்றின் விரிவை விளக்கமான யோக நூல்களில் காணலாம்.

277. செஞ்சடையானின் மட்டவிழும் பாதம் என இயையும் தேன் சொரிகின்ற தாமரைத் திருவடி என்றபடி; தெளிந்து-இறைவன் திருவடியை அடைதலே பிறவிப் பெரும்பேறாகிய வீட்டின்பமாம் என உணர்ந்து,

''திருவடி யேசிவ மாவது தேரில்
திருவடி யேசிவ லோகம்சிந் திக்கில்
திருவடி யேசெல் கதியது செப்பில்
திருவடி யேதஞ்சம் உள்தெளி வார்க்கே''
(திருமந்திரம் 138)

என்பது தமிழ் ஆகமம்; கஞ்ச மலர்—தாமரைப்பூ

278. ஆரூரன் – திருவாரூரில் எழுந்தருளி யுள்ள தியாகராசப் பெருமான்; ஆரூரர்–சுந்தரமூர்த்தி நாயனார்; உம்மைகள் எண்ணுப்பொருளன; மிண்டர்-விறல்மிண்ட நாயனார், இவர் கேரளத்துச் செங்குன் றூரில் பிறந்து திருவாரூரில் வாழ்ந்த வேளாளர்; சுந்தர மூர்த்தி நாயனார் திருவாரூர்க் கோயிலுக்கு வழிபடச் சென்றபோது தேவாசிரய மண்டபத்திலிருந்த அடியார் களை வணங்காமற் சென்றதால், அவரையும் அவரால் வழிபடப்பெறும் தியாகராசரையும் தம்மால் நினைக்க வும் தகாதவர்கள் என நீத்துவிட்டார்; இறைவனின் ஆணைப்படி ஆரூரர் திருத்தொண்டத்தொகை பாடிய பின்மகிழ்ச்சியடைந்தார்; இறுதியில் சாரூபம் பெற்றார்; இது.''விறன்மிண்டர் தக்க வகையால் தம்பெருமான் அருளி னாலே தாள்நிழற்கீழ் மிக்க கண நாயகர்ஆகும் தன்மை பெற்று விளங்கினார்'' [பெரிய. விறன்மிண்ட. 10) என்பதனால் அறியப்படும்.

279. ஊறுவரில் புகுந்தே தீர்த்து உதவி செய்வார் என இயையும், செய்வாராகிய எறிபத்தர் என்க, வினையாலணையும் பெயர்; சிவகாமியார்-சிவகாமியாண்டார்;

280 கோ வளவன்-அரசனாகிய சோழன்; வேழக்கை-யானையின் துதிக்கை; பாடு அறவே-பெருமை குன்றும்படி; எறிபத்த நாயனார் — கருவூரில் வாழ்ந்திருந்தவர்; சிவனடியார்கட்கு ஏதேனும் தீமை ஏற்பட்டால் அதனை விலக்குவதற்காக எப்போதும் கோடரி ஏந்தியிருப்பார்; ஒரு நாள் சிவகாமியாண்டார் என்னும் அடியார் இறைவனுக்கு மலர் கொண்டுவரும் போது பட்டத்துயானை பூக்குடலையைப் பறித்து எறிந்தது; உடனே எறிபத்தர் அங்கே தோன்றி யானையையும், அதன் செயலைத் தடுக்காத பாகரையும் கொன்றுவிட்டார்; செய்தியறிந்த சோழமன்னன் அங்கே விரைந்துவந்து தன்னையும் கொல்லுமாறு தன் உடைவாளை எறிபத்தரிடம் நீட்டினான்; அதனை வாங்கி நாயனார் தம் கழுத்தை அரிந்துகொள்ள முயல்கையில் இறைவன் தோன்றிக் காட்சியளித்து இறந்தவர்களை எழுப்பினார்; இவரும் சாரூபம் பெற்றார் என்பதைச் சேக்கிழார் பெருமான் அருளும், ''நலம்மிகு கயிலை வெற்பில் கொற்றவர் கணத்தின் முன்னாம் கோமுதல் தலைமை பெற்றார்'' (பெரிய. எறிபத்த. 55) என்னும் திருவாக்கால் அறியலாம். சிவகணங்கள் எல்லோருமே இறைவனின் திருவடிவம் பெற்றவரென்பது வெளி

281. கருத்தா — முழுமுதற் காரணன்; கண்டார் ஆகிய விசார சருமர், எழுவாய்; கண்டு, இரங்கி, நீத்து, ஆமேய்த்து, பால்ஏற்று, தாள் அறவே வெட்டிய தண்டீசர் என (284) முடிவுபெறும்; கோவை – பசுவை.

282 அவனை நீத்து என மாறுக, ஆயனை விலக்கி; தூய அற ஆன்-புனிதமான தருமத்தின் உருவமாகிய பசு.

283-284. கடம்-குடம்; மால் மேவு தாள்-திருமாலால் விரும்பப் பெறும் திருவடி; சண்டேசுர

நாயனார் எனப்படும் தண்டீசர் வரலாறு வெளிப்படை. வேளை-மன்மதனை

286. அணிமாதிகளாம் சித்தி:- அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் எனப்படும் எண்வகைச் சித்துக்கள்; அவற்றுள் அணிமா-அணுவைப்போல மிகச் சிறிய உருவத்தராதல்; மகிமா-மிகப் பெரிய வடிவத்தர் ஆதல்; கரிமா-தன் உடல் மிகமிக அதிகக் கனமுற்றது ஆதல்; இலகிமா-உடல் கனமே இல்லாமல் மிகமிக நொய்யதாதல்; பிராப்தி - நினைத்த மாத்திரத்தில் நினைத்த இடத்திற்குச் சென்றுவர வல்லவராதல்; பிராகாமியம்-நினைத்த பொருள்கள் அனைத்தையும் உடனே அடைய வல்லவராதல்; ஈசத்துவம்-எளிதாகத் தலைமையை யடைதல்; வசித்துவம் - அனைவரையும் கவர வல்லவராதல்;

288. மிழலைக் குறும்பர் - பெருமிழலை என்னும் ஊரினர்; சுந்தரமூர்த்தி சுவாமிகளையே தியானத்து வந்த யோகி; சுந்தரர் மறுநாள் கயிலை செல்ல உள்ளார் என்பதனை முதல் நாளே அறிந்து தம் யோகசாதனையால் கயிலை சென்றடைந்தார். ''சிவன்தாள் இன்றேசென் றடைவன் யோகத்தால்'' (பெரிய. பெருமிழலைக்-9) எனக் கயிலைமுன் அடைந்தமையின் இவர்பெற்ற முத்தி சாரூபம் என உய்த்துணரப் பெறும். என்னை? ''அலர்மதிமண் டலத்தின் முகமார்க்க அமுதுடலம் முட்டத் தேக்கி முழுச்சோதி நினைந் திருத்தல் முதலாக வினைகள் உகமார்க்க அட்டாங்க யோகம் முற்றும் உழத்தல்உழந் தவர்சிவன்தன் உருவத்தைப் பெறுவர்'' (சிவஞான சித்தியார் 273) என்பது சாத்திரமாதலின்.

289. திருப்புகலி ஈசன்- சீகாழியில் கோயில் கொண்டுள்ள பிரமபுரீஸ்வரர்;

290. சம்பந்தர்—திருஞானசம்பந்தர்; சரோருகம்- தாமரை; நம்பி—சிவபெருமான்; கணநாதர்-இவர் சீகாழியில் வாழ்ந்துகொண்டு கோயில் திருப்பணி செய்துவந்த வேதியர்; திருஞானசம்பந்தப் பெருமானையே எப்போதும் தியானித்திருந்து சாரூபம் பெற்றார்; உம்பர் எழில் மேலான தெய்வீக அழகு.

292. பாசவினை ஒத்து – இருவினையொப்பு ஏற்பட்டு; இதனை மாதவச் சிவஞான யோகிகள் தம் மாபாடியத்து, ''ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்புமாதல் இன்றிப் புண்ணியபாவம் இரண்டினும் அவற்றின் பயன்களினும் ஒப்ப உவர்ப்பு நிகழ்ந்து, விடுவோனது அறிவின்கண் அவ் விருவினையும் அவ்வாறொப்ப நிகழ்தலே ஈண்டு இருவினையொப்பு என்பதற்குப் பொருள்'' (சிவஞானபோத மாபாடியம் 8 ஆம் சூத். முதல் அதிகரணம்) என விளக்குவார்; மலபாகம்-மலபரிபாகம்-16 ஆம் கண்ணி உரையில் குறிக்கப் பெற்றது; காசு இருள்-குற்றம் மிகுந்த ஆணவமலம்.

293—294. கனகசபைநாதர் வடிவில் ஞான குருவாக வந்திருப்பது சகலருக்குத் தீட்சைவழியில் முக்தியருளவே; இது ஆன்ம பரிபக்குவத்திற்கு ஏற்ப அமையும் என்பது கருத்து; சிந்தை கொளா – சிந்தை கொண்டு, செய்யா என்னும் வாய்பாடு, அவாவுற்று நின்றாள் என்பதனைக் கொண்டு முடிந்தது; ஆக்கம்-செல்வம்.

இம் மங்கைப் பருவப் பகுதியில் விறன்மிண்டர், எறிபத்தர், தண்டியடிகள், பெருமிழலைக் குறும்பர், கணநாதர் ஆகிய ஐந்து நாயன்மார்கள் இடம் பெற்றுள்ளனர்.

## மடந்தை

295. அணியாள்- அருகே இருந்தவள், அழகு உடையவள் எனினும் ஆம்; நவ்வி-மான்; மடந்தை-பதினாறு வயதுப்பெண்; தனத்தாள்—நகிலினள்; அவ்வி-அழுத்தமாக.

**296.** உள்ளும்-நினைக்கும். அன்ன நடையாள் என்புழி அன்னப்புள்ளைப்போன்ற அழகிய நடையை உடையவள் என்பது மட்டுமன்றி அன்னம் நீர்கலந்த பாலைத் தேர்ந்து நீரை நீக்கிப் பாலைமட்டும் பருகுதல் போன்று பலகலையும் பார்த்துப் பதிசிவன் என்று தெளிந்து உணரும் நீர்மையை உடையவள் என்பது தொனி.

**297 – 298.** தீவிரதர சத்தி நிபாதத்தையே இவர் மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் என நான்காகப் பகுத்துக்கொள்கிறார், இவற்றுள் முதலாவதாகிய மந்த தீவிரதரம் மடந்தையாகக் காட்டப் பெறுகிறது; மற்றவை முறையே தொடரும்; வானின் வரு துளியைத் தேடும் பறவை என்றது சாதகப்புள்ளை; இது ஆகாயத்திலிருந்து வரும் தூய நீரை உண்டு வாழும் என்பது கவி மரபு; இது பற்றியே பிள்ளைப்பெருமாள் அய்யங்கார், ''தண்தா மரைச்சுனையில் சாதகமும் வேடுவரும் விண்தாரை நாடுகின்ற வேங்கடமே''
(திருவேங்கடமாலை 97) என்கிறார்.

**299** மூன்றும்-சரியை, கிரியை, யோகம், முற்றும்மை.

**300.** உலகுமித்தை என்று மெய்ஞ்ஞானிகள் பாலில் வந்து பத்தி செய்து என இயையும்; மித்தை-பொய் என்பது சொற்பொருள், இங்கு நிலைத்து நிற்காமல் அழியும் தன்மையை உடையது என்றே கொள்ள வேண்டும். உலகம் என்பது இல்லாத பொருள். நம் மனத்தால் உள்ளது போலத் தோன்றுகிறது எனப் பொருள் கொள்வது ஏகான்மவாதமாகிய வேதாந்தம் ஆகும்; இது சித்தாந்தத்திற்கு முரணானது.

**301.** புடை மன்னிவர-அருகே நெருங்கிவர,

**302.** *சீதக்* கருமுகில் – குளிர்ச்சியும் கரிய நிறமும் பெற்ற மேகம்; குளத்தின் பச்சை நிறத்திற்கு

மேகமும், படிந்து நீந்தி விளையாடும் பெண்ணிற்கு மின்னலும் உவமையாயின.

*303, 304*. உன் வனப்பு உருவம்-உனது அழகிய, வடிவத்தை; மா - அழகிய, ஒளிமிக்க எனினுமாம்; சைவலம் — நீர்ப்பாசி, இது கூந்தலுக்கு உவமை,

''கொண்டலும்கூந் தற்பனையும்
கொன்றைக்கா யும்மிருளும்.
தண்டலையும் கார்மணலும்
சைவலமும்-வண்டினமும்
தண்குழலை ஒப்பாம்.''

(உவமான சங்கிரகம் 1)

கமலம்-தாமரை, முகத்திற்கு உவமை; ஆம்பல்-குமுதம், வாய்க்கு இணை,

'' பகர்குமுதம் செய்யவாய் ஒப்பாம்''

(இரத்தினச் சுருக்கம் 26)

சங்கு-கழுத்திற்கு உவமை,

''கமுகும் சங்கமும் கன்னியர் மிடற்றுக்கு
உவமை ஆகும்என் றுரைத்தனர் புலவோர்'

(அறுவகை இலக்கணம் 526)

வால் ஆமை-இளமையை உடைய ஆமை, புறவடிக்கு உவமை,

''செம்மையிற் சிறந்து வெம்மைய வாகி
ஊன்பெறப் பிறங்கி ஒழுகுநீர் ஆமைக்
கூன்புறம் பழித்த கோலப் புறவடி''

(பெருங்கதை — இலாவண காண்டம்-15:56-58)

தகு நெண்டு—தனக்குரிய இலக்கணத்திற்கேற்றபடியுள்ள நண்டு, இது முழங்கால்களுக்கு உவமை, 'அலவனாம் என்றவிர் முழந்தாள்களும்' (அறுவகைஇலக்கணம்571) சேல்-ஒருவகை மீன், கண்ணிற்கு நிகர்; பயத்தோடும் போயது - இத் தலைவியின் உறுப்புக்களைக் கண்டு தாம் அவற்றிற்கு நிகராக மாட்டோம் என நாணத்-

தோடும் அஞ்சி அகன்றன என்க; ஒரு பெண் நீரில் மூழ்கி விளையாடும்போது அக் குளத்திலுள்ள தாவரங் களும் உயிரினங்களும் விலகிச் செல்லுதல் இயற்கை; இதனைத் தலைவியின் உறுப்புகளுக்கு அஞ்சி ஓடு-வதாகக் கூறியது தற்குறிப்பேற்றம். பொங்கும் பயத்தோடும் போயது என்புழி, நீ படிவதால் மேலே எழும்புகின்ற தண்ணீரோடுசேர்ந்து (பாசி முதலியன) அகன்றுவிட்டன என உண்மைப்பொருளும் தொனிப் பது ஒரு நயம். இப்பொருளில் பயம் - நீர்; போயது எண்வழுவமைதி.

இங்கு உவமையாகக் கூறப்பெற்ற சைவலம் முதலிய ஏழு பொருள்களும் குளத்தோடு தொடர்பு உடையவனவாதலின் இவ்விரு கண்ணிகளில் பயின்ற அணியை மாறனலங்கார முடையார் மரபுவமை என்பார்; ''மரபினும் வருவதோர் மரபுடைத் தென்ப'' என்னும் நூற்பாவையும், 'உவமப் பொருள் ஒரு குழு வினுள் ஒரு மரபாகப் பல உவமம் வருவது மரபுவமை ஆம் இலக்கணத்தை உடைத்தென்று கூறுவர் சான்றோர்' என்னும் அதன் உரையையும் காண்க. (மாறனலங்காரம் 20); இவ் விரு கண்ணிகளும்'' மகளிர் விளையாடும் பளிங்குமாடத்தை ஒரு குளம் என்றும் அவர்களை நீரர மகளிர் என்றும் மயங்கிய ஆடவரைக் குறிக்கும் குமரகுருபரரின் கற்பனையோடு ஒப்புமையுடையது.

''பளிங்கினில் குயின்ற பனிநிலா முற்றத்து
விளங்கிழை மடந்தையர் விளையாட் டயர்தரக்
கொங்குவார் குழலும் குவளைவாள் விழியும்
பங்கய முகமும் பத்திபாய்ந் தொளிர்தலிற்
சைவலம் படர்ந்து தடங்கயல் உகளும்
செய்யபூங் கமலச் செழுமலர் ஓடைஎன்
றாடவர் சிற்சிலர் நாடினர்''

(பண்டார மும்மணிக் கோவை 20: 13–19).

*305.* கலை—உடை.

*307-308.* அனைத்தும் அறிவன்—சர்வக்ஞன்; அனாதியே போதன் — இயற்கையாகவே அறிவு நிறைந்தவன்; அனைத்தும் வியாபகன்-பார்க்கும் இடம் எங்கணும் ஒரு நீக்கமற நிறைந்தவன்; அனைத்தும் சுதந்திரன்-எல்லாவகையிலும் முழு உரிமை உடையவன்; நித்தியன்-அழிவே இன்றி நிலையானவன்; தொல் அனந்த சத்தி துதைந்த—பழமையானதும் கணக்கற்றது மான ஆற்றல் பொருந்திய, தொல் சத்தி என்றதனானே இடையில் ஈட்டப்பட்டதாகாமல் இயற்கையாகவே தன்னோடு பொருந்திய ஆற்றல் என உணர்த்தியவா றாயிற்று, ''சென்றடையாத திருஉடை யானை'' (தேவாரம் 1—98—1) என்பதைப் போல; பெரும் தீர்த்தன்—தன்னைச் சரணாக அடைந்தவர்களைத் தூய்மைப்படுத்தும் திறம் மிக்கவன்; தூயோன்—புனிதமான உடலை உடையவன்; அதந்த்ரன்—மிகுதி யான களிப்பை உடையவன், அ என்பது இங்கு மிகுதியை உணர்த்தும் முன்னொட்டு. அகோரன் என்புழிப் போல.

எண்குணத்தான் என்னும் திருக்குறட் சொற் றொடரின் சிறப்புரையில் சைவாகமத்துட் கூறப்பட்டன வாகப் பரிமேலழகர் எடுத்துக்காட்டிய தன்வயத்தன் ஆதல் (சுதந்திரன்), தூய உடம்பினன் ஆதல் (தூயோன்), இயற்கை உணர்வினன் ஆதல் (அனாதியே போதன்), முற்றும் உணர்தல் (அனைத்தும் அறிவன்), இயல்பாகவே பாசங்களின் நீங்குதல் (சுத்தன்), பேரருள் உடைமை (தீர்த்தன், அருள்பற்றியே அடைந் தாரின் மாசுகளைப் போக்குகிறார்), முடிவில் ஆற்றல் உடைமை (தொல் அனந்த சத்தி துதைந்தவன்), வரம்புஇல் இன்பம் உடைமை (அதந்த்ரன்) என்னும் எட்டு இறைப் பண்புகளும் இங்கே கூறப்பட்டதைக் காண்க.

*311-312.* அரக்கு – கொம்பரக்கு, சிவப்பு மெழுகு; மண்டும்–மிகுதியான; மயல் கொண்டு மண்டும் வெயிற்கு அரக்கு உருகுமாபோல் என இயையும்; நான்கன் உருபு மூன்றன் பொருளில் வந்த மயக்கம்.

*313-314.* கல்லை உரு ஆக்குவபோல்-கல்லில் உருவச்சிலை வடிப்பதைப் போல; மண் முதல் ஐம்பூதம் பார், நீர், காற்று, தீ, ஆகாயம்; வன்பொறி–அறிகருவி களாகிய மெய், கண், வாய், மூக்கு, செவி ஆகிய வற்றுடன் தொழிற் கருவிகளாகிய நாக்கு, கால், கை, குதம், குய்யம் ஆகியவற்றையும் கொள்க; இவை பத்தையும் கூறவே ஐந்து புலன்களாகிய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன தாமே பெறப்படும்; சித்தம் முதல் கரணம் -- சித்தம், மனம், புத்தி, அகங்காரம் ஆகிய அந்தக்கரணம் நான்கு; மண் முதல் அகங்காரம் முடியக் கூறப்பெற்ற இவை இருபத்து நாலும் ஆன்மதத்துவம் எனப்படும்; கலாதி – காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்னும் வித்தியா தத்துவங்கள் ஏழு; சுத்தமாம் தத்துவம்–சுத்த வித்தை, ஈஸ்வரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஆகிய சிவதத்துவங்கள் ஐந்து; இவ்வாறு தத்துவங்கள் மொத்தம் முப்பத்தாறாயின, இவற்றின் விளக்கத்தை விரிவான நூல்களிற் காணலாம்; உயிர்ப்பு-இங்குப் பிரித்தறிதல் என்ற பொருளில் ஆட்சி; இத்தின்-இந்தத் தத்துவங்களின்.

*315.* உருவ தரிசனமும் ஒண் சுத்தியோடு- தசகாரியத்தில் முதல் மூன்றாகிய தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி என்பன; தசகாரியம் என்பது பக்குவம் பெற்ற உயிர் தன்னின் வேறாக உலகத்தைக் காண்டலும், தன்னைத் தானாகக் காண்டலும் சிவமாகக் கண்டு அதிற் பொருந்தி இன்பந் துய்த்தலுமாகிய மூன்று நிலைகளைப் பத்து அவத்தை களாகப் பிரித்து அறிவித்தல் ஆகும் அவற்றுள் தத்துவங் களையும் அவற்றின் செய்கைகளையும் தனித்தனி

அறிதல் தத்துவரூபம்; தத்துவம் சடப்பொருள் என அறிதல் தத்துவ தரிசனம்; தத்துவம் நிலையானவை அல்ல என உணர்தல் தத்துவ சுத்தி.

''தத்துவம் அனைத்தும் நோக்கித்
தனித்தனிச் செயல்கள் காண்டல்
ஒத்ததன் உருவம் ஆகும்;
ஒன்றையொன் றுணரா தீது
சத்தியம் சடமே என்னத்
தான்அறிந் திடுதல் காட்சி;
நித்தியம் அன்று சின்னாள்
நீங்குதல் என்றல் சுத்தி''.
(அம்பலவாண தேசிகர் தசகாரியம்—25)

கேவலம்-உயிர் தனுகரணங்களைப் பொருந்தாமல் ஆணவமலத்தோடு மட்டும் கூடியிருக்கும் நிலை; இந்நிலையில் இருக்கும்போது குருடன்கையில் கோல் கொடுப்பதுபோல இறைவன் பருஉடம்பைக் கொடுத்துக் கொஞ்சம் அறிவூட்டுகிறான். ஆணவத்தோடு கன்மம் மாயைகளையும் பெற்றுள்ள இந்த நிலை சகலம் எனப்படும். இத்தகைய கேவல சகல நிலைகளில் பசுஞான பாசஞானங்களே விளங்கும். இதன் விரிவை எல்லாம் விளக்கமான தசகாரிய நூல்களிலும் அவற்றின் உரைகளிலும் காணலாம்; இது அடுத்துவரும் ஆன்மரூபம் முதல் சிவபோகம் வரையான மற்ற ஏழு அவத்தைகட்கும் கொள்க; மருவு அதீதம் — இந்த மூன்றினுக்கும் மேற்பட்ட நிலையாவது; மருள் ஆரும்-இயல்பாகவே ஆணவத்தோடு பொருந்தியுள்ள.

**316.** ஆதிஉயிர்-(படைக்கப்படாமல்) முதற் பொருளாகிய ஆன்மா; உயிர் உருவம், உயிர்க்காட்சி, உயிர் ஞானம் என்க; தசகாரியத்துள் இவை ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்ம சுத்தி என வழங்கப்படும்; இவற்றுள் உடல் பொறிகள் முதலியவற்றைச் சடம் என்றும், தன்னைச் சித்துப்பொருள் என்றும் அறிதல்

ஆன்மரூபம்; தான் பாசமும் அல்லன், பதியும் அல்லன், பசுவே என உணர்தல் ஆன்ம தரிசனம்; திருவருளோடு கூடினாலும் ஆன்மா பதியன்று, பசுதான் என்னும் உணர்வோடு தற்போதம் கெட்டு நிற்றல் ஆன்ம சுத்தி;

''ஆசறவே தன்னறிவாய் மூன்றுமுண்டாய்த்
தோன்றுங்கால்
அதுரூபம்; ஆங்கறிவற் றுணைக்காண்டல்
தரிசனமாம்;
ஏசறவே காட்டியதை எப்போதும் இதுகாட்டே
இகழ்ந்திருந்தோம் இந்நாளும் என அழுந்தல்
சுத்தியதே''
(தட்சிணாமூர்த்தி தேசிகர் தசகாரியம் 7)

பொதுவாகத் தசகாரிய நூல்கள் தத்துவம், ஆன்மாவை அடுத்துச் சிவத்தைக் கூறும். இவர் ஆன்மாவிற்கும் சிவத்திற்கும் இடையே பரையாகிய சத்தியையும் சேர்த்துப் பரைக்காட்சி, பரையோகம், பரைபோகம் என மூன்றைச் சேர்த்துள்ளார். இவற்றின் விரிவை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

***318-319.*** உயிர்கட்குத் தன்னை விளக்குபவன் சிவபிரான் ஒருவனே என்பதைத் தனதறிவில் அநுபவ பூர்வமாகக் காண்டல் சிவரூபம் எனப்படும்,

''பவ்வமீண் டகலப் பண்ணிப்
பாரிப்பான் ஒருவன் என்றே
செவ்வையே உயிருட் காண்டல்
சிவரூபம் ஆகும் அன்றே''
(உண்மைநெறி விளக்கம் 3)

எங்கும் சிவமே தோன்றுவதை அநுபவத்தில் உணர்ந்து, சகல கேவல நிலைகளைக் கடந்து, அருளை எய்திச் சிவஞானத்தை அடைதல் சிவதரிசனம் எனப்படும்; சிவத்தையன்றி வேறு ஒன்றிற்கும் செயல் இல்லை என்னும் உணர்வோடு அந்தப் பரம்பொருளுடன் கலப்பதே சிவயோகம் எனப்படும்,

''எப்பொருளும் அசைவில்லை என அந்தப் பொருளோ
டியைவதுவே சிவயோகம் எனும் இறைவன் மொழியே''
(உண்மைநெறி விளக்கம் 5)

சிவயோகியர் தம்செயலற்று, எந்தக் காரியங்களைச் செய்தாலும் அவர்கள் சிவத்தோடு கலந்திருப்பதால் இறைவன் அவற்றைச் சிவமயமாக்கி விடுவான். எல்லாமே சிவபோகமாகப்பெற்ற இந்நிலை சிவபோகம் எனப்படும்.

''பாதகங்கள் செய்திடினும் கொலைகளவு கள்ளுப்
பயின்றிடினும் நெறியில்லா நெறிபற்றி வரினும்
சாதிநெறி தப்பிடினும் தவறுகள்வந் திடினும்
தனக்கெனஓர் செயலற்றுத் தானதுவாய் நிற்கில்,
நாதன் இவன் உடல்உயிராய் உண்டுறங்கி நடந்து
நானாபோ கங்களையும் தானாகச் செய்து
பேதமற நின்றிவனைத் தானாக்கி விடுவன்;
பெருகுசிவ போகம் எனப் பேசுநெறி இதுவே'',
(உண்மைநெறி விளக்கம் 6)

சிவரூபம் முதலிய தசகாரிய விரிவைச் சாத்திர நூல்களில் விளக்கமாகக் காண்க;

''செப்பரிய தசகாரியங்கள் என்னும் அஞ்சவத்தைத் தெளிவுண் டாமே'' (சுவாமிநாத தேசிகர் தசகாரியம் 7) என்றபடி தசகாரியங்களால் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் அஞ்சவத்தைத் தெளிவு என்பதை விரிந்த நூல்களில் காணலாம்; கதலித் தண்டு-வாழைத்தண்டு.

**320.** கொளுவுமாபோல் - கொளுத்துவதைப் போல.

**321.** இலங்கல் – (மண்ணில் இருந்தாலும் தெளிந்து) விளங்குதல்; துலங்கு - புலன்களால் அறியப்படுகின்ற.

322. கான்ற சோறு-வாந்தியெடுத்த உணவு; ஒரு முறை அநுபவித்துப் பார்த்துவிட்ட நுகர்ச்சிக் காகவே மறுபடியும் ஏங்குதல் கான்றதை விரும்புதலுக்கு நிகர் என்றவாறு. இவ் வுவமையை, ''கலந்து ஊடிக் கொண்டாள் முற்றான் மடற்பனை ஊர்வதென் கின்ற முறைதவறு; கற்றார் உரைப்பினும் கான்றதற் கேங்கும் கணக்கொக்குமே'' (வண்ணச்சரபம் சுவாமிகளின் திருச்செந்தூர்க் கோவை-95) என்புழிக் காணலாம்.

இம் மடந்தைப் பருவப் பகுதியில் அறுபத்து மூவரில் ஒருவரும் இடம்பெறவில்லை.

### அரிவை

323. பிணிகூழை-கட்டப்பெறும் (அதாவது ஐவகையாகப் புனையப்படும்) கூந்தல், வினைத்தொகை; மன்னு வம்பின் கட்டறுத்த வண்குயத்தாள்-சிலேடை

1. பொருந்திய முலைக்கச்சை மீறி வளர்ந்த பெருத்த நகில்களை உடையவள்

2. பொருந்துகின்ற தீமைகளின் பிணிப்பை நீக்குவதாகிய தருப்பையைப் போன்ற கூர்த்த அறிவினை உடையவள், இப்பொருளில் குயம் - தருப்பை, உவம ஆகுபெயராக அறிவை உணர்த்தியது; பொன் அரிவை-திருமகளைப் போன்ற அரிவைப் பருவத்தாள், பொன் எனற்குப் பொதுவாக அழகிய எனினுமாம்; அரிவை பத்தொன்பது வயதுப் பெண்.

324. புலன்-அறிவு; மதர்விழி - செருக்கைக் காட்டும் கண்கள், செறுக்கும் விழி என வினைத்தொகை ஆக்கினுமாம்.

325. மீது ஈனும்—முன்னால் தான் பெற்ற.

326. கற்றா-இளைய கன்றை உடைய பசு; கற்றா மீது ஈனும் கன்றை, தனை அகன்ற கன்றை உள்ளி எனத் தனித்தனி இயையும்; முற்பவம்-முந்தைய பிறவி.

327. தெள்ளிமை-அறிவுத்தெளிவு.

328. உலகுடல் - உம்மைத்தொகை, உலகு புவன போகங்களையும், உடல் தனு கரணங்களையும் சுட்டின.

329. தந்திரியாழ்-நரம்புகளையுடைய இசைக் கருவி, இக் கண்ணியின் இரண்டாம் அடியில் ஏகாரத்திற்கு யா என்னும் உயிர்மெய்யெழுத்து மோனையாக வந்துள்ளது-இரண்டாம் சீரின் ஈற்றசையில். பழைய யாப்பிலக்கணங்களில் இதற்கு இலக்கணம் கிடைக்காது. ஆனால், ''இயங்குவ நிற்ப வான யாவையுங் கலைமா தோடு'' (பிரபுலிங்கலீலை-கைலாசகதி-2); ''ஏதிலான் போல நின்றான் யார்கணும் பந்தம் இல்லான்'' (வில்லிபாரதம் – பதினைந்தாம் போர் – 28) என்பன போன்ற மிகுதியான இலக்கிய வழக்கு நோக்கி வண்ணச் சரபம் சுவாமிகள்,

''இகர எகரமும் இவற்றின் நெடில்களும்
யகரயா காரமும் இசையும்மோ னைக்கே''
(அறுவகை இலக்கணம் 487)

என இலக்கணம் வகுக்கிறார்.

330. வீக்கி – நரம்புகளைக் கட்டி, சுருதி சேர்த்து என்றபடி; கருதி-சிந்தித்து; தூக்கி-உயர்த்தி, பாராட்டி;

332. விரைவுற்று–(கோவிலுக்கு) வேகமாகச் சென்று; அந்தும் தூபம்-(தமக்கு வழிபாட்டு முறையாகப்) பொருந்திய நறும்புகையிடுதல்;

333. திருப்பனந்தாட் சாய்ந்த......திருத்தும்-தாடகை என ஒரு மங்கை (இராமாயண அரக்கி அல்லள்) திருப்பனந்தாளில் வாழ்ந்திருந்தாள்; இவள் சிவநேசம் மிக்கவள். நாடோறும் இறைவனை மலர்சூட்டிவழிபட்டுவந்தாள். ஒருநாள் மாலைஅணிவிக்-கும்போது உடை நெகிழ்ந்துவிட்டது. முழங்கையால் அதை இடுக்கியவாறே மாலை சூட்ட முடியாமல்

தவித்தபோது சிவலிங்கம் சாய்ந்துகொடுத்து மாலையை ஏற்றுக் கொண்டது. பிறகு அது நிமிரவே இல்லை. மன்னன் யானைகளைக் கொண்டு இழுத்தும் பயன் தரவில்லை. கலய நாயனார் இதனையறிந்து தம் கழுத்தில் கயிறு கட்டிக்கொண்டு இழுக்கச் சிவலிங்கம் நேராக நிமிர்ந்தது.

*334.* கலயர் – குங்கிலியக் கலய நாயனார், திருக்கடவூரில் திருஞான சம்பந்தர் காலத்தே வாழ்ந் திருந்த வேதியர், கோவிலில் நாள்தோறும் குங்கிலியப் புகை இடுவதையே நியமமாகக் கொண்டிருந்தார்; வறுமை வந்தது; ஒருநாள் மனைவி தன் தாலியைக் கழற்றிக்கொடுத்து அதனை விற்று வீட்டிற்குத் தேவை யான பண்டங்களை வாங்கிவரச் சொன்னாள்; போகும் வழியில் குங்கிலிய வியாபாரி ஒருவன் நல்ல சரக்காகக் கொண்டுவந்தான். அதைப் பார்த்த கலயர் மாங்கலி யத்தைக் கொடுத்துக் குங்கிலியத்தை வாங்கி விட்டார்; அதனைத் திருக்கோயில் பண்டாரத்தில் சேர்த்துவிட்டு அங்கேயே தங்கிவிட்டார். இறைவனருளால் அவர் வீடு முழுவதும் நெல்லும் பொன்னுமாக நிறைந்துவிட்டது. அவர் திருப்பணியைத் தொடர்ந்து செய்துகொண்டு நலமாக வாழ்ந்திருந்தார். திருப்பனந்தாட் செய்தி முன்னே கூறப்பட்டது. இறுதியில் வீட்டுப்பேறடைந்தார்

சந்தனக் காப்பு அரற்கு முட்ட; சிலையில்— சந்தனக் கட்டையைத் தேய்க்கும் கல்லில்.

*335.* மூர்த்தி நாயனார்—மதுரையில் வணிகர் மரபில் தோன்றியவர்; கோவிலுக்கு நாள்தோறும் சந்தனம் அரைத்துக் கொடுத்து வந்தார்; மதுரை ஆட்சி சமணரிடம் சென்றதால் இவருக்குச் சந்தனக் கட்டை கிடைக்கவில்லை; அதனால் தம் கையையே சந்தனக்கல்லில் தேய்த்தார்; இறைவன் தோன்றித் தடுத்ததுடன் நாட்டாட்சியும் இவர்பால் வருமாறு செய்தார்; இவர் திருநீறு, உருத்திராக்கம், சடாமுடி

ஆகிய மூன்று சிவசின்னங்களையே அரசச்சின்னங்களாகக் கொண்டு அரசுபுரிந்தார். இறுதியில் இறைவனடி எய்தினார்; ஐம்முகனார்—ஐந்து திருமுகங்களை உடைய சிவபெருமான், இவை ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்யோசாதம் எனப்படும்.

*336.* முருக நாயனார் - திருப்புகலூர் அந்தணர்; திருக்கோவிலில் மலர்ப்பணி விடை செய்துவந்தார்; திருஞானசம்பந்தரோடு தொடர்புகொண்டு அவர் திருமணத்திற்குச் சென்று அங்குப் பலருடன் சோதியிற் கலந்தருளினார்.

*336.* சூலை விட்டு-சூலைநோயை அனுப்பி (உண்டாக்கி என்றபடி); சூலை விட்டு ஆண்டு அருகமதம் நீக்கி அருளி என்க.

*337.* சமணக் கோ - சமண மன்னனாகிய மகேந்திரவர்மன்.

*338.* மதகரி—மதம்பிடித்த யானை.

*339.* கல் ஆர்த்து-கல்லில் கட்டி, கார்க்கடல்—நீலச் சமுத்திரம்,

*342.* வேதியன் – அப்பூதி அடிகளின் புதல்வராகிய மூத்த திருநாவுக்கரசு.

*343.* கோயிற் கதவு திறக்கப்பாடியது திருமறைக்காட்டில்; பொற்காசு பெற்றது திருவீழிமிழலையில்; திருநாவுக்கரசர் வரலாறு அனைவரும் அறிந்த ஒன்று.

*345.* அப்பூதி அடிகள் வரலாறு வெளிப்படை; சிலம்பி—சிலந்திப்பூச்சி,

346. வல்லை—விரைவில்.

347. குன்ற வில்லியான் – மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபெருமான்; உரைப்பப் பெற்றார் என இயையும்.

348. பாணர் – நீலகண்டப்பெரும்பாண நாயனார்; கங்குலின்கண்-இரவில்.

349. பேணும் அனல் வேதிகை-தாம் தினந் தோறும் ஔபாசனை செய்து வளர்த்துவந்த வேள்விக் குண்டம்; யாணர்—வளமையான, இங்கே வசதியான.

350. வேதி எழுந்து - ஓமகுண்டத்தில் உயர ஓங்கி.

351. திருநீலநக்கர்-சாத்தமங்கையைச் சேர்ந்த அந்தணர்; திருக்கோயிலில் ஒருநாள் இவர் பூசை செய்துகொண்டிருந்தபோது சிவலிங்கத்தின் மேல் ஒரு சிலந்தி விழுந்தது. இவருக்கு உதவியாக அருகே இருந்த இவர் மனைவி உடனே வாயால் ஊதி அப்பூச்சியைத் துரத்தி விட்டார்; இதனைத் தவறான செயல் எனக் கருதிய நக்கர் மனைவியைத் துறந்து கோவிலிலேயே நீத்து வீட்டிற்குச் சென்றார்; அன்று இரவு இறைவன் நாயனார் கனவில் காட்சிகொடுத்து "உன் மனைவியால் ஊதப்பெற்ற இடம்தவிர மற்றப் பகுதி அனைத்திலும் சிலம்பியின நஞ்சால் ஏற்பட்ட கொப்புளங்களைப் பார்" எனக் காட்டினார்; நக்கர் மனைவியை ஏற்றுக் கொண்டார்; நலமாக வாழ்ந்திருந்தனர்; அப்போது திருஞானசம்பந்தர் அடியார் திருக்கூட்டத்துடன் சாத்தமங்கை வந்தார்; அவரோடு வந்த திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கும், அவர் மனைவிக்கும் தம் ஔபாசன வேள்விக் குண்டத்திற்கு அருகேயே தங்க இடம் அமைத்துக் கொடுத்தார்; அன்று அத்தீ வலஞ்சுற்றிச் சுடர்விட்டு ஒளிர்ந்தது; இவர் திருஞானசம்பந்தரின் திருமணத்திற்குச் சென்று சோதியில் கலந்தார்.

352. ஒருமை-தன் தலைவர் என்னும் துணிபு;

353. அமணன்-சமண சமயத்தான்; நீர்ச்சடில-கங்கையை உடைய சடையைப் பெற்றுள்ள, இரண்டன் உருபும் பொருளும் உடன்தொக்க தொகை.

355. திருவாரூர் எல்லை பவம் சேரும்—திருவாரூருக்குள் பிறக்கும்.

356. காமித்து-விரும்பி.

357. நாவுக்கரசர் புகழ்ந்தது ;—

''ஆராய்ந் தடித்தொண்டர் ஆணிப்பொன் ஆரூர் அகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி உத்திரம் பாற்படுத்தான்
ஆரூர் நறுமலர் நாதன் அடித்தொண்டன் நம்பிநந்தி
நீரால் திருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே''
(தேவாரம் 4–102–2)

நமிநந்தியடிகள் ஏமப்பேரூரில் வாழ்ந்திருந்த வேதியர்; ஒருநாள் திருவாரூர் ஆலயத்தில் பல திருவிளக்குகளை ஏற்ற விரும்பி, மாலையில் அருகேயிருந்த வீடுகளிற் சென்று தீபம் ஏற்ற நெய் வேண்டினர்: அவர்கள் சமணர்களாதலின் தர மறுத்ததோடு ஏளனமாகவும் பேசினர்; வருந்திய நாயனாருக்குக் குளத்து நீரைக் கொண்டு விளக்கெரிக்கும்படி ஆகாயவாணிவழி இறையாணை கிட்டியது; அப்படியே செய்தார்; ஒருமுறை திருவாரூர் தியாகராஜப் பெருமானின் திருஉலாவோடு திருமணலிவரை சென்று வந்தார்; தெருவில் பலரைத் தீண்டியதால் தூய்மை கெட்டு விழுப்பு ஏற்பட்டுவிட்டது எனக் கருதியிருந்தார்; அப்போது ஒரு கனவில் திருவாரூர்ப் பிறந்தவர் அனைவரும் சிவகணங்களே என உணர்த்தப் பெற்றார்; அடுத்தநாள் திருவாரூர் வந்து அவ்வூரினர் அனைவரையும் சிவகணங்களாகக் கண்டு அங்கேயே வசித்திருந்து முக்தி பெற்றார்.

359. பொற்றாளம் பெற்றது-திருக்கோலக் காவில்; காசு பெற்றது திருவீழிமிழலையில்; ஏமப் குலவு கிழி—பொன் முடிச்சு, பெற்றது திருவாடுதுறையில், சிவ பாதவிருதயர் செய்ய விரும்பிய வேள்விக்கு; முத்துச் சிவிகை, முத்துப்பந்தல், முத்துச்சின்னம் ஆகியன பெற்றது திருநெல்வாயிலில்; காளமாகிய சின்னம்.

361. உலக மன்னை - பாண்டிமண்டல வேந்தனை, கூன்பாண்டியனை;

362. ஏடு எதிர்த்தது வைகை நதியில்.

363. விடம் தீர வணிகன் மகனை எழுப்பியது திருமருகலில்; ஆண்பனை பெண்பனை ஆனது திருவோத்தூரில்.

364. அங்கம் பூம்பாவையானது மயிலாப்பூரில்; அருகர் கழுவேறியது மதுரையில்.

365. புத்தர் அழிந்தது போதிமங்கையில்.

366. பொன்னி – காவிரியாறு; தோணியில் கடந்தது முள்ளிவாய்க்கரையில்,

367. முயலகன் நோய் தீர்த்தது திருப்பாச்சி லாச்சிரமத்தில், கொல்லிமழவன் மகளுக்கு; தமிழ்-தேவாரம்.

368. தமிழாகரன்-தமிழுக்கு இருப்பிடமான-வன், ''வகைதகு முத்தமிழாகரன்'' (ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம் 6); பார்த்திப-தலைவ ராகிய; திருஞானசம்பந்தர் வரலாறு அறியாதார் அறியாதாரே; மேற்கண்ட கண்ணிகளில் தொகுத்துக் கூறப்பெற்றவை போலப் பல இடங்களில் காணலாகும்;

ஒன்று:-

"அணங்கமர் யாழ்முரித்து ஆண்பனை
பெண்பனை ஆக்கிஅமண்
கணங்கழு ஏற்றிக் கடுவிடம்
தீர்த்துக் கதவடைத்துப்
பிணங்கலை நீர்எதிர் ஓடஞ்
செலுத்தின வெண்பிறையோடு
இணங்கிய மாடச் சிரபுரத்
தான்றன் இருந்தமிழே".

(ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி 39)

369. ஏயர்கோன் கலிக்காம நாயனார்- பெருமங்கலம் என்னும்ஊரைச் சேர்ந்த வேளாளர்; மானக்கஞ்சாற நாயனாருக்கு மருகர்; திருப்புன்கூர்ச் சிவாலயத்தில் தொண்டுபுரிந்து கொண்டிருந்தவர்; சுந்தரமூர்த்தி நாயனார் இறைவனைப் பரவை நாச்சியார்பால் தூதனுப்பிய செயலைக் கேள்வியுற்று மிக வெகுண்டார்; இதனையறிந்த சுந்தரர் வருந்தி இறைவனிடம் முறையிட்டார்; இருவரையும் இணைக்க விரும்பி இறைவன் கலிக்காமருக்குச் சூலைநோய் தந்து அந்நோய் சுந்தரரால்தான் நீங்கும் என அறிவித்தான்; கலிக்காமர் சுந்தரரைப் பார்க்கவும் விரும்பாமல் வயிற்றைக் கிழித்துக் கொண்டு இறந்துவிட்டார்; பிறகு சுந்தரர் வந்ததும் மீள எழுப்பப் பெற்றார்; இருவரும் பகை நீங்கி நண்பராயினர்; பிறகு சுந்தரரோடு திருவாரூரில் வாழ்ந்திருந்து இறுதியில் முத்தியடைந்தார்

370. தமிழ் மூவாயிரம் – திருமந்திரம்; திருமூலர் வரலாறு வெளிப்படை; ஓகை-மகிழ்ச்சி.

371. தொட்டு-வெட்டி; கார் ஊர் உளத்து- கரிய பாவ எண்ணங்கள் பரந்திருக்கின்ற மனத்தினர் ஆகிய, பாவத்தைக் கருமை எனல் கவிமரபு,

''பாவ நிறத்தின் தாருகவர்க்கம் பாழ்பட உக்ரம் தருவோனே'' (திருப்புகழ் 600) என்பார் அருணகிரி நாதர்; பார் ஊரை - நிலத்தையும் வாழ்ந்திருந்த ஊரையும், பார் வயல்களையும் ஊர் வீடுகளையும் குறித்து நின்றன, உம்மைத்-தொகை.

*372.* தண்டியடிகள்-திருவாரூரினர்; பிறவிக் குருடர்; கோயில் வழிபாட்டிற்குத் தண்ணீர் போது மான அளவு கிடைக்காததால் கமலாலயக் குளத்தை ஆழமாக்கிச் செப்பம் செய்ய முனைந்தார்; குளத்தருகே வாழ்ந்திருந்த சமணர் பழித்தனர்; அடிகள் இறைவன் பால் முறையிட்டார்; சிவபெருமான் இவருடைய கனவில் காட்சியளித்து மறுநாள் இவர் பார்வையைப் பெறச் சமணர் குருடராவர் என உரைத்ததோடு மன்னன் கனவிலும் மறுநாள் நாயனார் வழக்கைத் தீர்க்கும்படி ஆணையிட்டார்; விடிந்தபின் அனைவரும் குளக்கரையில் கூடினர்; தண்டியடிகள் நீரில் மூழ்கி எழும்போது பார்வை பெற்றார்; சமணர்கள் அனைவரும் பார்வையிழந்தனர்; அரசன் அவர்களை ஊரைவிட்டே ஓட்டிவிட்டான்; நாயனார் இறுதியில் முத்தி பெற்றார்.

*373.* மகம்-வேள்வி; சிறப்புலி நாயனார்-திருஆக்கூர் வேதியர்; திருவைந்தெழுத்தையே மூலமாகக் கொண்டு வேள்விசெய்து, அதன் பயனையும் சிவபெருமானுக்கே அர்ப்பணம் செய்துவந்தவர்; இதன் பயனாக இறைவன் திருவடி நீழலை அடைந்தார்.

*374.* சினகரம் - கோயில்; அனவரதம்-எப்போதும்.

*376.* கூற்றுவ நாயனார்-ஒரு குறுநில மன்னர்; களந்தையை ஆண்டிருந்து பல மன்னர்களை வென்று பேரரசர் ஆனார்; சோழர்களைப் போலத் தில்லை மூவாயிரவர் கையால் முடிசூடிக் கொள்ள விரும்பினார்;

அவர்கள் மறுத்து விட்டனர்; கூற்றுவர் ஆடல் வல்லானின் திருவடிகளே தமக்கு முடியாகட்டும் எனச் சிந்தித்துத் துயில்கொள்ளக் கனவில் அவ்வாறே அருளப்பெற்றார்; இறுதியில் வீட்டின்பமடைந்தார்; நல்கவெலும் கூற்றுவர், அன்பாய் அகம் மகிழும் கூற்றுவர் எனத் தனித்தனி இயையும்.

*377.* விறலினான் - திறமை உடையவன்; கிட்டலர்—பகைவர்,

*379.* புகழ்ச்சோழர் — கருவூர் அரசர்; அதிகனோடு போரிட்டு வென்று போரில் வெட்டுண்ட வீரர்களுள் சிலரின் தலைகளைப் பார்வையிட்டபோது ஒன்றில் ஒரு சடை இருக்கக்கண்டு தான் ஒருசிவனடி— யாரைக்கொன்ற பாவத்திற்காக அத்தலையை ஒரு தட்டிலேந்தித் தலைமேல் தாங்கித் தீப்புகுந்து முத்தி பெற்றார்; எறிபத்தர் கையில் வாளீந்த வரலாறு 280ஆம் கண்ணி உரையில் சுருக்கமாகக்கூறப்பட்டது.

*380.* மாழை-பொன், இங்கே பொற்காசு.

*381.* காமக் குறியோர்-புணர்ந்த பிறகு அச் சின்னங்களுடன் அப்படியே வந்தவர்; உனி-கவனித்து.

*382.* நரசிங்க முனையரையர் — திருமுனைப் பாடி அரசர்; திருவாதிரைதோறும் தம்பால் வருகின்ற சிவனடியார்களுக்கு அமுதிட்டு நூறுபொன் கொடுத்து வந்தார்; ஒரு திருவாதிரையில் காமுகன் ஒருவன் நாண மின்றிப் புணர்ச்சிச் சின்னங்களுடன் சிவவேடமும் தரித்துப் பொன்பெற வந்தான்; மற்ற அடியார்கள் அவனை இகழ்ந்தபோதும் மன்னர் அவனுக்கு அமுதளித்து இருநூறு பொன் வழங்கினார்.

*383.* பதம் விளக்க-கால் அலம்ப; கடிஆர்— (மணப்பொருட்கள் சேர்ந்து) வாசனை பொருந்திய; புனல்—தண்ணீர்.

**384.** கை வாங்க என மாறுக. வாங்குதல்– தயக்கத்தால் செயலில் வேகம் குறைதல்,

**385.** கலிக்கம்பர் – திருப்பெண்ணாகடத்து வணிகர்; நாள்தோறும் சிவனடியார்களை வீட்டிற் கழைத்து மனைவியார் நீர்வார்க்கக் கால் அலம்பி அமுது படைத்து வழிபட்டு வந்தார்; தம் பழைய வேலையாள் ஒருவன் ஒருநாள் சிவனடியாராக வரக் கலிக்கம்பர் அவன் கால்களையும் பற்றினார்; ஆனால் மனைவி பழைய நினைவால் நீர்வார்க்கத் தாமதம் செய்யவே சினங் கொண்டு அவருடைய கையை வெட்டிவிட்டார். தானே அடியாருக்கு அமுது செய்வித்து அனுப்பினார். நாயனார் சில நாள் கழித்து முத்தி பெற்றார்; கிட்டி- சென்றடைந்து.

**386.** சத்தி நாயனார்-வரிஞ்சையூரில் வாழ்ந்த வேளாளர்; சிவனடியார்களை நிந்தை செய்பவர்கள் யாராக இருந்தாலும் அவர்களுடைய நாக்கைக் கத்தரிக்கும் இயல்புடையவர். இதே அடியார்பணியால் அவர் முத்தி அடைந்தார்; வெண்பா-க்ஷேத்திரத் திருவெண்பா; இப் பிரபந்தம் பதினொன்றாம் திருமுறையில் இடம்பெற்றுள்ளது.

**387.** காடவர்கோன்–காஞ்சிபுரத்தையாண்ட மன்னர்; க்ஷேத்திரத் திருவெண்பாவின் ஆசிரியர்; ஐயடிகள் என்னும் பெயருடையவர்.

**388.** வாயிலார்-மயிலாப்பூரினர்; இல்லறத்- தார்;சிவபெருமானுக்கு உள்ளத்திலேயே ஆலயம் அமைத்து நாள்வழிபாடு சிறப்புவழிபாடுகளை மானசீக மாகவே செய்து சிவபதம் பெற்றவர்.

**390.** செருத்துணை - மருகலைச் சேர்ந்த தஞ்சாவூரில் வாழ்ந்த ஒரு வேளாளர்; திருவாரூரில் கோயிற்பணிவிடை செய்துவந்தார்; ஒருநாள் பல்லவ

மன்னராகிய கழற்சிங்கநாயனார் தம் மனைவியுடன் திருக்கோயில் வழிபாட்டிற்கு வந்தார். வலம்வருகையில் மலர் மண்டபத்திற்கு அருகே கொஞ்ச தூரம் தள்ளிக் கீழே விழுந்திருந்த மலர் ஒன்றை அரசியார் எடுத்து மோர்ந்தார். இதனைக் கண்டஉடனே பெருஞ்சினங் கொண்ட செருத்துணையார் முகர்ந்த நாசியை அரிந்து விட்டார்; இச் செய்தியை அறிந்த பல்லவன் முகர்ந்த மூக்குடன் மலரை எடுத்த கையையும் அரிய வேண்டும் எனக் கூறிக்கொண்டே மனைவியின் கைகளையும் வெட்டி வீழ்த்தினார். செயற்கரிய இச் செய்கைக்காக இரண்டு நாயன்மார்களும் நீண்டநாள் கழித்து முத்தி பெற்றனர்.

**392.** அன்பர்க்கு ஆவனவும் செய்யும்.

**395** இடங்கழி நாயனார்–கொடும்பாளூரை ஆண்டுவந்த வேளிர் மரபினர்; கோயிற்பணிகளையும் அடியார் வழிபாட்டையும் சிறப்பாகச் செய்துவந்தார்; சிவனடியார்களுக்குத் தவறாமல் அமுதுபடைக்கும் விரதம்பூண்ட அன்பர் ஒருவர் ஒரு நாள் தம்பால் பொருளில்லாமையால் அரசாங்கக் களஞ்சியத்தில் நெல் எடுக்க முனைந்து பிடிபட்டுவிட்டார்; இதனை அறிந்த மன்னராகிய இடங்கழியார் தம் கருவூலம் முழுவதையும், தானியக் களஞ்சியங்களையும் சிவனடியார்களே கொள்ளை கொள்ள அனுமதித்து விட்டார்; சில்லாண்டுகள் கழித்து இந் நாயனார் முத்திபெற்றார்.

**396.** பூங்கோயில் - திருவாரூர்க் கோயிலின் பெயர், கமலாலயம் என்பதன் தமிழ் வடிவம்; தார் ஊர்-மாலைகள் இசைகின்ற; தனித்தேவி-பட்டத்தரசி; ஏர் ஊரும்-அழகு பொருந்திய.

**397.** மாந்தளிர்க்கை – மாமரத்தின் இளந் தளிரைப் போன்ற மெல்லிய கை; அணி மூக்கை–அழகிய நாசியை; முனிந்து–சினந்து.

***398.*** செருத்துணை நாயனார் வரலாறு ***390***ஆம் கண்ணி உரையில் கூறப்பெற்றது.

***399.*** சிற்பரன்—அறிவையும் கடந்து நிற்கும் கடவுள்; வில்பொலியும் மாடங்கள்—ஒளிவீசித் திகழும் மாடிகள்; வில்பொலியும், விண்ணில்உயர் என்னும் இரண்டையும் தனித்தனியே மாடங்களுக்கு அடையாக்குக.

**400.** கோச்செங்கட் சோழர் – இவர் சிவ பெருமானுக்கு எழுபது மாடக்கோயில்கள் எழுப்பியவர் என்பதைத் திருமங்கையாழ்வார்,

''இருக்கிலங்கு திருமொழிவாய் எண்தோள் ஈசற்கு
எழில்மாடம் எழுபதுசெய் துலகம் ஆண்ட
திருக்குலத்து வளச்சோழன்''
(பெரியதிருமொழி 6-6-8)

எனச் சிறப்பாகக் கூறுகிறார். வேதியர்க்கு என்பதைச் சிலேடையாகக் கொண்டு 1. அந்தணர்களுக்குத் தில்லையில் வீடுகள் கட்டித் தந்ததையும், 2. வேதத்தின் பொருளான சிவபெருமானுக்கு மாடக்கோயில்களைக் கட்டியதையும் கருதுக; இப் பொருளில் வேதியற்கு எனற்பாலது சிலேடை நோக்கி விகாரப்பட்டது; ''வேதியா! வேதகீதா!'' (தேவாரம் 4–62–1) என்னும் அப்பர் திருவாக்கால் இறைவனை வேதியன் என்னும் மரபறியப்படும்.

கோச்செங்கட்சோழன் தன் முற்பிறவியில் ஒரு சிலந்தியாக இருந்தான். இச் சிலந்தி திருவானைக்கா இறைவனை வழிபட்டுவந்ததோடு அவன்மேல் நாவல் மரச் சருகுகள் விழாதபடி வலையும் கட்டி வந்தது; அங்கேயே வழிபட்டு வந்த ஒரு யானை இச் சிலந்திக் கூட்டை அசுத்தமாகக் கருதித் தினந்தோறும் கலைத்து வந்தது; ஒருநாள் சிலந்தி சினங்கொண்டு யானையின் துதிக்கையில் நுழைந்து அதைக் கொன்றுவிட்டது;

தானும் இறந்தது; இறைவன் யானைக்கும் வரமளித்துச் சிலம்பியைச் சோழ மன்னனாகப் பிறப்பித்தான்; முற்பிறவியில் யானைமீது கொண்ட பகை காரண மாகவே கோச்செங்கட்சோழன் யானையால் அடைய முடியாத மாடக் கோவில்களாகக் கட்டினான், வண்ணயாழ்-இராகங்களைத் தோற்றுவிக்கின்ற யாழ்; இரண்டன் தொகை.

**403.** தமிழை யாழில் இட்டு-இயலை இசை யொடு புணர்த்துக் கருவியில் இசைத்து, "வள்ளிதழ்க் கோதை தானே இட்டதோர் வண்ணந் தன்னை" (சிந்தாமணி 1696) என்புழிப் "புணர்த்ததொரு புணர்ப்பு விசேடம்" என்றார் நச்சினார்க்கினியர்.

**404.** யாழ்மூரி – யாழில் அமைத்துப் பாட முடியாத பண்; திருநீலகண்டப் பாணர்-திருநீலகண்ட யாழ்ப்பாணர் என்றே வழங்கப் பெறுவார்; இவர் திருஎருக்கத்தம்புலியூரில் பிறந்தவர் ; மதுரைக் கோயிலில் யாழ் வாசிக்கும்போது சுருதி கலைந்து விடாதிருக்கும்பொருட்டு இறைவனால் பலகை அருளப் பெற்றவர்; சீகாழி சென்று திருஞானசம்பந்தரைப் பிரியாமல் அவர் திருப்பாசுரங்களை யாழிலிட்டு இசைத்து வந்தார்; பாணரின் உறவினர் இவருடைய யாழிசையால்தான் சம்பந்தருக்குப் புகழ் சேருகிறது எனக் கூறியதால் உள்ளம் வருந்தித் தம் யாழில் அடங்கார்த பண் ஒன்றை அருளவேண்டுமெனச் சம்பந்தரிடம் வேண்டினார்; அப் பெருமான் "மாதர் மடப்பிடியானை" எனத் தொடங்கும் பதிகம் இசைத்தார்; அது இவருடைய கருவியில் அடங்கவில்லை; பாணர் யாழை உடைக்க முயலச் சம்பந்தர் தடுத்தார்; திருஞானசம்பந்தரின் திருமணத்தில் யாழ்ப்பாணர் சோதியுட் கலந்தார்.

**405.** அவனி–உலகம்; வற்கடம்–பஞ்சம்.

406. மஞ்சனம்-திருமுழுக்காட்டும் நீர்க்குடம், மஞ்சனம்—அபிஷேகம், ஆகுபெயராக நீரை உணர்த்தி, இருமடி யாகுபெயராக நீர்க்குடத்தை உணர்த்தியது; ஞாலமிசை—நிலத்தில்; நம்பனார்—சிவபெருமான்.

407. புகழ் அனாற்கு — புகழை உடைய அன்னாருக்கு. இரண்டன் தொகை.

408. புகழ்த்துணை நாயனார் - செருவிலிபுத்தூரில் தோன்றிய ஆதிசைவர்; நியமம் தவறாமல் ஆலயத்தில் அபிஷேக ஆராதனை செய்து வந்தார்; பஞ்சம் வந்தது; உடல் இளைத்துத் திருமஞ்சனக்குடத்தைத் தூக்க வலுவற்றவராய், ஒருநாள் அதனைச் சிவலிங்கத் திருமேனியின் மீதே போட்டு மூர்ச்சித்து விழுந்துவிட்டார்; அன்றிலிருந்து பஞ்சம் தீர்ந்து நாடு செழிக்கும்வரை இறைவன் இவருக்கு நாள்தோறும் பொற்காசொன்றை வழங்கிவந்தார்; இவரும் தம் விரதத்தில் நழுவாமலிருந்து முத்தி பெற்றார்; செற்றம்—தீராச் சினம்.

410. தாபித்து—எழுந்தருளச் செய்து; கணம்—குழு, பரிவார தேவதைகளைக் குறித்து நின்றது; அளி-அன்பு.

411. பூசலார் நாயனார் - திருநின்றவூர் அந்தணர்; ஓர் சிவாலயம் கட்ட விழைந்தார்; பொருள் இல்லாமையால் மனக் கற்பனையாலேயே படிப்படியாக ஆலயம் அமைத்து முடித்துத் திருக்குடமுழக்கிற்கும் மானசீகமாக நாள் குறித்திருந்தார்; காடவர்கோன் என்னும் மன்னன் காஞ்சிபுரத்தில் உண்மையாகவே ஒரு கற்றளி எடுப்பித்து இந்த நாளையே கும்பாபிஷேகத்திற்குக் குறித்திருந்தான். முதல்நாள் இரவு இறைவன் மன்னனின் கனவில் தோன்றித் தான் பூசலார் கட்டிய கோவிலில் குடியேற வேண்டியிருப்பதால் கற்றளிக்

குடமுழக்கை வேறொரு நாள் வைத்துக் கொள்ளும்படி கூறிவிட்டார். மறுநாள் அரசன் திருநின்றவூர் சென்று கோயிலைக் காணாது திகைத்து, பூசலாரின் சிவபக்தியை அறிந்து வணங்கிச்சென்றான்; உரிய நேரத்தில் பூசலார் அகக்கோயிலில் சிவப்பிரதிட்டை இனிது நிறைவேறியது; இறுதியில் பூசலார் வீட்டின்பம் பெற்றார்; பூதித் துணை–1. மனைவி, 2. திருநீற்றின் பெருமையை உணர்த்திய துணைக்கருவி, 3. இணைந்து சிவானு பூதியில் திளைத்தவள் என முப்பொருள் காண்க. கவிமன்னர் – திருஞான சம்பந்தர்; சொல் – புகழ், " மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை வளைக்கைம் மடமானி, பங்கயச்செல்வி பாண்டிமாதேவி " " பந்தணை விரலாள் பாண்டிமாதேவி" " பத்தி ஆர் கின்ற பாண்டிமாதேவி ", " மண்எலாம் நிகழ மன்ன னாய் மன்னும்மணிமுடிச் சோழன்தன் மகளாம் பண் ணின்நேர் மொழியாள் பாண்டிமாதேவி " " பல்நலம் புணரும் பாண்டிமாதேவி " (தேவாரம் 3–120 ஆம் பதிகம்) என ஆளுடையபிள்ளையார் போற்றிக் கூறு- வதை நினைந்து சொல்லியது.

412. மங்கையர்க்கரசி-நின்றசீர் நெடுமாற நாயனாரின் மனைவியாகிய இவர் வரலாறு வெளிப் படை; துண்டமதி-பிறைச்சந்திரன்; தண்டல் இலா- குறைவற்ற.

413. கோது இல்–குற்றமற்ற; கீள்-கோவணத் தோடு சேர்த்து நெய்யப்பெற்ற அரைஞாண்; நேசநாயனார்-காம்பீலி என்னும் ஊரில் வாழ்ந்திருந்த சாலியர்; சிவனடியார்களுக்கு ஆடை, கீள், கோவணம் நெய்து வழங்குவதையே தம் வழிபாடாகக் கொண் டொழுகி இறைவன் திருவடி அடைந்தார்.

415. காசினி-உலகம்

416. அருள் ஆகர-கருணைக்கு இருப்பிட மானவரே; இருள்தீர் கர-அறியாமையை ஒழிக்கும் ஞானமுத்திரையைக் காட்டும் கைகளை உடையவரே.

418. திகம்பரன்—திசைகளையே ஆடையாகப் பெற்றவன்; இகம்பரம்-இம்மை மறுமை; துணையும் இல்லோன் – பேரூழியில் சிவபிரான் தன்னந்தனியனாகவே இருப்பார் என்பது மரபு.

"கடல்உலகம் அண்டர்அண்டம் காய்அழலின் நீற்றி
அடலைஉடல் முற்றும் அணிந்து-சுடலைதனில்
தாழ்சடிலத் தென்கருவைத் தாணு தமியனாய்
ஏழிசையாழ் வாசித் திடும்''.
(திருக்கருவை வெண்பா அந்தாதி 44)

அகம்பன்-உள்ளத்தில் சற்றும் நடுக்கம் ஏற்படாதவன், ஸ்திதப்ரக்ஞன்.

419. எண் சித்தி-286ஆம் கண்ணியுரையில் கூறப்பெற்றது.

420. பரிந்தே—அன்பு கொண்டே.

422. புளகம் - மயிர்க்கூச்செறிதல்; கம்பம்- நடுக்கம்.

425. வல் இருப்புத் தூண்-பலங்கொண்ட இரும்புக் கம்பம்; மாயைவினை ஆசு-மாயையும் கர்மமும் ஆகிய இரண்டு மலங்கள்; மாயைவினை – உம்மைத் தொகை, ஒருசொல் நீர்மைத்தாக நின்று ஆசுடன் இணைந்து பண்புத்தொகையாயிற்று.

427. கமலஇலை நீர்-தாமரை இலைத் தண்ணீர், துறவிகள் உலகியலிலே இருப்பினும் அவர்தம் உள்ளம் உலகில் ஒட்டாமல் இருப்பதற்கு உவமை; வெண்தேர்–கானல்நீர், பேய்த்தேர் எனப்படும்; குருநாதரின் அருட்பார்வை கிடைத்த உடனே தனு கரண புவன போகங்கள் நிலையில்லாப் பொய்ப்பொருள் என உணரலாகும்.

"தந்தைதாய் மகவுமனை வாழ்க்கை யாக்கை
சகம்அனைத்தும் மவுனிஅருள் தழைத்த போதே
இந்திரசா லம்கனவு கானல் நீராய்
இருந்ததுவே இவ்வியற்கை என்னே என்னே''
(தாயுமானவர் பாடல்கள்—தந்தை தாய்-1)

முன்பினும் பொய்யாக – ஞானகுருவினை அடைவதற்கு முன்னமே நூற் கல்வியாலும் கேள்வி யாலும் அவள் உலகம் பொய் என அறிந்திருந்தாள். இது அநுபவத்திற்கு வராமல் வாசாஞானமாக மட்டுமே இருந்தது. இப்போது குருவருள் கிட்டிய உடனே வெறும் சொல்லளவிலான அறிவாக இல்லாமல் அநுபவபூர்வமான அநுபூதியாக ஆயிற்று என்பது கருத்து; தூரத்திலே இருந்து பார்க்க நீரலைபோல் காட்சிதரும் கானல் அருகே சென்ற உடனே மணலாகிய தன் உண்மை வடிவத்தைக் காட்டுவதும், தூக்கம் தெளிந்த உடனே முன்பு கண்டது கனவு எனப் பின்பு தெளிவடைவதும் உவமையின் பயன்; ''மாயப் பேய்த்தேர் போன்றும் நீப்பரும் உறக்கத்துக் கனவே போன்றும் நனவுப்பெயர் பெற்ற மாய வாழ்க்கையை மதித்து'' (கோயில் நான்மணிமாலை 28) ''உலகே நெடும்பிழையென் றோதி உலகம் அலகைத்தேர் என்ன அறைவாள்'' (சித்தாந்தப் பஃறொடை 230) என்பன போலப் பல நூல்களில் இவ்வுவமை இடம்பெறும். அசைவு அற்று–மன ஒருமை பெற்று.

உலாவின் இந்த அரிவைப் பருவத்தில் குங்கிலியக் கலயர், மூர்த்தியார், முருகனார், திருநாவுக்கரசர், அப்பூதி அடிகள், திருநீலநக்கர், நமிநந்தி அடிகள், திருஞானசம்பந்தர், ஏயர்கோன் கலிக்காமர், திருமூலர், தண்டியடிகள், சிறப்புலியார், கூற்றுவ நாயனார்; புகழ்ச்சோழர், நரசிங்க முனையரையர், கலிக்கம்பர், சத்தி நாயனார், ஐயடிகள் காடவர்கோன், வாயிலார் நாயனார்,

கழற்சிங்க நாயனார், இடங்கழியார், செருத்துணையார், கோச்செங்கட்சோழன், திருநீலகண்ட யாழ்ப்பாணர், புகழ்த்துணை நாயனார், பூசலார், மங்கையர்க்கரசியார் நேச்நாயனார் ஆகிய இருபத்தெட்டு நாயன்மார்கள் இடம்பெற்றுள்ளனர்.

## தெரிவை

தெரிவை இருபத்துநான்கு வயதுப் பெண்.

**430.** ஓதி – கூந்தல்; அமர் – பொருந்திய ஓதியின்கண் என ஏழன் உருபு விரிக்க;

**431.** கோதை – மலர்மாலையனைய பெண், உவம ஆகுபெயர்; புலன்-ஐம்புலன்களில் ஒன்றாகிய செவி; இருங்குழை-பெரிய காதணி; தாவடி–பயணம்; தா இல்–குற்றமற்ற

**432.** உரகப் பை-பாம்பின் படம்.

**433.** அண்டசம் – முட்டையில் பிறப்பன; சுவேதசம்-வேர்வையில் பிறப்பன; உற்பீசம்-நிலத்தில் பிறப்பன; சராயுசம் – கருப்பையில் பிறப்பன; உயிர்த்தோற்றம் இவ்வாறு நான்கு வகைப்படும்;

**434.** தாபரம்-ஒரே இடத்தில் இருப்பவை, நிலைத்திணை; நாற்காலி-விலங்கினம்; எழுவகைப் பிறப்பில் இத்தொல்லை உலகில் (**433**) என்றதால் தேவரையொழித்து ஏனைய ஆறையும் கூறினார்.

**435.** மெத்தச் சலித்தது–

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகம் ஆகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுரர் ஆகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்"

(திருவாசகம்-சிவபுராணம் **26-31**).

436. ஒத்த வினையாள் - இருவினையொப்பு அடைந்தவள்; மலபாகம்—மல பரிபாகம்; இனையும்- வருந்தும்

437. அந்தகன்-குருடன்; வந்து அருள்வது என்று; என்று—எந்நாள்.

439. வேதிகை-மேடை; ஆதரம்—அன்பு.

440. வாழி - முன்னிலை அசை; அருளாழியான் — கருணைக் கடல் போன்றவன்.

441. அந்தம் இலா—எல்லையற்ற.

442. மின்பொலி நீறு - ஒளியால் விளங்கு கின்ற விபூதி; திருநீற்றின் வேடம் மெய்- '' தூய்மைத் திருநீற் றடைவேமெய்ப் பொருளென் றறியும் துணிவினார்'' (பெரிய.—நமிநந்தி. 5)

444. மயலும் அளித்து - சிவகாமத்தை உண்டாக்கி, முன் தீதகற்றி (441) என்றது அவகாமங் களை ஒழித்ததை; இவ்வாறின்றி இங்கு மயல் அழித்து எனப் பாடங்கொண்டால் தொடர்ந்து இங்கேயே பதைத்து மயங்கி மா மயலுள் தாழ்ந்தே எனக் கூறுவதற்குப் பொருந்தாது

445. முதல்நாள் இரவு கனவில் மயல் அளித்தான்; நேரம் செல்லச் செல்ல அது வளர்ந்து மாமயலாகித் தலைவியை மூழ்கடிக்கிறது; கணிப்பரிய- எண்ணிக்கைக்கு அடங்காத, மிகுதியான என்றபடி;

447. பாரா-பார்த்து, செய்யா என்னும் வாய்பாடு.

448. அருவிமான - அருவியைப் போல.

449. கம்பித்து - நடுங்கி.

450. ஒளிகாலும்-பிரகாசிக்கும்; கண்ணுளர்- அருகே இருப்பவர்கள், அணுக்கத்தொண்டர்.

451. முரசு ஆர்கலியின் ஆர்ப்ப; ஆர்கலியின் கடலைப் போல, இன் உவம உருபு; கடி-நறுமணம்; படி ஆதி - உலகம் முதலிய புவன போகங்களை உணர்த்தியது.

452. அத்துவ ரூபன்-வழியின் வடிவமாக இருப்பவன்; கேவலநிலையில் உள்ள ஆன்மா தனு கரணங்களைப் பெற்றுப் புவனபோகங்களைப் புசித்தே ஆணவ நீக்கத்தில் ஈடுபடுகின்றதாதலின் அந்த வழியே இறையருளால் கிடைத்த இறை வடிவாகிறது. இது முதல்நிலை; அருள்ரூபன் — இறைவனின் திருவருள் வீழ்ச்சியாம் சத்திநிபாத வடிவன்; இது இடைநிலை; இன்பரூபன் - சிவானந்த போகமாகிய வடிவன்; இது இறுதிநிலை.

453. அட்டரூபன் - அட்டமூர்த்தம், ஐந்து பூதங்கள், சூரியன், சந்திரன், ஆன்மா ஆகிய எட்டும் இறைவன் வடிவங்களாகும்;

"இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
இயமான னாய்எறியும் காற்று மாகி,
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி,
ஆகாச மாய்அட்ட மூர்த்தி ஆக"
(தேவாரம் 6-94-1)

"மண்ணீர் விசும்பு கனல்கால் அருக்கன்
மதிஆவி என்னும் முறையால்
எண்ணீர்மை கொண்ட இவைஎட்டும் அன்றி
உலகென்ப தில்லை இவையே
அண்ணா உனக்கு வடிவாம்"
(கலைசைப் பதிற்றுப் பத்தந்தாதி 69)

என்பார் சிவஞான முனிவர். சப்தகான ரூபன்—ஏழு சுரங்களாலான இசையையே தன் வடிவமாகக் கொண்டவன், "ஏழ்இசையாய் இசைப்பயனாய் இன் னமுதாய்"(தேவாரம் 7-51-10);நால் தலையன்நாதன்-

—நான்கு தலைகளை உடைய பிரமனுக்கும் தலைவன், உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது; நவரூபன்—நவந்தருபேதத்தை உடையவன், சிவம், சக்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசன், உருத்திரன், திருமால், பிரமன் என்பன அவை.

"சிவம்சக்தி நாதம் விந்து
சதாசிவன் திகழும் ஈசன்
உவந்தருள் உருத்தி ரன்தான்
மால்அயன் ஒன்றின் ஒன்றாய்ப்
பவந்தரும் அருவம் நாலிங்
குருவம்நால் உபயம் ஒன்றா
நவந்தரு பேதம் ஏக
நாதனே நடிப்பன் என்பர்"

(சித்தியார் – 164)

என்பது சாத்திரம்; ஏற்றம் உள-உயர்வுடைய.

454. ஓர் ஐந்து ரூபன்-ஈசானம், தற்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோஜாதம் என்னும் ஐந்து; பிரமன், திருமால், உருத்திரன், மகேஸ்வரன், சதாசிவன் என்னும் பஞ்சப்பிரம வடிவன் எனினுமாம்; ஐ ஐந்து-சந்திரசேகரர், உமா மகேசர், இடபாரூடர், சபாபதி, கல்யாண சுந்தரர், பிட்சாடனர், காமாரி, காலகாலர், திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், சங்கரநாராயணர், மாதொருபாகர், கிராதர், கங்காளர், சண்டேசாநுக்ரகர், நீலகண்டர், சக்கரப்பிரதர், கசமுகானுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசீனர், தட்சிணாமூர்த்தி, இலிங்கோற்பவர் என்னும் சிவமூர்த்தங்கள் இருபத்தைந்து, இவற்றுள் முன் இருபத்துநான்கும் உருவமும் இருபத்து ஐந்தாவது அருஉருவமும் ஆகும், இந்த லிங்கவடிவமே மற்ற இருபத்து நான்கற்கும் ஆதியாகும் என்பதை,

''மொழிந்த நால்இரு மூவர்க்கு மூலமாய்,
ஒழிந்தி டாஅரு வோடுரு வாய்,மயல்
அழிந்த ஆணொடு பெண்ணுரு ஆகியும்
எழுந்த தாகும்இ லிங்கநன் மூர்த்தியே''
(பேரூர்ப் புராணம்-காலவன் வழிபடு படலம் 24)

என்னும் கச்சியப்ப முனிவர் திருவாக்கால் அறியலாம்; இந்து—சந்திரன்; சிவரூபன்-வழிபடுபவருக்கு மங்களத்தை அருளும் திருவடிவை உடையவர்.

455. கொடி மறுகு-கொடிகளால் அலங்கரிக்கப் பெற்ற தெரு, மூன்றன் தொகை.

456. த்விசு-இருக்கை.

457. விதிர் விதிர்த்து - நடுங்கி, எதிர்ப் படுவோரின் உயர்வையும் தம் தாழ்வையும் உணர வல்லாருக்குப் பெரியோர் திருமுன்பு ஏற்படுவதோர் மெய்ப்பாடு.

458 கண்டி - உருத்திராக்க மாலை, சிகை- குடுமி, கண்டி சிகை—உம்மைத்தொகை; சுடர் மறை— நெருப்புக்கண்ணை வெளியே தெரியாதபடி ஒளித்துள்ள; மறைநுதல் - வினைத்தொகை ; மறை, சந்த, தூ என்பனவற்றைத் தனித்தனி இயைக்க; சந்த நுதல்- சந்தனத்தை அணிந்த நெற்றி, இரண்டன் தொகை; தூ நுதல்- (திருநீறணிந்த)வெண்மையான நெற்றி; சாந்தத் தூநுதல் என்பது பாடமாயின் திருநீறணிந்த தூயநெற்றி என்க; சாந்தம்—திருநீறு.

459. களம்-கழுத்து.

460. குழை - சிவபிரான் அணியும் காதணி, அதனை மறைத்து ஆறுகட்டி புனைந்துள்ளார்.

461. விதி சிரம்-பிரமாவின் மண்டையோடு, கரந்து-மறைத்து, நிரை-வரிசையான.

462. அஞ்சு கொத்து மாலை-சிறிய உருத்திராக்கங்கள் நூற்றெட்டைப் பொற்கம்பியால் கட்டிய மாலை ஓர் இழையாக ஐந்து இழைகளைப் பிணைத்து மார்பில் அணியும் கொத்துத் தாழ்வடம்; அம் புலித்தோல்—அழகிய வேங்கையின் தோல்; மென்பட்டு ஆர்-மெல்லிய பட்டு வேட்டி பொருந்திய.

463. மருங்குல் இடுப்பு.

464. தாகம் அறப் பாரீர் - நீங்கள் உங்கள் ஆசைதீர என்னைப் பாருங்கள் எனத் தெரிவை கனகசபைநாதரிடம் கூறியதாகப் பொருள் கொள்ளக் கூடாது; பிறவிநோய் தீர வேண்டும் என்னும் என் வேட்கை தீரும்படி நீங்கள் கடைக்கண் நோக்கால் சட்சு தீட்சை வழங்கவேண்டும் என்பதே பொருள்; அடுத்துப் பதமலர் என் சென்னிமிசை தாரீர் என்றது ஸ்பர்ச தீட்சை.

466. களம்-முதலது கழுத்து, அடுத்தது நஞ்சு, மூன்றாவது கள்ளம், வஞ்சனை; சொல்பின்வரு நிலையணி.

497. இளமதி, வெண்மதி, வளையும் மதி-முழு வளர்ச்சியின்றிப் பிறையாக உள்ளதும், வெள்ளை நிறமுடையதும், வளைந்திருப்பதுமாகிய சந்திரன்; வல்வினையால்—என் தீயவினைகளின் காரணத்தால்; வளையும்—இரட்டுற மொழிதலாக என்னைச் சூழ்ந்து கொண்டு என் ஆன்ம ஈடேற்றத்தைத் தடுக்கின்ற; வல்வினையால் வளையும் மதி-"வினை புத்திதத்துவத்தைப் பற்றிநின்று சங்கார காலத்தில் புத்திதத்துவம் மாயையின் ஒடுங்கியவழி, அம்மாயை பற்றுக்கோடாக நின்று, புனர்உற்பவத்தில் தநுகரணம் முதலியவற்றிற்கு ஏதுவாய் வரும் எனக் கொள்க'' (சிவஞானபோத மாபாடியம் 2 ஆம் சூத். அதிகரணம்): விநாச காலே விபரீத புத்தி என்னும் பழமொழியும் இதுபற்றியே எழுந்தது; குளம்-நெற்றி; வளையுமதி இருமுறை மடங்கி வந்தது மடக்கணி.

**468.** அரி ஐம்பொறி–1. தீயின் அழகிய சுடர் 2. பகைவராகிய ஐந்து புலன்கள், '' ஏகஙழயேற்கு என்னுடன் பிறந்த ஐவரும் பகையே '' (திருவிசைப்பா 8-2); அடக்கவாகாதோ எனற்பாலது தளைநோக்கி அகரம் தொக்கது; அரி என்பின் ஆய–திருமாலின் எலும்புகளால் ஆகிய, அரியைம்பொறி மடக்கு.

**469.** மாலைய்யொளித்த - யாப்பு நோக்கிய விரித்தல்; மாயை மாலை – மாயையால் தோன்றிய மயக்கத்தை, மூன்றன்தொகை.

**470.** எழில்தார் – அழகிய மாலை; மாழை ஒண்கண்–அழகியதும் ஒளி மிக்கதுமாகிய விழிகள்.

**471.** இரவி வெயில் - சூரியனின் கதிர்ச்சூடு; இழுது--நெய்.

**472.** கரியில் திகழ் எரி-இருந்தையில் பற்றிய தீ; கூர்த்த—மிகுந்த.

**473.** ஈன - இழிந்த; மானும்—நிகர்க்கும்.

**474.** ஓகை-மகிழ்ச்சி; மண்டி–அதிகரித்து.

**475.** பெருவழியில் போவார்தம்பின்-இரட்டுற மொழிதலாகச் சிவிகை ஏறிப் பெரிய வீதியில் செல்லும் அவருக்குப் பின்னால் என ஒருபொருளும், சிவஞான நெறியாகிய பெரிய ஒழுக்கத்தைப் பின்பற்றும் தேசிகரைப் பின்பற்றி என மற்றோர் பொருளும் கொள்க; உன்னி-நினைந்து; சங்கம் நீங்குவது மான– கைவளை கழன்று பிரிவதைப் போல, தன்னை விரும்பி வாங்கி அணிந்து மகிழ்ந்து பிற அணிகளோடு சேர்த்துப் போற்றும் மகளிரைப்பற்றிச் சற்றும் வருத்தம் கொள்ளாமல் கை மெலிந்தவழி வளையல் அணிந்த–வளுக்கே தெரியாமல் கழன்று சென்றுவிடுகிறது; இச் செயல் பிள்ளைப்பேற்றை விரும்பிப் பெற்று வளர்த்து மகிழ்ந்து பல சேடியரோடு கூட்டிப் பாதுகாக்கும்

தாயைவிட்டு அவளுக்கே தெரியாமல் நீங்கிவிடும் தலைவியின் செயலுக்குத் தொழிலுவமம் ஆகிறது; வளையின் செயல் தலைவியின் செயலுக்கு உவமை.

**477.** வழிவசை - வசைவழி என மாறுக, இகழ்ச்சிக்குக் காரணம், முன்பின்னாகத் தொக்க நான்கன்தொகை; படி-உலகம்; கழிபெரு-எண்ணிக் கையில் மிகுந்தவர்களும் பெருமையால் சிறந்தவர் களுமாகிய.

**478.** சொல் தவறினோர்க்கு; தொலையா- தப்பாது; நிரயம்-நரகம்; பொற்றொடி-பொன்னால் ஆகிய வளையல்களை அணிந்தவளே, அண்மைவிளி இயல்பாயிற்று

**480.** தீதிலா மாளிகை என்றமையானே அருத்தாபத்தியால் வீதியில் இருந்தால் தீமை விளைகிறது என்னும் பொருளும் பெறப்படுகிறது.

**481-483.** தாய்க்கூட்டம்-ஒரு பிறவிக்கு ஐந்து தாயர், பிறவிகளோ எண்ணிற்கடங்காதவை, எனவே தாயர்கள் எத்துணையர் எனக்கூற இயலாதபடி மிகுதியானவர்கள் என்பது கருத்து;

> ''உய்வகை பாராட் டும்தாய்
> ஊட்டும்தாய் முலைத்தாய் கைத்தாய்
> செய்வகை அறிந்து போற்றும்
> செவிலித்தாய் ஐவர் தாயர்''

என்பது சூடாமணி நிகண்டு (12-44).

**484.** அன்னை - அண்மைவிளி; என்னலும்- என்று கேட்கவும்.

**486.** திசைநூல் — திசைமொழிகளாலான நூல்கள், இது தெலுங்கு, கன்னட நூல்களை-சிறப்பாக இசைப்பாடல்களை-குறித்தது; சந்து-சந்தனம்.

487. தணவாது-நீங்காமல்; சரித்தே-இயங்கியே.

488. பாங்கோ – முறையாகுமோ.

489. இட்டம்-இஷ்டம், விருப்பம்

491–492. புன்மை – இழிதகைமை; உளம் முறிய என மாறுக, மனம் நோகும்படி; ஒப்பு:

பொன்னொடு மணிஉண் டானால்
  புலைஞனும் கிளைஞன் என்று
தன்னையும் புகழ்ந்து கொண்டு
  சாதியில் மணமும் செய்வர்;
மன்னரா யிருந்த பேர்கள்
  வகைகெட்டுப் போவா ராகில்
பின்னையும் யாரோ என்று
  பேசுவார் ஏசு வாரே.

(விவேக சிந்தாமணி 25)

493. செவ்வி–அழகு; கல்வி உடைமை என்றது படித்துப் பட்டங்களால் பெருமையும் பொருளும் பெறு-தலை, முன் அறிவுடைமை என்றது இயற்கையறிவை; ஒல்லாது - பொறுத்துக் கொள்ள இயலாமல்.

494. அழுக்காறுற்றே-பொறாமை கொண்டு; ஒருவும் வகையும்-விட்டுவிலகிச் செல்லுமளவும்; ஒழிப்பீர் –நீக்குவீர்; கருதில்- நன்றாக ஆராய்ந்து பார்த்தால்.

495. பொய்யின் கிரமம்–(உள்ளன்பில்லாமல் வெளித் தோற்றத்தால் மட்டும் அன்பு பாராட்டுகின்ற) அசத்தியமான ஒழுக்கம்.

496 அடுபிணி-வருத்துகின்ற நோய், வினைத் தொகை; அழுங்கி–துன்புற்று; கிடையில் கிடப்பின்-படுத்த படுக்கையாக இருப்பின், ஆணிற்குக் கூறியது பெண்ணிற்கும் உபலட்சணம்; கடுகி-விரைவில்

497. மா காலன்-பெரிய இயமன்; மரபில் உறும்- (உம்முடைய) குடியில் தோன்றுகின்ற; பாகு ஆர்மொழியார் - வெல்லப்பாகு போன்ற இனிய சொற்களையுடைய இளம்பெண்கள்

498. முனிந்து-சினந்து, இயமனுக்கு யார்மீதும் வெறுப்போ சினமோ இல்லாவிடினும் காலன் சினத்தோடு உயிரைப் பற்றுவதாகக் கூறல் கவிமரபு.

500. முன்னைவினை வாதனை - பிராரத்த கருமத்தால் விளைந்த வருத்தம்; முற்றியது ஈது என்ன, முற்றிய தீது என்ன என இரண்டு வகையாகவும் கொள்ளலாம்

501. உளத்து உன்னி-நெஞ்சத்தால் நினைத்து, விருப்பமில்லாமல் நினைத்தாளாதலின் உளத்து உன்னி என வேண்டாது கூறினார், கண்ணால் பார்க்கமுடியாத காட்சி என்பது போன்ற வழக்கு; துன்னு-பொருந்தும்; தோடு-பழத்தின் ஓடு.

தெரிவையின் நிலையை உரைக்கும் இந்த உலாப் பகுதியில் திருத்தொண்டர்களைப் பற்றிய செய்திகள் ஏதும் இல்லை.

## பேரிளம்பெண்

502. பேரிளம்பெண்—தெரிவைப் பருவத்தைக் கடந்தவள்; எனவே வயது வரம்பு கூறவேண்டியதில்லை. மதிப்பொறி—சந்திரப்பிரபை என்னும் தலையணி; ஆர- பொருந்தும்படி; ஐம்பாலில் - கூந்தலில்; மகளிரின் தலையலங்காரம் முடி, குழல், கொண்டை, பனிச்சை, சுருள் என ஐவகைப்படுதலின் கூந்தல் ஐம்பால் எனப்படுகிறது; ஏர் உலவும்-சிறப்புடைய.

503. முன்பே கூறியபடி (கண்ணி 297 உரை) இவர் தீவிரதரத்தை நான்கு பிரிவாகப் பிரித்துக் கொள்கிறார். அவற்றுள் மிகமிக அதிகமாகச் சத்தி பதிந்த நிலையாகிய தீவிரதரத்தின் தீவிரதரநிலை இந்தப் பேரிளம்பெண் பகுதியில் இடம்பெறுகிறது. கோது ஈரும்–குற்றத்தைப் பிளந்து அழிக்கும்; மா தேசு சிறந்த ஒளியை உடைய (கண்ணாள்).

504 மை அணுகா–மை தீட்டப் பெறாத; நோக்கத்தாள் – கண்களை உடையவள்; மா தேசு (உடையனவும்) மை அணுகாதவையுமாகிய நோக்கத் தாள் என்க; பேரிளம்பெண் மை தீட்டாமை-

"புயல் ஒழுங்கு
தீரத் தெழுதல்இலாத் தெண்டிரைபோல் அஞ்சனங்கள்
ஓரத்தெழுதாத ஒண்கண்ணாள்"
(திருக்காளத்திநாதர் உலா 509)

ஒப்பனையில் நாட்டமில்லாத இயற்கை அழகி என்பது கருத்து: பின்வருவனவும் இதுவே; வம்பை-மார்க்கச்சை; வெறி செய்ய-நறுமணத்தையும் சிவந்த நிறத்தையும் உடைய.

505. வளை கொங்கை–சற்றே சரிந்த நகில்;
"சற்றே முடிசாய்த்து நின்ற முலையாள்"
(திருவேங்கட உலா 543)

506. பேரிளம்பெண்கள் நிறைய அணிகலன் அணியாமை–

"அவையவத்தின் தொல்லை அபிராமம் எல்லாம்
இவைகரக்க லாவதென் என்றோ–கவின் இசைத்த
நாணாதி ஆபரணம் நான்கெய்தி யோநவம்ஆம்
பூணாரம் அத்தனையும் பூணாதாள்"
(திருவானைக்கா உலா 420, 421)

சேண் ஆரும்–வானுலகில் உள்ள; வாணி–கலைமகள்.

507. கலை சாத்திரமும்-கலைகளும் அறிவு நூல்களும், கலை–மொழிகள், எழிற்கலைகள் எனினுமாம்.

508. பல்சமயமும்முணர்ந்து-யாப்பு நோக்கிய விரித்தல். சிவம் இங்கே சைவ சமயத்தைக் குறித்து நின்றது.

509. ஆரும் பிறவி-(உயிர்களுக்குத் தொடர்ச்சியாக வினைக்கு ஈடாகப்) பொருந்துகின்ற பல பிறவிகள்;

''எழுகடல் மணலை அளவிடின் அதிகம்
எனதிடர் பிறவி அவதாரம்;
இனிஉன தபயம் எனதுயிர் உடலும்;
இனியுடல் விடுக முடியாது;
கழுகொடு நரியும் எரிபுவி மறலி
கமலனும் மிகவும் அயர்வானார்;
கடன்உன தபயம்; அடிமைஉன் னடிமை;
கடுகிஉன் அடிகள் தருவாயே''

என்பார் அருணகிரிநாதர். (திருப்புகழ் 596) ஆரும் மடி–நிறைகின்ற வயிற்றில்.

510. ஆடும் – கொல்லுவதைப்போலத் துன்புறுத்துகின்ற; தாதா-வள்ளல்; பீடு-பெருமை.

511. சமய சய வல்லி – பிற சமயங்களை வாதத்தால் வென்ற வெற்றியை உடைய கொடி போன்றவள்; பேர்–விருது.

512. அப் பெயர் – சமயசயவல்லி என்னும் விருதை.

**513.** பெயர் மாற்றுதற்கா - சயவல்லி என்னும் பட்டத்தை அபசயவல்லி என மாற்றுவதற் காக, அதாவது தோற்கடிக்க; எல்லவரும் – ( பிற சமயத்தினராகிய நாங்கள் ) எல்லோரும்.

இங்கிருந்து இவ் வுலாப் பிரபந்தம் சிவஞான சித்தியார் பரபக்கம், சங்கற்ப நிராகரணம் ஆகிய நூல்களைப் பின்பற்றி ஒவ்வொரு சமயக்கருத்தாக எடுத்துப் பூர்வபட்சம் செய்து, பிறகு மறுத்துச் சைவ சித்தாந்தத்தை நிலைநாட்ட முற்படுகிறது

**514.** மற்று அவரைப் பார்த்துஎன்புழி மற்று மொழிமாற்றின்கண் வந்தது; உமது முத்திநிலை என்றது செய்யுட்கிழமைக்கண்வந்த ஆறாம் வேற்றுமை.

உலகாயதன் - உலகாயத சமயத்தை மேற்கொண்டவன்; இச்சமயம் காட்சி, கருத்து, நூல் ஆகிய மூன்று பிரமாணங்களுள் காட்சியை மட்டுமே தக்கதென மேற்கொள்ளும். ஐந்து பூதங்களுள் காட்சிக்குப் புலனாகாத ஆகாயத்தை விடுத்துப் பூதங்கள் நான்கே எனும். அடிப்படையான நான்கு பூதங்களும் வெவ்வேறு விதமாகக் கலக்க உடலும், உலகும் தோன்றின எனக் கூறும். இச் சேர்க்கை நீங்கியபோது பொருள்கள் தம் நிலை மாறி மீண்டும் நான்கு பூதங்களாக மாறிவிடும் என்னும். இத் தோற்றமும் அழிவும் ஏன் என்று கேட்டால் அது அப் பொருட்களின் இயற்கைப் பண்புஎனப் பதில் சொல்லும். இக் கொள்கை சுபாவவாதம் எனப்படும். உடலின் வேறாக உயிர் என்ற ஒன்றையும் இச் சமயம் ஏற்றுக் கொள்வதில்லை. உயிர், கடவுள், மறுமை, வீடு, பாவம், புண்ணியம் என்பனவற்றை ஏற்றுக்கொள்ளாத இச் சமயத்திற்கு உலகியல் இன்பமே வாழ்வின் குறிக் கோளாகும். கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலன்களாலும் ஒருசேர இன்பம்பெறும் நிலையே இச் சமயத்திற்குப் பேரின்பமாம்.

515. அளவைக்காட்சி - காட்சியளவை என மாறுக, பிரத்யட்சப் பிரமாணம்; நால்பூதம் - மண், நீர், காற்று, நெருப்பு ஆகிய நான்கு

516. மனாதி-மனம் முதலியன; காண்க:

"ஒத்துறு புணர்ச்சியில் உருக்கள்பல ஆகும்
வைத்துறு கடாதிபல மண்ணில்வரு மாபோல்;
புத்திகுணம் நற்பொறி புலன்கள்இவை எல்லாம்
இத்தின்வரும் நீரினில் எழும்குமிழி யொத்தே"
(சிவஞான சித்தியார்--பரபக்கம்-51)

517. காய்-பாக்கு; அடை - வெற்றிலை, வெற்றிலை பாக்கு, சுண்ணாம்பு ஆகிய மூன்றும் சேரும் போது அம்மூன்று பொருள்களில் எதிலும் இல்லாத செம்மை தோன்றுவதைப் போன்று நான்கு பூதங்களின் கலவையால் அதில் இல்லாத அறிவும் உண்டாகிறது. "தேரின் நூறடை காய்செ றிந்தவை சேர வேறு சிவப்பெழும்" (சிவஞான சித்தியார்-பரபக்கம் 38)

518-519. ஒப்பு:

"நித்தலுமே
பூசிமுடித் துண்டுடுத்துப் பூங்குழலார் தங்கலவி
ஆசைதனிற் பட்டின்ப ஆர்கலிக்குள்—நேசமுற
நின்று திளைக்கும் இதுமுத்தி அல்லதுவே
றொன்று திளைக்கும் அதுமுத்தி—அன்றென்று
இலகா இருளலகை போல்இகலே பேசும்
உலகாயதன்"
(நெஞ்சுவிடுதூது 107-110);

அத்தன்-கடவுள்.

520. காட்சி அல்ல - அறிவு புலன்களால் நேரிடையாக அறியப்படும் தூலப்பொருளன்று; சொல், செயல்களால் ஒருவரிடம் உள்ள அறிவு அறியப்படுகிறது, எனவே இது அநுமானமே; கார்-மேகம்.

521. மேதினியோர் - உலகில் உள்ள மக்கள்; துன்னுபுனல்-நிறைந்தநீர், வினைத்தொகை.

522 மாற்றம் – சொல்; சீற்றரவு-சினத்தை உடைய பாம்பு, இராகு கேதுக்களைச் சுட்டியது. சீற்றவரவு எனற்பாலது யாப்பு நோக்கித் தொகுத்தல் விகாரம் பெற்றது

523 ஆரியன்-மேலோன், இங்கு நூலாசிரிய னாகிய அறிஞன்.

524. விடக்கு-ஊன்; தின்னும் அது-உண்ப தாகிய அச்செயல்;

525-526, சோரி-இரத்தம்; என்பு – எலும்பு; மேதை-மாமிசம்; நீர்-இவ்விடத்தில் சிறுநீர்; மச்சை-வழும்பு; முடை மென் தோல்-தீயவாசனையை வெளிப்படுத்துவதும் மென்மையானதுமாகிய தோல்; கபம்–கோழை, ஒப்பு;

"குடரும் கொழுவும் குருதியும் என்பும்
தொடரும் நரம்பொடு தோலும் - இடையிடையே
வைத்த தடியும் வழும்பும் ஆம் மற்றிவற்றுள்
எத்திறத்தாள் ஈர்ங்கோதை யாள்" (நாலடி. 46)

527. தொழுது உய் எனக் கூறி உலகாயதன் மதத்தை மறுத்தாள்; போதம் இலான் - மெய்யறிவு இல்லாதவனாகிய உலோகாயத வாதி.

528-529, புத்தரில்–சவுத்திராந்திகர், யோகா சாரர், மாத்துமிகர், வைபாடிகர் என நான்கு பிரிவின ராகிய பௌத்த சமயத்தினருள்; சவுத்திராந்திகம்-இது ஹீனயான பௌத்தத்தைச் சேர்ந்தது; குமாரலப்தர் என்னும் அறிஞரால் விளக்கப்பெற்றது; இச் சமயம் புறத்தே பொருள்கள் உண்டு என ஏற்றுக்கொள்வது; எனவே பொருள்முதல் வாதம்; சவுத்திராந்திகம்

என்னும் பெயர்க் காரணம்- ''சகம் முழுவதும் இவ்விரு-வகைச் சமுதாயத்துள் (அகம், புறம்) அடங்கும் என்று ஆசிரியன் உணர்த்தினான். அதுகேட்ட மாணாக்கர் இங்ஙனம் மாணாக்கர் வினாவிய கடாவிற்கேற்ப அறி-வுறுக்கூம் சூத்திரங்கள் எவ்வளவின் முடிவுபெறும் எனக் கடாயினார். அவ்வழி ஆசிரியன் சூத்திராந்தம் கடாவிய நீர் சௌத்திராந்திகர் எனப் பெயர் பெறுக என்றமையின் அவர்க்கு அது பெயராயிற்று'' (சிவஞானபோத மாபாடியம் - அவையடக்கப் பகுதி). ஆனால் இன்றைய பௌத்த ஆய்வாளர்கள், ''கௌதம புத்தரின் போதனைகளில்—வினயம் அபிதர்மம் என்னும் பகுதிகளைவிட-சூத்திரப் பகுதியே சிறந்தது என்போர் சௌத்திராந்திகர் எனப்படுவர்'' என்கின்றனர்.

நல் அரு உருவம் வீடும் புகல்வழக்கு மிகும் என்க;

''வரும்உரு அருவம் வீடு
வழக்கென நான்க தாகித்
தரும்அவை ஒன்று இரண்டாய்த்
தான்விரிந் தெட்டி னாமே'
(சிவஞானசித்தியார்-பரபட்சம்-66)

அரு என்பது சித்த அரு, கன்ம அரு என இருவகைப்படும்; உருவம் பூத உருவம், உபாதாய உருவம் என இரண்டாகும்; வீடு குற்றவீடு, கந்தவீடு என இருவகையாம்; வழக்கு உள்வழக்கென்றும் இல்வழக்கென்றும் இரண்டாகும்.

இவற்றுள் புலன்கள் பொறிகளின்வழிச் சென்று அறியும் அருவம் சித்தஅரு எனப்படும்; அவ்வாறு கண்டவற்றை நன்று என்றும் தீதுஎன்றும் பிரித்துக் காண்டல் கன்ம அரு ஆகும்.

நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகிய பூதங்கள் நான்கும் பூத உருவாம்; கடினத்தன்மை, சுவை, வன்னம், நாற்றம் என்னும் நான்கும் உபாதாய உருவம் எனப்படும்.

ஆசை முதலிய பண்புகள் முழுவதும் அழிந்து வீடுபேறடையாமல் சேட்டை கெட முத்தியின்பம் அடையும் என்றது குற்றவீடு எனப்படும்; உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என்னும் ஐந்து கந்தங்களும் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து அழியக் கெட்டு அடைவது கந்தவீடு ஆகும்.

உள்வழக்கு, இல்வழக்கு என்னும் இரண்டும் தொகைஉண்மை வழக்கு, தொடர்ச்சியுண்மை வழக்கு, மிகுத்துரையுண்மை வழக்கு, தொகைஇன்மை வழக்கு, தொடர்ச்சிஇன்மை வழக்கு, மிகுத்துரைஇன்மை வழக்கு என ஆறாக விரியும்.

கந்தம் ஐந்தும் மெய்-உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என்னும் பஞ்சகந்தங்கள் மட்டுமே உள்பொருளாகும்: உருவகந்தமாவது பூதம் நான்கு உபாதாயம் நான்கு ஆக எட்டுமாகும்.

வேதனைக்கந்தம் குசலாவேதனை, அகுசலா வேதனை, குசலாகுசலவேதனை என மூவகைப்படும்; இவற்றுள் குசலாவேதனையாவது இன்பத்தை அறிதல்; அகுசலாவேதனை என்பது துன்பத்தை அறிதல்; சுகம் துக்கம் இரண்டையும் அறிதல் குசலாகுசலவேதனை ஆம்.

குறிப்பு கந்தம் எனப்படுவது மெய், வாய், கண், மூக்கு, செவி, சித்தம் ஆகிய ஆறு கருவிகளுமாம்.

புண்ணியம் பத்தும் பாவம் பத்தும் ஆகிய இருபதும் பாவனா சுந்தம் எனப்படும்; புண்ணியம் பத்தாவன :- அருள், அவாவின்மை, தவத்தில் விருப்பம் என மனத்தால் நிகழும் மூன்றும், இனியவை கூறல், உண்மை கூறல் பயனுள கூறல், அறம் உரைத்தல் என வாக்கால் நிகழும் நான்கும், வணக்கம், ஈகை, தவம்செய்தல் என உடலால் நிகழும் மூன்றும் ஆம். பாவம் பத்தாவன - தீய எண்ணம், ஆசை, சினம் என உள்ளத்தால் நிகழும் மூன்றும், கடுஞ்சொல், பொய் கூறல், பயனில் சொல், கோள் கூறுதல் என உரையால் நிகழும் நான்கும், களவு, கொலை, வீண்செயல் என உடலால் நிகழும் மூன்றும் ஆம்.

விஞ்ஞான கந்தமாவது குறிப்பு கந்தமாகிய ஆறு கருவிகளால் அறியப்படும் ஆறு அறிவுமாம்.

இந்தக் கந்தங்கள் ஐந்தும் மற்றுள்ள விவ-காரங்களும் முன்னர்ச் சொல்லப் பெற்ற உரு, அரு, வீடு, வழக்கு என்னும் நால்வகையினுள் அடங்கிவிடும். எனவேதான் வழக்குக்கந்தம் என வந்தது; வழக்கினுள் அடங்கும் கந்தம் என வேற்றுமைத்தொகை.

அன்றி-அல்லாமல், நால்வகையுள் அடங்கும் கந்தங்கள்-ஐந்தை அல்லாமல் என்றபடி; காலம் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்று மூவகைப்பட்ட காலம்; உயிர்-ஆன்மா; வான் - ஆகாயம், (பௌத்தர்கள் ஆகாயமாகிய பூதத்தை ஏற்பதில்லை உலோகாயதர் போலவே); திக்கு ஆம் - திசைகள் ஆகிய; இந்த விதியோடு – கூறப்படுகின்ற இந்த விதிக்கப்பெற்ற கோட்பாடுகளோடு; இறையும் இலை - கடவுள் என்ற ஒரு பொருளும் இல்லை; காலம் முதலிய நான்கும் இறையைநோக்கக்கீழான தத்துவங்களாதலின் அவற்றை ஒடுக்கொடுத்துப் பிரித்தார்; இறையும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு; அன்றியும் கேட்போனுக்கு

உயர்வு சிறப்பும் புகல்வோனுக்கு-அவன் நிரீசுரவாதியாகலின் - வெறும் எண்ணும்மையும் ஆம் எனினும் இழுக்கின்று.

"சொன்னநூல் வகையும் இன்றிச்
சொல்லிடும் பொருள்கள் எல்லாம்
என்னையோ அறிகிலோம்; பித்து
ஏறியோ? வானம் ஆன்மா
மன்னுகா லங்கள் திக்கு
மனமொடு வாக்கி றந்திட்டு
உன்னும்ஓர் இறையும் உண்டென்று
உரைப்பது நித்தம் அன்றே.
(சிவஞான சித்தியார்-பரபக்கம் 75)

530 உலகில் வந்து செத்த உரு எனக்கூட்டுக; செத்த உரு மண் நிகர் - இறந்த உடல் மண்ணைப் போன்றதுதான்; அதனால் ஊன் உண்ணலால் தவறில்லை என்றபடி. "கொன்றிடல் ஆகா தென்றும் கொன்றவை கொண்டு நாளும் தின்றிடல் ஆகும்; மண்ணோடு ஒத்திடும் செத்த எல்லாம்" (சிவஞான சித்தியார்-பரபக்கம் 92); எப்பொருளும் ஒத்த கணம் தோன்றி உடன் மாயும்-உலகத்தில் நம்மால் காணப்படுகின்ற பொருள்கள் யாவும் ஒருகணத்தில் உண்டாகித் தன்னைப்போல் மற்றொன்றைத் தோற்றுவித்துவிட்டுத் தான் அழிந்துவிடும்; பௌத்தர்களின் இக் கோட்பாடு கணபங்கவாதம் எனப்படும். இவ் வழிவு கெட்டுக்கெட்டு வருதல், கெட்டு ஒத்துநிற்றல், கெட்டுக் குறைதல், கெட்டு வளர்தல் என நான்காகும் எனக் கூறி இவற்றிற்கு உதாரணமாக முறையே காற்றின் வீச்சு, விளக்கின்சுடர், நீரோட்டம், எறும்பொழுக்கு என்பன வற்றைக் காட்டுவர்; இவற்றின் விரிவைப் புத்தசமயத் தத்துவ நூல்களிற் காண்க.

531. பொன்றக் கெட்டு முழுவதுமாக அழிந்து; நவை இல்-குற்றமற்ற;

"ஓங்கிய உருவ மோடும்
வேதனை குறிப்பி னோடும்
தாங்குபா வனைவிஞ் ஞானம்
தாமிவை ஐந்தும் கூடிப்
பாங்கினால் சந்தா னத்தில்
கெடுவது பந்த துக்கம்;
ஆங்கவை பொன்றக் கேடாய்
அழிவது முத்தி இன்பம்"
(சிவஞான சித்தியார் – பரபக்கம் 94)

அவ மதியாய்–தவறான அறிவை உடையவனே.

532-533. வானம் இடம் கொடுத்தலால்– ஆகாயம் எனப்படும் வெளி நிலம் முதலிய மற்ற நான்கு பூதங்களும் நிலைபெற்றிருக்க இடத்தைத் தந்திருப்ப தாலும்; வல்வினைகள் என்புழி இரண்டன் உருபு விரிக்க; உயிர் வல்வினைகளை ஈனமற அருந்தி முத்தியுறலால் உயிரும் ஆம் என்றவாறு; வினைகளை அருந்துதல் என்பது நல்வினை, தீவினைப் பயன்களைத் துய்த்தல், அருந்துதல் எனல் மரபுவழக்கு. 'மேவிய மகிழ்ச்சி வினைப்பயன் உண்குவர்'' (மணிமேகலை – ஆபுத்திரன் நாடடைந்த காதை - 140) என்றார் சாத்தனாரும்; தம் பயனை எங்கும் எப்படியும் ஊட்டும் திறம்பற்றி வல்வினைகள் என்றார், வினைகளைத் துய்த்துக்கழித்தே இருவினையொப்பின்வழிப் பிறவிநோயைக் களைய வேண்டுமாதலின் ஈனம்அற என்றார்; உயிரும் ஆம்– உயிரும் உள்பொருளே ஆகும்; உயிர் என ஒன்று இருந்தால்தான் அது வீட்டையடைந்து இன்பந் துய்க்க இயலும்; மூவினைமையால் காலம் நலம் தீமைவர (உண்டு)–இறப்பு, நிகழ்வு, எதிர்வு என மூன்றுநிலை எத்துணைச் சிறிய நேரத் துளிக்கும் உண்டு, ஆதலால் காலம் என்பதொன்று உண்டு, அது உயிர்களுக்கு நன்மை தீமைகளைச் செய்யும்; திக்கு நலம் தீமை வர உண்டு– தம்மைநோக்கிக் கன்மஞ் செய்தோர்க்கு அதற்குரிய பலன்களைக் கொடுக்கும் திசைகளும் உண்டு, விரும்பிய

பயன் கிடைத்தல் நன்மையும் காலவிசேஷத்தால் கிடைக்காவிட்டால் தீமையும் ஆம் என்க, இங்குத் தீமை என்றது எண்ணம் நிறைவேறாமை என்னும் அளவில் நின்றது; நலம் தீமை வர என்னும் தொடர் தனித்தனியே காலம், திக்கு என்பனவற்றோடுசேர்ந்தது; இதனைச் சேர்ப்பவனும் ஆம்-இந்தக் காரியங்களை ஒன்றாக இணைத்துச் செய்யும் காரியகர்த்தா ஆகிய இறைவனும் உண்டு; நீ அறி-இதனை நீ தெளிவாகத் தெரிந்து கொள்வாயாக,

எப்பொருட்கும்இரந்தரமாய்இடம்கொடுத்துநீங்காது
இருள்ஒளிதா னன்றிஇரண் டினுக்கும்இட வகையாய்
ஒப்பில்குணம் சத்தமதாய் வாயு வாதி
உதித்தொடுங்கநிற்கும்வான்;உயிர்முன்னேசொன்னோம்
செப்பிடும்கா லம்பொழுது நாளாதி யாகித்
திரிவிதமாய் தீமைநன்மை செய்யும்; திக்கு
தப்பில்குணக் குக்குடக்குத் தெற்குவடக் காதி
தானாகித் திரியாதே நின்றுபலந் தருமே

காரியமாய் உலகம்எலாம் இருத்த லாலே
கடாதிகள்போல் காரியகர்த் தாஒருவன் வேண்டும்''
(சிவஞான சித்தியார்-பரபக்கம் 127, 128.)

534. முத்தி இறந்து கெடின் - முத்தி எனப் படுவது ஐந்து கந்தங்களும் முற்றிலும்அழிந்து கெடுவதே என்றால்; முன்னோனுடன் - இறைவனுடன்; உயிரும் ஒத்து அறியுமோ-ஆன்மாவும் இணைந்து இன்பத்தை உணருமோ? உணராது என்றபடி; கந்தம் ஐந்தும் அழிந்தால் வீடுபெற மீதம் ஒன்றும் இல்லை, ஆனால் முத்தியின்பத்தை அறிவு நுகரும் என்றால் கந்தங்கள் அழியவில்லை என்பது பெறப்படும், எனவே முத்தி இல்லையாயிற்று;

''ஐந்துகந்தம் சந்தானத் தழிதல்பந்த துக்கம்
அறக்கெடுகை முத்தியின்பம் என்றறைந்தாய்; கந்தம்
ஐந்தும்அழிந் தால்முத்தி அணைபவர்யார்? என்ன
அணைபவர்வே றில்லைஎன்றாய்; யார்க்குமுத்தி
இன்பம்?
ஐந்தின்உணர் வினுக்கென்னில் அழியாத உணர்வுஉண்டு;
ஆகவே அவ்விடத்தும் உருவாதி கந்தம்
ஐந்தும்உள வாம்; அதுவும் பந்தம் ஆகி
அரந்தைதரும்; முத்திஇன்பம் அறிந்திலைகாண் நீயே''
(சிவஞான சித்தியார்-பரபக்கம் 133)

535. செப்பிய இத் தீநெறி – நீ இதுவரை கூறிய புலைநெறியாகிய சௌத்திராந்திக பௌத்த சமயத்தை; ஈசன் – சிவபெருமான்; சைவசமயக் கருத்துக்களை ஏற்றுக்கொள் என்றவாறு.

536–538. அன்ன சொல் சீரை–சௌத்தி ராந்திகன் கூறிய அத்தகைய சொற்களை, சொற்சீர்–ஒருபொருட்பன்மொழி; திகைத்து அகன்றான்–சமய சயவல்லியின் மறுப்புரைக்குப் பதில் கூறமுடியாமல் மயங்கிச் சௌத்திராந்திகன் அவ்விடத்தை விட்டு நீங்கினான்.

யோகாசாரம்-இது மகாயான பௌத்தத்தைச் சேர்ந்தது; இச் சமயத்திற்கு வடிவம் கொடுத்தவர்கள் அசங்கா, வசுபந்து என்னும் அறிஞர்கள் ஆவர்; இவர்கள் காலம் கி. பி. 4 ஆம் நூற்றாண்டு. பெயர்க்காரணம்:– ''ஆசிரியன் மொழிந்ததனை உடம்பட்டு அதற்குமேல் வினாயினார் ஆகலின் யோகாசாரர் என்று ஆயினார் என்பது. பௌத்தமதத்தில் ஆசிரியன்மொழி உடம்படு தலை ஆசாரம் எனவும், அதற்குமேல் வினாவுதலை யோகம் எனவும் குறியிட்டு வழங்குபவாகலான் அவ் விரண்டானும் பெற்ற பெயர் என்றுணர்க'' என்பார் சிவஞான முனிவர் (சிவஞானபோத மாபாடியம்

அவையடக்கப் பகுதி); இதனை இன்றைய அறிஞர்கள் ஏற்பதாகத் தெரியவில்லை; பொதுவாக நுட்பமான தத்துவ ஆராய்ச்சியையும் நல்ல ஒழுக்கத்தையும் வலியுறுத்துவதால் யோகாசாரம் எனப்பட்டது எனக் கொள்ளலாம்; யோகாசாரம் ஜடப்பொருள்கள் அனைத்தும் பொய்யானவை, எனினும் சித்தம் அல்லது மனம் என்னும் ஒன்றுமட்டும் உண்மையானது என ஏற்றுக் கொள்கிறது; எண்ணங்களின் தொகுப்பாகிய மனம் என்பது இல்லாவிட்டால் சிந்தனைக்குச் சற்றும் இடமில்லை; இக் கொள்கை விஞ்ஞானவாதம் எனப்படும்.

தகுபோதம் மாறும் பொருளாகித் தோன்றும்-அறிவே இந்திரியங்களுமாய்த் தோன்றுகின்ற வடிவங்களுமாய் வரும்; பொருளாய் எழலால்—அவ்வாறு காணப்படும் உருவங்களாக வருவதனாலும்; வருபோதம் வாதனையில் கூடி வரலால் – அப்படி வந்த அறிவு இந்திரிய வாதனைகளோடு சேர்ந்து வருதலாலும்; வடிவு இலது அதனால்—அறிவு உருவமற்ற அருவமாக இருப்பதாலும்; கனவை மானும் சகமும் ஒடிவு இல் அறிவு—சொப்பனத்தைப் போன்ற உலகமும் அழிவற்ற அறிவேயாகும்; பொருளாய் எழலாலும், வாதனையில் கூடி வரலாலும், வடிவிலதனாலும் கனவை மானும் என எண்ணும்மைகளை விரித்துக் கூட்டுக; அறிவோன், அறிவு, அறியப்படுபொருள் என்னும் மூன்றில் அறிவு ஒன்றே உள்பொருள்; அதுவே அறிவோனாகவும், அறியப்படு பொருளாகவும் பிரிந்து வெளியே வேறு பொருள்களைப் போலத் தோற்றமளிக்கிறது; உள்ளத்திற்கு வெளியே ஒன்றும் இல்லாதபோதும் பொருள்கள் இருப்பதுபோலக் காட்சியளிப்பதற்குக் கனவே சிறந்த சாட்சியாகும்; கனவு போலவே நனவும் ஒருவகை இல்பொருள் காட்சிதான் ஒன்பது யோகாசாரரின் கொள்கை; முற்கூறப் பெற்ற செளத்திராந்திகனின் கொள்கைகளுள் பலவற்றை ஏற்றுக்கொண்டு

சிறப்பாக வேறுபட்ட கொள்கையை மட்டுமே இவன் கூறுகிறான் என்க; இக் கண்ணிகள் யோகாசார மதத்தைக் கூறும் சித்தியார்ப் பாடலின் மறுபதிப்பே; அவ் விருத்தம் வருமாறு:-

''போதமே பொருளாய்த் தோன்றும்;
பொருளதாய் எழலால், போதம்
வாதனை அதனால் கூடி
வருதலால், வடிவி லாமை
ஆதலால் கனவே போலும்
சகம்; உள தறிவே ஆம் என்று
ஓதினான் ஓதான் ஆய
உணர்வினால் யோகா சாரன்''
(சிவஞான சித்தியார்—பரபக்கம்-135)

*539 – 541.* நொடியும் அறிவு கணத்தில் கெட்டது - உன்னால் உள்பொருளாகக் கூறப்படும் அறிவு உன்னுடைய கணபங்க வாதத்தின்படிஓர் இமைப்பொழுதில் அழிந்துவிடுகிறது: வாதனையில் உறுவது நீ எப்படி ஓர்வுற்றாய்—அப்படியிருக்க அந்த அறிவு வாதனையோடு கூடி வருவதை நீ எங்ஙனம் அறிந்தாய், அழிந்த அறிவு எவ்வாறு தொடர்ந்து வரும் என்றவாறு; அறியும் அரு—பொருள்களை அறியும் அறிவாகிய அருவப் பொருள்; பேதித்து—தன் உருவ மற்ற தன்மை மாறி; மண் முதலாம் பேத உரு ஆகுமோ- நிலம் முதலாகப் பல்வேறு உருவங்களாக மாறுமோ, அருவப்பொருள் தன் இயல்பு மாறிப் பற்பல உருவப் பொருள் ஆகுமோ என்னும் வினா ஆகாது என்னும் பொருளது; ஓது உள் போதம்-சொல்லப்படுகின்ற உண்மைப் பொருளாகிய அறிவு; பொருளாய் உற்று ஒழியா-தானே அறியப்படுகின்ற பொருளாக மாறித் தான் இல்லாமல் அழிந்து போகாது, ஒருவன் உலகத்தை அறிகின்றபோது நான் உலகம் என்று கூறாமல் இது உலகம் எனப் பிறிது பொருளாகக் கூறுவதாலேயே

அறிவு வேறு, அறியப்படும் பொருள் வேறு, அவை இரண்டும் ஒன்றாகா என்பது பெறப்படுகிறது;

இலை என்று கொண்டோய்-அறிவைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை என்னும் கொள்கையை உடைய யோகாசாரனே; வருந்தும் உயிருக்கு வாதனையும் உண்டோ-இயல்பாகவே துக்கத்தைத் தன் இயல்பாகப் பெற்ற ஆன்மாவிற்கு வாதனை என்ற மற்றொரு பொருளும் உளதாமோ, அறிவுமட்டும் உள்பொருள் என்றால் வாதனை என்றது எங்கிருந்தது வந்தது என்ற படி; சிவன் அருளில்கூடு-சைவசமயத்தில் சார்வாயாக.

542. பொறியிலி-அறிவற்றவன், சைவத்தில் சேர்வதற்கேற்ற நல்லூழற்றவன் எனினுமாம், இக் கருத்து தெய்வச் சேக்கிழார் பெருமான், ''சமயங்க ளானவற்றின் நல்லாறு தெரிந்துணர நம்பர்அரு ளாமை-யினால் கொல்லாமை மறைந்துறையும் அமண்சமயங் குறுகுவார்'' (பெரியபுராணம் – திருநாவுக்கரசர் 37) என அருளியதன் அடிப்படையில் கூறப்படுகிறது; ஊற்றம்-இங்கே மெய்யறிவின் உறுதிப்பாடு, ''தடுத்த-புறச் சமயிகட்குத் தரமுறுத்தி நிறுத்துகின்றார் தம்பால் ஊற்றம்'' என்பதால் இச் சொல் இப் பொருட்டாதலை அறியலாம் (கொலை மறுத்தல் 3)

மாத்துமிக பௌத்தம் இது மகாயானத்தின் உட்பிரிவாகும்; கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இருந்த ஆரியதேவர், நாகார்ச்சுனர் என்னும் இரண்டு அறிஞர்கள் இதனைத் தோற்றுவித்தனர்; பெயர்க் காரணம் :- '' ஆசிரியன் மொழிந்தது பொருள் எனக் கோடலில் தலைமாணாக்கர்; அதற்குமேல் வினா நிகழ்த்தாமையின் கடைமாணாக்கர் என இரண்டும் ஒருங்குற்று நின்றமையின் மத்தியம மாணாக்கராய் மாத்தியமிகர் எனப்பெயர் பெற்றார் என்பது'' (சிவஞானபோத மாபாடியம்–அவையடக்கப் பகுதி);

இக்காலத்தார் இதனை ஏற்காமல், '' எதிர்நிலைக் கொள்கைகளை நீக்கி, உலகம் முற்றிலும் பொய்யும் அன்று மெய்யும் அன்று என நடுநிலை கூறுவதால் மாத்தியமிகர் எனப்பட்டனர் ''என்பர்.

உற்று அவள்முன்; அவள்—சமய சயவல்லி பண்டாறி சுட்டு.

543-544. அவயவங்களே பொருளும் ஆகும்-அறிகருவிகள் ஐந்து, தொழில்கருவிகள் ஐந்து ஆக இந்திரியம் பத்தும் பொருளாகத் தோன்றும்; அவை இன்றேல் பலபொருள் இன்றாகும் - அந்தப் பத்து இந்திரியங்களும் போனால் தோன்றும் பொருள்களும் இல்லாமற் போகும்; பகரும் பவ பொருளும் இன்றேல்-கூறப்படும் தோற்றப் பொருள்களும் இலவாயின்; அறிவும் இலையாகும்-(பொருள் இவை என அறிவதற்கு ஒன்றுமின்மையின்) அறிவும் இல்பொருளாகிவிடும்; இக் கண்ணிகளும்,

''அவயவம் பொருளாய்த் தோன்றும்;
அவயவம் ஒழிந்தால் பின்னை
இவைபொருள் என்ன வேறொன்று
இலாமையால் பொருள்கள் இன்றாம்;
அவைபொருள் இலாமை யாலே
அறிவும்இன் றாகும் என்று
நவைதரு மொழியி னாலே
நவிலும்மாத் தியமி கன்தான்''
(சிவஞான சித்தியார்—பரபக்கம் 138)

என்பதன் மறுபதிப்பே; மின்தோய் - மின்னலைப் போன்ற, தோய்-உவமஉருபு, ''பாலருவித் திங்கள்தோய் முத்தமாலைப் பழிப்பில்நெடுங்குடை'' (சிந்தாமணி 291) என்புழிப்போல.

545. ஒன்றும் அவயவங்கள் கண்டு உணராது அப்பொருளை-இந்திரியங்கள் கூடிநின்று ஆன்மா ஆகிய ஒரு பொருளை அறியமாட்டாது; மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் அறிகருவிகள் ஐந்தும், வாக்கு, கால், கை, குதம், குறி ஆகிய தொழில்கருவிகள் ஐந்தும் ஒன்றாகக் கூடிச் செயல்பட்டாலும் அவற்றோடு ஆன்மா வந்து கூடாவிட்டால் எப்பொருளையும் அறிய இயலாது என்றவாறு, இங்குப் பொருள் என்றது உயிரை; அன்றி-அல்லாமலும்; இவையை-இந்த அவயவ அவயவி களை; அற்றுச்சாரியை கெட்டது; கடபடத்தில் ஆக்கில்-குடத்திலும் துணியிலும் வைத்து ஆராயின்; அவை—அந்த அவயவங்கள்; வெவ்வேறு எய்தும்-குடத்திற்கு அவயவம் மண் ஆகவும் துணிக்கு அவயவம் நூல் ஆகவும் வேறுவேறு பொருளாக இருக்கும், அந்தந்த அவயவங்களிலே அந்தந்த அவயவியே உண்டாகித் தோன்றுமேயன்றி வேறு உண்டாகா என்றவாறு; அவயவங்களே பொருள் ஆகா—அதனால் அவயவங்களே பொருளாகமாட்டா, இரண்டும் வேறுவேறாகும் என்றபடி.

பொருளுக்கு எய்தும் அவயவங்கள் இன்றியே எய்தியது-ஆன்மாவால் இந்திரியங்களின் துணை இல்லாமலே உணரப்படும் உணர்வுகள்; கண்ட பொறியும் அறியாது காண்—நேராகப் பார்த்த கண்ணாலும் அறியப்படாது என்பது உறுதி, கண்ட பொறி எனக் கண்ணைக் கூறியது பிற இந்திரியங்களுக்கும் உபலட்சணம்; இந்திரியங்களோடும் அவற்றின் விடயங்களோடும் ஆன்மா கூடி நின்றால்தான் உணர்வு உண்டாகும். எனவே ஆன்மா என்ற ஒன்று உண்டு என நிருபிக்கப்படுகிறது.

அரனை-சிவபெருமானை; மண்டும்-மிகுதியான; கண்டித்து-மாத்தியமிகன் கூறிய கொள்கையை எதிர்த்து.

548. துணுக்குற்று அவன் ஏக, அல்லது துணுக்குற்றவன் ஆகிய மாத்தியமிகன் என வினையாலணையும்பெயர் ஆக்கினுமமையும்; வல்லை-விரைவாக; வைபாடி—வைபாடிக பௌத்தன்.

வைபாடிகம் - இது ஹீனயான பௌத்தத்தின் உட்பிரிவு ஆகும்; இச் சமயத்தைத் தாபித்தவர்களுள் தின்னாகரும் தருமகீர்த்தியும் முதன்மையானவர்கள்; பெயர்க் காரணம்:– ''ஆசிரியன் அங்ஙனம் உணர்த்திய–வழிஅதுகேட்ட மாணாக்கர் புறப்பொருள் ஞானத்தால் அநுமித்து அறியற்பாற்று என்றது என்னை? ஞானமே தனக்குக் காட்சிப்பொருளாகலானும். காட்சிப்பொருள் ஒன்றும் இன்றாயின் வியாத்தி உணர்தற்குஇடமின்மை-யான் வழியளவை நிகழாது ஆகலானும் இது மாறுகோள் உரை போலும் எனக் கடாயினராகலின் அவர் வைபாடிகர் எனப்பட்டார். மாறுகோள் உரை எனினும் விபாடை எனினும் ஒக்கும்'' (சிவஞானபோத மாபாடியம் – அவையடக்கப்பகுதி); இன்றைய அறிஞர் இக்கருத்துக்கு மாறுபட்டு, அபிதர்மத்திற்கு எழுதப் பெற்ற விபாஷா என்னும் விளக்கஉரையைச் சற்றும் மாறாமல் அப்படியே முழுமையாகப் பின்பற்றினவர்கள் வைபாஷிகர்கள் எனப்பட்டனர் என்பர்.

549-552 அரிசனமும்நூறும் அணுக-மஞ்சளும் சுண்ணாம்பும் ஒன்றுசேர; அருணம் தருவது அது போல – சிவப்பு நிறம் தோன்றுவதைப் போன்று; சகமும் பொருளும் ஞானமும் மருவ வரும் என்க; சகமும் என்புழி இறந்தது தழுவிய எச்சஉம்மை, அருணத்தைத் தழுவியது, மற்ற இரண்டும் எண்ணும்-மைகள்; காணப்பட்ட பொருள்களும் இந்திரிய விடயமான அறிவுஞ் சேர்ந்தபோது உலகப்பொருள்கள் தோன்றும் என்றவாறு.

" அரிசனம் நூறு கூட
அருணம்வந் தெழுந்தாற் போல
விரிசகம் பொருள்கள் ஞானம்
விரவிட மேவித் தோன்றும் "
(சிவஞான சித்தியார்–பரபக்கம் 141)

பொருள் சகமும் – பொருளும் சகமும் என உம்மை விரிக்க, ஆன்மாவும் உலகமும்; உள்ளும் புறம்பு ஆய்–அகத்தும் புறத்தும் அமைந்தனவாக, நிரல்நிறை; அருவும் உருவும் ஆம்–வடிவமற்றதும் வடிவமுள்ளதும் ஆகும், இதுவும் நிரல்நிறை; அவை ஒன்றாகியே தான் சேர வருவதெங்கே என இயையும். அகத்தே உள்ள அருவமாகிய ஆன்மாவும், புறத்தே உள்ள உருவமாகிய உலகப் பொருள்களும் ஒன்றாகச் சேராது என்றவாறு

" பொருளது புறம்ப தாகும்;
போதம்அந் தரம தாகும்;
தெருளிடின் இரண்டும் சென்று
சேர்ந்திடு மாற தின்றாம்;
அருஉணர்வு உருவம் ஞேயம்
ஆதலி னாலும் கூடா "
(சிவஞான சித்தியார்-பரபக்கம் 142)

பொய்யை மாற்றி–பொய்யாகிய கொள்கையைக் கைவிட்டு; பரமன்–சிவபெருமான்; நிகண்டருகக் கையன் – நிகண்டவாத சமணனாகிய சிற்றறிவினன், நிகண்டவருக எனற்பாலது கெடுதல் விகாரம் பெற்றது.

சமணர்கள் உடையற்றவர் ( திகம்பரர் ), வெள்ளுடையர் (சுவேதாம்பரர்) என இரு பிரிவினர் ஆவர். நிகண்டர் என்ற சொல் ஆடை இல்லாதவர் எனப் பொருள்படும். எனவே இப்பகுதி திகம்பர சமண சமயத்திற்குரியது.

கி.மு. ஆறாம் நூற்றாண்டில் தோன்றியசமண சமயம் கி.பி. முதல் நூற்றாண்டில் முற்சொல்லப் பட்ட இரு பிரிவாகப் பிரிந்தது. வர்த்தமான மகாவீரரின் திருமணம், சமணத் திருநூல் திரட்டு, முழுத்துறவும் மகளிர்தம் ஆன்மவிடுதலையும் என்னும் மூன்று விஷயங்கள் பற்றிய கருத்து வேறுபாடே இப் பிரிவிற்குக் காரணம். மகாவீரர் திருமணமே செய்து கொள்ளவில்லை என்பதுவும், பாடலிபுரத்துத் திருநூல் திரட்டு முழுமையாக ஏற்புடையதாகாது என்பதுவும், ஆடையையும் துறந்து முழுத்துறவு கொள்ள இயலாததால் பெண்கள் இப் பிறவியில் மோட்சம் பெறாமல் ஆணாக மறுபிறவி எடுத்த பின்னரே வீடு பெறுவர் என்பதுவும் திகம்பரர்களின் கொள்கைகள் ஆகும். இவர்கள் நிர்க்கந்தவாதிகள் எனவும் வழங்கப்படுவர்.

**553-556.** பொன்னெயில் வட்டம்-பொன் மதிலால் சூழப்பெற்ற சமவ சரணம் என்னும் சமணத் திருக்கோயில்; இது பூமிக்கு ஐயாயிரம் வில் உயரத்திற்கு மேலே பன்னிரண்டு யோசனை அளவுள்ளதாய்ச் சௌதருமேந்திராதி தேவர்களால் நிருமிக்கப்பெற்ற ஜினாலயம்; இதற்குப் பூமியிலிருந்து இருபதினாயிரம். படிகள் உள்ளன என்பர்; இது குபேரனால் நிருமிக்கப் பெற்றதென்றும் கூறப்படும்; அனந்த ஞானாதி-அனந்த ஞானம் முதலிய எட்டு; அவையாவன:- அனந்த ஞானம்- எல்லையற்ற அறிவு, அனந்த தரிசனம்–எல்லையில்லாக் காட்சி, அனந்த வீரியம்—அளவற்ற ஆற்றல், அனந்த சுகம்—முடிவற்ற இன்பம், நிர்நாமம்-பெயர் இன்மை, நிர்கோத்திரம்-குலமரபின்மை, நிராயுஷ்யம்-(பிறப்போ இறப்போ இல்லாததால்) ஆயுள் வரையறையின்மை, சம்யதாபாவம் – அழிவின்மை என்பன; அருகபரன்– அருகக் கடவுளாகிய பரம்பொருள், சமணத்தில் தத்துவரீதியாக இறை என்று ஒன்று இல்லாவிடினும் கன்மத்தளை நீங்கி அசீவத் தொடர்பு முற்றிலும் அற்று

வீடுபேற்றை அடையும் சீவனே இறையைப் போலக் கருதப்படுகிறது. இறைவன் இல்லாத சமயம் நடைமுறைச் சாத்தியமில்லையாதலின் பிற்காலத்தில் அருகக்கடவுள் என்ற ஓர் உருவக்கடவுளே சமணர்களின் வழிபடு தெய்வமாகி விட்டார்.

"அடைவிலா யோனி யானாய்
யாரும்ஒப் பாரும் இன்றிக்
கடையிலா ஞானம் எய்திக்
கணங்கள்நான் மூன்றும் சூழ்ந்து
புடையெலாம் போற்றி ஏத்தப்
பொன்னெயிற் பிண்டி மூன்று
குடையினால் இறைவன்" (நீலகேசி 446)

எனப் போற்றப்பெறும் இவ் வருக தேவன்

"முழங்கும் கலைமகள் காந்தன்கண் டீர்முது நீர்மடுவும்
கிழங்குந் தவிர விசும்பிடைப் பூத்தலர் கிண்டிவண்டு
தழங்குங் கமலத்து வந்துல கேழையுந் தந்தவரே"
எனப் பிரமனாகவும்,

"எம் அச்சுதா னந்தனை மாறிலாத மலர்மகள்
காந்தனை"

எனத் திருமாலாகவும்,

"ஆதிமுதற் கடவுளுக்குக் குணப்பேர் தூய
ஆயிரத்தெட் டுடையவற்கைந் துளவாம் என்ப;
கோதில்புகழ்ச் சத்தியோ சாதன், வாமன்,
அகோரன், ஈசானன், தற் புருடன் என்று
சாதமுதற் கலியாணம் ஐந்தின் வானோர்
தாமன்பால் இட்டதிரு நாமந் தானே"

எனச் சிவபெருமானாகவும் போற்றப்படுகிறார்.

(திருக்கலம்பகம் 6, 32, 49)

சொல் நூலில் - உரைத்த வேதத்தில், அது பரமாகமம் எனப்படும்; எழுத்து அஞ்சினால் - பஞ்சாஸ் தமயம் என்னும் வாக்கியத்தினாலே, எழுத்து முதலில் சொல்லை உணர்த்திப் பிறகு சொற்களானியன்ற

வாக்கியத்தை உணர்த்தலால் இருமடியாகுபெயர்; பத்தாம்–(உரைக்கப்பெற்ற பொருள்கள்) பத்து ஆகும், அவை காலம் உயிர், தன்மம், அதன்மம் நன்மை, தீமை, ஆகாயம், புற்கலம், பற்று, வீடு என்பனவாம்.

"எனக்கேட்டாங் கெடுத்துரைப்பான் இந்திரர்கள்
தொழப்படுவான்
தனக்காய தர்மமும் அதர்மமும் காலமும்
கனப்பாட்டிற் காயமே உயிர்உருவே புண்ணியமே
நினைக்குங்கால் பாவமே கட்டுவீ டெனநிறுத்தி"
(நீலகேசி 288)

இப் பொருட்களை அஸ்திகாயம் என்னும் வாய்பாட்டோடு வழங்குதல் சமண மரபாகும். இவற்றுள் சீவாஸ்திகாயம் (உயிர்), புற்கலாஸ்திகாயம், தர்மாஸ்திகாயம், அதர்மாஸ்திகாயம், ஆகாசாஸ்தி காயம் என்னும் ஐந்தும் மூலபதார்த்தமாகும். இவை பஞ்சாஸ்திகாயம் எனப் பெயர் பெறும்.

இப் பத்தனுள் புற்கலம், ஆகாசம், காலம், தர்மம், அதர்மம் என்னும் ஐந்தும் அசீவ மூலங்கள்- அசேதனப் பொருள்கள் ஆகும் இவற்றுள் காலம் பருமன் இல்லாதது. எனவே அநஸ்திகாயம் என வழங்கப் பெறும். ஏனைய நான்கும் பருமனுடையவை, ஆதலால் அஸ்திகாயம் எனப்பெறும்.

காலம்–தனியே காலத்திற்குத் தொடக்கமும் முடிவும் இல்லை. ஆனால் நடைமுறையில் உலகியற் சம்பவங்களின் துணைகொண்டு விநாடி முதல் யுகம் வரை பகுத்து வழங்குகிறோம். இறப்பு, நிகழ்வு, எதிர்வு எனக் கூறுவதும் நாமாகப் படைத்துக் கொள்வதே ஆகும். இக் காலம் என்பது தனிப்பட்ட, தொடர்பற்ற நுண்புள்ளிகளைப் போன்றது ஒருபொழுதும் கூட்டுச் சேராமல் அண்டவெளியை நிரப்பி நிற்கும்.

உயிர்—ஆன்மா, சீவன் எனப்படுவது இதுவே. இது சடப்பொருள் அன்று; அறிவுமயமானது; என்றுமே அழியாதது; முதலும் முடிவும் அற்றது; உயிர்கள் கணக்கிலடங்காதன வாகும்; உயிர் தான் இருக்கும் உடலின் பருமனுக்கும் அளவிற்கும் ஏற்றவாறு விரிந்தும் சுருங்கியும் வடிவமெடுக்கும்; இதன் குணங்களாவன:-

'' அறிவுஅருள் ஆசை அச்சம் மானம்
நிறைபொறை ஓர்ப்புக் கடைப்பிடி மையல்
நினைவு வெறுப்புஉவப்பு இரக்கம்நாண் வெகுளி
துணிவுஅழுக் காறுஅன்பு எளிமை எய்த்தல்
துன்பம் இன்பம் இளமை மூப்புஇகல்
வென்றிபொச் சாப்பு ஊக்கம் மறம்மதம்
மறவி இனைய உடல்கொள் உயிர்க்குணம் ''
'' துய்த்தல் துஞ்சல் தொழுதல் அணிதல்
உய்த்த லாதி உடலுயிர்த் தொழிற்குணம் ''

(நன்னூல் 452, 453)

தன்மம், அதன்மம்—சட உலகத்தின் அணுக்களை இயக்கும் சக்தி தன்மம் என்றும், இயக்கமற்ற பொருட்களை அந்த நிலையிலேயே நிறுத்திவைக்கும் சக்தி அதன்மம் என்றும் கூறப்பெறும். தன்மம் தான் முதல் இயக்கத்தைத் தராது; அதாவது நிலையான ஒன்றை இயக்க வைக்காது; ஆனால் தானாக இயங்கிக் கொண்டிருக்கும் பொருள்களின் இயக்கத்தை இடைவிடாமல் தொடரச் செய்வதுதான் இதன் பணி. இவ்வாறே அதன்மமும் தானாக ஒரு பொருளின் இயக்கத்தை நிறுத்தாது; இயக்கமற்று நிலையாக நிறுத்தப் பட்டவற்றை அப்படியே வைத்திருக்கும். சமணர்கள் கூறும் தன்மம், அதன்மம் புண்ணிய பாவங்கள் அன்று; முற்றிலும் வேறானவை.

''தருமாத்தி காயம் தான்எங்கும் உளதாய்ப்
பொருள்களை நடத்தும் பொருந்த நித்தமாய்;
அப்படித் தாகி அதன்மாத்தி காயம்
எப்பொருள் களையும் நிறுத்துதல் இயற்றும்''
(மணிமேகலை 27: 187–190)

நன்மை, தீமை-நல்வினை, தீவினை; புண்ணியம், பாவம்–இவை கன்மம் எனப்படும். இக் கன்மமே பிறப்புக்கு முதற்காரணம். இது சூக்குமமான நுண்துகள்களால் ஆன பருப்பொருள். ஓர் உடம்பை விட்டு உயிர் பிரியும்போது கன்மமே அவ்வுயிருக்கு ஓர் உடலாக அமைந்து விடுகிறது; இவ் வுடல் கார்மணசரீரம் எனப்படும். இந்தக் கார்மண சரீரம் அச் சீவன் மறு பிறப்பை எடுக்கும்வரை இருக்கும். கன்மம் உயிரில் சென்று பொருந்தும் செயல் இடைவிடாமல் நிகழ்ந்து கொண்டே இருக்கும். கன்மங்கள் தாமாகவே உரிய உயிர்களைச் சென்றடைந்து தத்தம் பயன்களைத் தரவல்லன; கன்மம் பயன்களை ஊட்ட ஓர் இறைவன் வேண்டியதில்லை இருவினைப் பயன்கள் செய்தவனை-யே சென்றடைவதற்கு ஏதுவாகிய நியதியே ஊழ் எனப்படும்.

''ஊழிற் பெருவலி யாவுள; மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்'' (திருக்குறள் 380)

வெளி–ஆகாயம்; பொருள்கள் எல்லாம் இருப்ப தற்கு ஆகாயம் இடம் தருகிறது. இது வரம்பற்றது. பௌதிகப் பொருள்கள் நிறைந்த ஆகாயத்தின் கீழ்ப் பகுதி லோகாகாசம் (உலகவெளி) எனவும், அருகர் வசிக்கின்ற மேற்பகுதி அலோகாகாசம் (பரவெளி) எனவும் வழங்கப்பெறும். தளைகளிலிருந்து விடுபட்ட உயிர் சென்றடைந்து இன்பமாக இருப்பது இந்த அலோகாகாசமாகிய பரவெளியில்தான்.

புற்கலம் - புற்கலம் என்னும் சொல் சேர்ந்து ஒன்றாவதும் பிறகு பிரிந்து பல ஆவதும் எனப் பொருள் தரும். நம்முடைய ஐந்து புலன்களாலும் நுகரப்படும் பருப்பொருள்கள் அனைத்திற்கும் ஆதிமூலப்பொருளாக அமைவது புற்கலம் எனப்பெறும். பிரிந்துள்ள நிலையில் இப் புற்கல அணுக்களைப் பார்க்கவோ நுகரவோ இயலாது. ஆனால் கேவலிகளின்—மெய்ஞ்ஞானிகளின்—காட்சிக்குப் புலனாகும். இப் புற்கல அணுக்கள் பல சேர்ந்து முழுப் பருப்பொருளாகும்போது அது ஸ்கந்தம் (கூட்டுப்பொருள்) என்று கூறப்பெறும். இந்த ஸ்கந்தங்களே புலன்களால் நுகரப்பெறும்; இவ் வண்டம் முழுவதும் ஒரு மகாஸ்கந்தம் எனப்படும். இப் புற்கல அணுக்கள் ஒரு காலத்தில் ஒருவரால் உண்டாக்கப் பெற்றவை அல்ல; என்றுமே உள்பொருள். எப்போதும் இடைவிடாமல் இயங்கிக் கொண்டே இருக்கும். இவை பற்பல விகிதங்களில் ஒன்றோடொன்று பல்வேறு வகையாக ஒன்று சேர்தலால் வேறுவேறு பண்புகளைஉடைய பல பொருள்கள் தோன்றுகின்றன.

பற்று — பந்தம், இருவினைகளின் பயனாக உயிருக்கு ஏற்படும் தளை அல்லது கட்டு. இது சீவனின் இயல்பான சாந்தத்தையும் ஞானத்தையும் நீக்கிச் சிற்றறிவையும் துன்பத்தையும் தருகிறது. இந்தப் பந்தம் சம்சாரத்தால் நிகழும் உழவு, தொழில், வரைவு, வாணிகம், வித்தை, சிற்பம் ஆகிய அறுவகைத் தொழில் வடிவில் கட்டுப்படுத்தும்.

வீடு—வினை அற்றால் பிறவி நீங்கும். இவ்வாறு சீவன் அசீவனோடு சேர்ந்து பெற்றுள்ள பற்றுக்கள் அனைத்தையும் முற்றிலும் நீத்து, இருவினைகளையும் முழுவதும் களைந்து, பிணி, பிறப்பு, மூப்பு, இறப்பு, துன்பம், வறுமை ஆகியவற்றை ஒழித்துத் தன்னுடைய இயல்பான தூயநிலையை அடைதலே வீடுபேறாகும்.

''சீர்சால் நல்வினை தீவினை அவைசெயும்
வருவழி இரண்டையும் மாற்றி முன்செய்
அருவினைப் பயன்அனு பவித்தறுத் திடுதல்
அதுவீ டாகும்''

(மணிமேகலை 27:198–201)

முக்திநிலையைப் பெறச் சமுவரம், நிர்ச்சரம் என்னும் இரண்டினை அனுட்டிக்க வேண்டும். புதிய தாகக் கன்மம் தோன்றாதபடி நிறுத்துவது சமுவரம் ஆகும். ஏற்கெனவே சேர்ந்துள்ள வினைத்தொகுதியை அழிப்பது நிர்ச்சரம் எனப்படும்.

''வரும்பாவம் எதிர்காத்து மன்னும்தம் பழவினையும்
ஒருங்காக உதிர்த்தக்கால் உயிர்த்தூய்மைவீடென்றாள்''

(நீலகேசி 313)

இவ்வாறு காலம்முதல் வீடுவரையான பத்தும் விளக்கப் பெற்றன.

கன்மம் நாசம் உற–முன்பே சேர்ந்துள்ள வினைக்கூட்டத்தைச் சமைக்கப்பட்ட உணவை உண்டு தீர்த்துவிடுவதைப்போல அநுபவித்து அழித்தும் (நிர்ச்சரம்–இது உதிர்த்து விடுதல் எனப்பொருள் தரும்), புதியதாகக் கன்மம் ஏற்பட்டுவிடாதபடி பார்த்துக் கொண்டும் வினைகளை மீதமில்லாமல் அழித்து விட்டால்; அளி மிகு-கருணைமிக்க; தொழில் ஆறாவன-உழவு, தொழில், வரைவு, வாணிகம், வித்தை, சிற்பம் என்பன (இது சிவஞான சித்தியார் பரபக்கம் 150 ஆம் பாடலுக்கு ஞானப்பிரகாசரின் உரையிற் கூறப்பெற்றது) வினைமாய - வினைப்பயன்கள் துய்த்துக் கழிக்கப்பட்ட பின், முன் கன்மம் நாசம்உற என்றது "சீர்சால் நல்வினை தீவினை அவைசெயும் வருவழி இரண்டையும் மாற்ற'' லை (மணிமேகலை 27 : 198, 199). இங்கு வினைமாய என்றது ''முன்செய் அருவினைப் பயன்அனு பவித்தறுத் திடுதலை'' (மேற்படி 199-200); சைவ சித்தாந்தத்தில்

கூறப்பெறும் சஞ்சித, ஆகாமிய கருமங்களின் கழிவைச் சமுவரத்தோடும் பிராரப்த கன்மத்தைத் துய்த்துக் கழித்தலை நிர்ச்சரத்தோடும் இணைத்துப் பார்க்கலாம்.

''காணும் அங்கறுவ கைத்தொ ழில்களவை
கட்டு விட்டநெறி கன்மமேல்
மாண நின்றுவரு மாறி மாறிமுன்
வகைந்த துண்டுவிடல் மாட்சியே''
(சிவஞான சித்தியார்-பரபக்கம்-150)

இனி கந்த, ரச, ரூப, பரிச, சத்த, பரிணாமம் ஆகிய ஆறு உவர்ப்புகளையும் நீங்க என உரைப்பினும் ஆம். இது சித்தியார் உரையில் (பரபக்கம்161) தத்துவப் பிரகாசர் கூறியது.

மேலும் ''அறுவகைத் துவர்ப்பும் . . . வீழ்ந்த வன்றே'' என்னும் திருத்தக்க தேவரின் வாக்கிற்கு ''அறுவகைத் துவர்ப்பாவன: ஆசியம், இரதி, அரதி, சோகம், பயம், சுகுச்சை என இவை. அவற்றுள் ஆசியம் என்பது சிரித்தல்; இரதி என்பது வேண்டுதல்: அரதி என்பது வேண்டாமை; சோகமென்பது அசைவு; பயமென்பது அச்சம்; சுகுச்சை என்பது அருவருப்பு'' எனக் கூறியதையும் (சிந்தாமணி 3076 நச்சர் உரை) சிந்திக்கலாம்.

''அற்ற துவர்ப்பின ராகும் அருநிலை
உற்றவர்க் கிவ்வா றொழுக்கம் தலைநிற்றல்
நற்றவ மென்றிங்கு நாங்கள் மொழிந்தது
மற்றிது வானுல காள்விக்கும்''
(சூளாமணி 2013)

என்பதும் இது.

**557-561.** பண்நேர் உரையாள்முன் செப்ப- இன்னிசையைப் போன்ற மொழிகளை உடைய பேரிளம் பெண்ணின் எதிரே நிகண்டவாதி சொல்ல;

உயிர்க்குணங்கள் விட்டே – ஆன்மாவின் சுவபாவ குணங்களை மறைக்கும் காதி கர்மங்களைத் துறந்து, காதி கர்மங்களாவன – ஞானாவரணீயம், தரிசனா வரணீயம், மோகனீயம், அந்தராயம் என நான்காம்; இவை உபாதி எனவும் வழங்கப்பெறும்;

இவற்றுள் ஞானாவரணீயம் என்பது நல்லறிவை மறைக்கும் கன்மம் ஆகும். தரிசனாவரணீயம் என்பது நற்காட்சியை மறைக்கும் கன்மம் ஆம். மோகனீயம் என்பது உலகியற்பொருள்களின்மேல் அவாவை உண்டாக்கும் மயக்கம், அந்தராயம் என்பது வீரியம் முதலியவற்றைத் தடுக்கும் இயல்புடைய கர்மம்.

அருகன் இக் காதிகர்மங்களை நீக்கி உயர் குணங்களை அடைந்தான் என்பதனை, ''கேவலப் பிரத்யட்சமாவது ஞானாவரணீயம், தர்சனாவரணீயம் மோஹநீயம், அந்தராயமென்னும் காதிகர்மங்கள் ஒழிவறக் கெட்டவழிப் பிறப்பதாகிய ஜீவாதி சகல பதார்த்தங்களையும் காலத்திரய கோசரமாகியவற்றின் நிகழ்ச்சிகளையும் சாதனக்ரம வ்யாகாதத்தினீங்க ஏக க்ஷணத்தே சாக்ஷாத்கரிப்பதாய் விளக்கத்துக்குத் தலைவரம்பாய், விளக்கமுடைத்தாகிய பகவத் ஆர்கத் பரமேஸ்வரனது திவ்யஞான மாகும்'' (நீலகேசி – 118 சமய. உரை) என்பதால் அறியலாம்.

மருவு குணம்–அனந்த ஞானம், அனந்த தர்சனம், அனந்த வீரியம், அனந்த சுகம் என்பன. இவற்றோடு நிர்நாமம், நிர்கோத்ரம், நிராயுஷ்யம், சம்யதாபாவம் என்னும் நான்கையும் கூட்டி எட்டு எனினும் ஆம்; அருகன் இறை அல்லன் என்றது காதி கன்மங்களோடு தோன்றி அவற்றை நீத்து நற்பண்பு களைப் பெற்றவன் பரம்பொருள் ஆகான் என்றவாறு. இவ் வாதத்தை, ''அருகன் சில குணங்களை நீங்கிச் சில குணங்களை வந்து கூடுகையானும், அப்படி உண்டாவது அறத்தினால் எனின் அவ்வறனும் ஒருவன்

உண்டாக்கினானாக வேண்டுமாகையாலும் கர்த்தா அல்ல என்று மறுத்துக்கூறிற்று'' என்பதால் அறியலாம். (சித்தியார் - பரபக்கம் 152 தத்துவப். உரை). பரம் பொருள் நன்று உடையான் (தேடிப்பெறாமல் இயல் பாகவே நல்ல குணங்கலை உடையவன்), தீயது இல்லான் (தன்பால் இருந்து முயற்சியால் நீக்கிக் கொண்டான் என்னாமல் இயல்பாகவே தீயகுணங்கள் இல்லாதவன்), சென்று அடையாத திருஉடையான் (இடையிலே வந்து சேராமல் எப்போதுமே சாசுவதமான சிறப்பைப் பெற்றவன்) என்பது சைவ சித்தாந்தம்.

தன்மத்து இயலு(ம்) தன்மாத்தி உறும் உருவம் ஏயும்–சீவன் தான்செய்த நல்வினையின் பயனாக தன்மாத்தி காயத்தை எடுத்துக் கொள்ளும்; உயிர்கள் தம் வினைப்பயனைத் துய்ப்பதற்கு யாதனா சரீரம் என்னும் சூக்குமட உடலை எடுக்கும் என்பது வைதிக சமயக் கோட்பாடு. நிகண்டவாதி கூறுகின்ற தருமாத்தி காயம் தூலமான சரீரபேதமே ஆதலால் ஏற்க இயலாது என்கிறாள் சைவப் பேரிளம்பெண்ணாகிய சமயசய வல்லி. உதுவும்--அந்த நல்வினைப் பயனாகிய புண்ணிய சரீரமும்; அறம் தொலைவில் ஆகும்எனப் பார்த்திருத்தல்—சமுவர நிர்ச்சரங்களால் இருவினைப் பயன்களும் முற்றிலும் நீங்கினால் முத்திநிலையை அடையலாகும் என எதிர்பார்த்துக் காத்திருக்கும் செயல்; ஆழ்கடல்நீர் வற்றியபின் ஓகையில் மீன்தின்ன ஒருபூசை மேவி அங்குத் தூங்கும் நெறி ஆகும்-ஆழம்மிக்க சமுத்திரத்தில் உள்ள தண்ணீர் முழுவதும் வறண்டு போன பிறகு மகிழ்ச்சியுடன் அங்குள்ள மீன்களை அருந்தலாம் எனக் கருதி ஒரு பூனை (கடற்கரையை) அடைந்து அங்கு வாளா காத்திருப்பதைப் போன்ற வழியே ஆகும்; பார்த்திருத்தல் தூங்கும் நெறி ஆகும் என்பது முடிபு. இது

"பூர்வ கன்மம் அற்றிடப்பு-
சித்த பின்பு பொன்னெயில்
நேர்வ தென்னில் அக்கன் மத்து
நிச்ச யம்மி லாமையில்
தீர்வ தின்மை தீரின் வாயில்
சேர்வ தின்மை தெண்கடல்
நீர்வ றந்த பின்பு பூனை
மீன ருந்த நின்றதே"

என்னும் சித்தியார்ப் பாடலையும், அதற்குத் தத்துவப் பிரகாசர். "முன் ஜனனங்களில் உள்ள கருமம் தொலைய இந்த ஜனனத்திலே புசித்தால் பொன் னெயில் வட்டத்தைச் சென்று பொருந்துமென்று நீ சொல்லின் அக்கன்மத்துக்கு அளவின்மையால் நியமிக்க அறிவதில்லையாய்ப் புசித்துத் தொலையாதுமாம்; கன்மம் புசித்துத் தொலைவுபெற்றால் இந்தியங்களுடன் சத்தாதி கூடுவதின்மையாம்; அவை கூடாதொழியவே மோட்சஉபாயமான தவம்செய்தலும் இல்லையாம்; ஆதலால் 'கன்மத்தைத் தொலையப் புசித்துப் பொன் னெயில் வட்டத்தை அடைவோம்' என்று நீ கருதி யிருத்தல் பூனை தெளிந்த சமுத்திரத்து நீர் வற்றின வாறே மீன் தின்னக்கடவோம் என்று கருதி அது வற்று மளவும் பார்த்திருந்த தன்மைக்கு ஒக்கும்" என எழுதிய உரையையும் பின்பற்றியது. (சிவஞான சித்தியார்—பரபக்கம் 163 தத்துவப். உரை)

உன்சொல் துன்று வினை-உன்னால் சொல்லப் பட்ட இருவினைப் பயன்; சடமாம் – அசேதனப் பொருள் ஆகும்; ஆங்கு-வினைப்பயனை உரிய சீவன் நுகரவேண்டிய தக்க பருவத்தில், ஆங்கு-காலப் பொருளில் வந்தது,

"பொள்ளென ஆங்கே புறம்வேரார்; காலம்பார்த்
துள்வேர்ப்பர் ஒள்ளி யவர்"

(திருக்குறள் 487)

என்புழிப்போல; அது தானே கொண்டு அணையாதாம்-அவ் வினைப்பயன் ஊட்டுவார் ஒருவர் இல்லாமல் தானாகவே உரிய சீவனைத் தேடிச் சென்று அதன்பால் பொருந்தாது;

''பல்ஆவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலைத்-தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு''

(நாலடி. 101)

என்றபடி வினைப்பயன் தானே உரியவரைச் சென்று அடையும் என்பதும், அதனை ஊட்டுவிக்க ஓர் இறைவன் தேவை இல்லை என்பதும் சமணர் கொள்கை. ஆனால் சைவம்,

''செய்வினையும் செய்வானும் அதன்பயனும்
சேர்ப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள்
எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லைஎன
உய்வகையால் பொருள்சிவன்என்று அருளாலே''

(பெரியபுராணம்—சாக்கிய. 5)

உணர்வதாம்.

ஈங்கு அவற்றை விட்டு-நீ என்னிடம் கூறிய அக் கொள்கைகளை விட்டுவிட்டு, ''யாவை ஈங்களிப்பன'' (மணிமேகலை 14:48) ''ஒழிககாமம் ஈங்கென'' (சீவகசிந்தாமணி 72) என்பனவற்றிற் போல 'ஈங்கு' தன்மையை உணர்த்திற்று; தட்டி-மறுத்துக்கூறி; அவனும் விட்டு ஏக என மாறுக, அவ்விடத்தை நீத்துச் செல்ல என்றபடி.

562-565. ஆசீவகன்—திகம்பரவாத சமணரில் ஒரு பிரிவினர், சமய திவாகரர் தம் நீலகேசி உரையில்,

''திகம்பரத்வம் ஒப்பினும் அநேகாந்த வாதிகளாகிய நிர்க்கிரந்த ரல்லர் ஆஜீவகர்'' என்பார் (நீலகேசி-669 சமய. உரை); இவ் வாக்கியத்தை ஏறக்குறைய இப் படியே ஞானப்பிரகாசர் தம் சித்தியார் உரையில் எடுத்தாளுகிறார் (பரபக்கம்-165, ஞானப். உரை) இவர்களுக்குத் தெய்வம் மற்கலி என்பதும், நூல் நவகதிர் என்பதும்.

'' என்றலும் மற்கலி தானே இறை; இனி
ஒன்பது வாங்கதிர் நூல்யாம் உடையன;
மன்பெறு நுண்பொருள் ஐந்தியல் பாயவை
யின்ப நிகழ்ச்சியுங் காழ்ப்பா டெனச்சொல''

(நீலகேசி 671)

என்பதால் அறியலாம்.

அணு ஐந்து ஆகும் அதில் பூதம் நாலாம் உயிர் ஒன்றாகும்- ஆசீவக சமயத்தார் கூறும் பொருள்கள் ஐந்து ஆகும், அவை நிலம், நீர், நெருப்பு, காற்று என்னும் நான்கு பூத அணுக்களும் உயிர் அணு ஒன்றும் ஆம்; அந்தப் பூதம் அறியாது-நான்கு பூதங்களும் அசேதனப் பொருளாகும்; பொருந்தும் உயிர் அறியும்-நல்வினை தீவினைகளோடு சேரும் இயல்புடைய உயிர் அறிவுப் பொருள் ஆகும்,

'' வரம்பில் அறிவன் இறைநூற் பொருள்கள் ஐந்து;
உரம்தரும் உயிரோ டொருநால் வகைஅணு;
அவ்வணு வுற்றும் கண்டும் உணர்ந்திடப்
பெய்வகை கூடிப் பிரிவதுஞ் செய்யும்
நிலம்நீர் தீக்காற் றெனநால் வகையின
மலைமரம் உடம்பெனத் திரள்வதுஞ் செய்யும்;
வெவ்வே றாகி விரிவதுஞ் செய்யும்
அவ்வகை அறிவது உயிரெனப் படுமே ''

(மணிமேகலை 27 : 112-119)

கோது இலா-குற்றமற்றதாகிய; நால் கரணம் கூடியே-உலகத்திற்குக் கருவியாக உள்ள நான்கு பூத அணுக்களும் ஒன்று சேர்ந்தே, நான்கு அணுக்களின் கூட்டமே பௌதிகப்ரபஞ்சம் ஆதலின் அவற்றைக் கருவிகள் என்றார்; காதலினால் – விருப்பத்தோடு; ஒட்டுத் தீட்டுக்கலப்பின் உற்று அறியும் - தன்னோடு ஒட்டுகின்ற சேர்க்கையால் அநுபவத்தைப் பெற்று மெய்யறிவு பெறும்;புண்ணியத்தோடு ஒட்டி-நல்வினைப் பயன்களோடு பொருந்தியும், எண்ணும்மை தொக்கது; பாவங்களுடன் கூடி-தீவினைப் பயன்களோடு சேர்ந்தும்; இங்கும் எண்ணும்மை விரிக்க; ஒட்டி அறிந்து - மெய்ந் நெறியை அடைந்து ஞானம் பெற்று; அடைவில்-படிப் படியாக; முத்தி அடையும்; இது-சீவன், எழுவாய்; இது நாற்கரணம் கூடியே, உற்றறியும்; ஒட்டிக் கூடி அறிந்து அடைவில் முத்தி அடையும் என்பது பொருள் முடிபு.

"ஒன்றினை ஒருவி மூன்றங்
குற்றிடா விரண்டு விட்டு
நின்றிடா திரண்டு கூடும்
நெறிநிலம் நான்கு நீர்மூன்
றின்றிரண் டழல்கால் ஒன்றா
இசைத்திடுப் பூமி இவ்வா
றென்றுநீர் தீகால் ஆகி
ஈண்டுவ தென்றி யம்பும்"
(சிவஞான சித்தியார்–பரபக்கம் 171)

என்பதால் இப் பூத அணுக்களின் கூட்ட முறைமை பெறப்படுகிறது.

"உண்மையவ் வொட்டுத் தீட்டுக்
கலப்பினில் உணரும்" (பரபக்கம். 172)

என்ற சித்தியார்ப் பாடற்பகுதிக்கு ஞானப்பிரகாசர்,

"ஒட்டுத்தீட் டுக்கலப்பின் ஒரும்உயிர் தான்;இவற்றை
பட்ட பொழுதுடலின் பால்"

என்னும் குறட்பா ஒன்றை மேற்கோள் காட்டுகிறார்; இதே பகுதிக்கு உறுதியாகப் பெயர் அறியப்படாத ஓர் உரையாசிரியர் (வேலப்பப் பண்டாரம்?), ''ஒட்டு-நூலைக் கேட்டலானும், திட்டு-விடயங்களைத் தீண்டலானும், கலப்பினில்-இந்திரியங்களைக் கலத்தலானும், உணரும் - (உயிரானது) அறியும்'' எனப் பொருள் கூறுகின்றார்.

'' பெறுதலும் இழத்தலும் இடையூ றுறுதலும்
உறுமிடத் தெய்தலும் துக்கசுக முறுதலும்
பெரிதவை நீங்கலும் பிறத்தலுஞ் சாதலும்
கருவிற் பட்ட பொழுதே கலக்கும்;
இன்பமும் துன்பமும் இவையும்அணு எனத்தகும்;
முன்உற ஊழே பின்னும்உறு விப்பது''

(மணிமேகலை 27 : 159 – 164)

''பேறிழ விடையூ றின்பம்
பிரிவிலா திருக்கை மற்றும்
வேறொரு நாட்டிற் சேறல்
விளைந்திடு மூப்புச் சாதல்
கூறிய எட்டும் முன்னே
கருவினுட் கொண்ட தாகும்
தேறிய ஊழிற் பட்டுச்
செல்வதிவ் வுலகம் என்றான்.

புண்ணிய பாவம் என்னும்
இரண்டணுப் பொருந்த வைத்தே
எண்ணிய இவற்றி னோடும்
ஏழென எங்க ளோடு
நண்ணிய ஒருவன் கூறும்
ஞானம்இவ் வாற தென்று
கண்ணிய கருத்தி னோர்கள்
கதியினைக் காண்பர்''.

(சிவஞான சித்தியார்-பரபக்கம் 173, 174)

என்பன இங்கே நோக்கற்பாலன.

என்ன-(''அணு ஐந்தாகும்'' முதல் ''முத்தி அடையும் இது'') என்று; செறிந்த மை போல்வான் செப்ப-திரண்ட மைக்குழம்பைப் போன்ற கரிய நிறத்தினனாகிய ஆசீவகன் சொல்ல.

566-570. முத்தி அறிந்தவரும், ஞானம் ஈது எனவே வாய்ந்தவனும் சொல்ல இருவகை-ஆசீவக நூல் உரைத்த மற்கலி தாம் பேசாமல் சர்வத்தையும் அறிவாரென்றும், மௌனங் கொண்டிருப்பாரென்றும் கூறப்படும். இந்த நிலையில் இவர் செம்போதகர் எனப்படுவார். உலகத்தின்கண்ணே வந்து அணுக்கள் ஐந்தின் செய்தியும் ஒருங்கே அறிந்து உலகத்தின்கண் நடக்கும் நூல் செய்த பகுதியை உடையவர் மண்டலர் எனப்படுவார். இவ்வாறு முக்திநிலையை அறிந்தவரும் அதனை உரைத்தவரும் இருபான்மையராவர்; எம் போல்வான் இறையோ-எம்மைப் போலவே உலகில்வாழ் உயிராகி வருபவன் பரம்பொருள் ஆக முடியுமோ? ஆகாது என்றவாறு;

''மண்டலர்தாம் அக்கையுற்று வாக்கினால் நூல்உரைக்கின்
மண்டலத்தார்க்கு ஒப்பாம் மதி''

என்பது ஞானப்பிரகாசர் ஆசீவகவாத மறுப்பில் காட்டும் குறட்பா (சிவஞான சித்தியார் – பரபக்கம்: 176 ஞானப். உரை).

இவ் வுலாவில் ஆசீவகன் தன் சமயத்தைப் பற்றிக் கூறும்போது நூல் தோன்றிய விதத்தைப்பற்றி ஒன்றுமே கூறவில்லை; அவன் கூறியதெல்லாம் நூல் நுதலிய பொருள்களைப் பற்றியே. ஆனால் மற்கலி நூலுக்குடையோன் என்பதும், அதனை உரைத்தவர் ஒக்கலி, ஒகலி என்னும் இரு தெய்வங்கள் என்பதும்.

'' அறிந்தான் இறைவன் அவனா குதலால்
செறிந்தான் பெரிதும் ;'' (672)

''இறைவன் முழுதும் உணர்ந்தானாகுதலால் மிகவும் செறிவுடையனாகி ஸ்தப்தனா யிருத்தலிற் பேசான் ''
(672–சமய. உரை)

"ஒக்கலி ஓகலி யென்றிரு தெய்வம் உரைத்தனவேல்
மற்கலி யார்போல் அறிந்தன வாயிற் செறிந்தனவாம்"
(681)

"ஒக்கலி ஓகலி என்னும் இரண்டு தைவதங்களும் ஆகமோபதேசம் செய்யுமெனில் அந்த தைவதங்கள் மற்கலியார்போல் அறிந்தனவாயின் ஸ்தப்தங்களாய் உரையாவாம்'' (681-சமய உரை) என்னும் நீலகேசியால் அறியலாம். சித்தியார் பரபக்கத்திலும் ஆசீவகன் தன் கொள்கைகளைக் கூறும் ஒன்பது செய்யுள்களிலும் (166 - 174) இக் கருத்து இடம் பெறவேயில்லை. ஆனால் ஆசீவகன் மதத்தை மறுக்கும்போது மட்டும்,

"இருபான்மையர் இவர்மண்டலர் செம்போதகர் என்றே
வருபான்மையர் இவர்மண்டலர் மண்மேல்வரு நூலும்
தருபான்மையர் எனின்நீதல மதில்வாழ்பவர் தம்போல்
ஒருபான்மையின் உளராகுவர் உணராதுரை செய்தாய்"
(சிவஞான சித்தியார் - பரபக்கம் 176)

என்கிறது. இதன் உரையில் ஞானப்பிரகாசர், "வானத்து இந்திர தனுப்போல் இவன் அன்னவாறு வந்தான் என்று அறியாமல் சொன்னாய்'' எனக் கூறுகிறார். இவ் வுவமை நீலகேசியில்,

"உரையான் இறைவன் உணலும் இலனாய்த்
திரையான் நரையான் தெரிவில் லுருவம்
வரையா வகைவா னிடுவில் அனையன்
புரையா அறிவில் புகழ்பூ ரணனே". (673)

என ஆசீவகனால் கூறப்பெற்று நீலகேசியால்,

"வானிடு வில்லின் வரவறி யாத வகையன்என்பாய்
தானுடம் போடு பொறியினன் ஆதலில் சாதகனாம்;
மீனடைந் தோடும் விடுசுட ரான்கதிர் வீழ்புயன்மேல்
தானடைந் தால்தனு வாம்இது வாம்அதன் தத்துவமே

வானத்து இந்திர தனுஸ்ஸுப்போல இன்னவாறு வந்தனனென்று அறியாமல் தோன்றுவன் எம்முடைய ஆப்தன் என்று சொல்லுவாய்; அவன் சரீரேந்திரிய புத்தியாதிகளுடைய னாதலில் பிறப்புடையனாம்; சரீராதிகளை உடையான் பிறப்புடையனாகக் காணப் படுதலான். இனி ஆதித்ய கிரணம் மேகபடலத்துப் பட்டால் வில்லுப் பிறக்கும்; அதுபோல மற்கலி தேவனும் காரண ஜன்யனாக இசைதியோ என்றவாறு" (நீலகேசி 684 சமய. உரை) என மறுக்கப்பெறுகிறது. இவ் வுலா ஆசிரியர் சித்தியார் பரபக்கத்தையும் அதன் உரைகளை யுமே பெரும்பாலும் தழுவித் தன் நூலை யாத்துள்ளார் என்பது இதனால் தெரியவருகிறது.

மருவும் உயிர் அணுவாய் ஒட்டிதீண்டி கலப்பின் இயல் என்றது இல்—பொருந்துகின்ற ஆன்மாக்கள் நான்கு பூத அணுக்களாலான உடலைப் பற்றியும் உற்றும் கலந்தும் நின்றால் அறிவடையும் எனக்கூறிய சொல் உண்மையன்று, அணு - அணுக்களாலாகிய உடலுக்கு ஆகுபெயர், வாய்-ஏழன் உருபு, இரண்டன் பொருளில் வந்தது. ''எல்லா உருபொடும் செயப்படு பொருள் எழும்'' (இலக்கணக்கொத்து 45), இயல்-அறிவு, நூல் என்னும் நேரான பொருளைஉடைய் இச் சொல் நூலால் உணரப்பெறும் அறிவைச் சுட்டி நின்றது. ஒட்டல் தீண்டல் கலத்தல் என்பதற்குச் சித்தியார் உரையாசிரியர் ஒருவர் (வேலப்பப் பண்டாரம்?) நூலைக் கேட்டல், விஷயங்களைத் தீண்டுதல், இந்திரியங்களைக் கலத்தல் என உரை விரித்துள்ளார்; துயில் வந்து எய்த டயில் கரணம் இன்று ஆல்-தூக்கம் வரும்போது பொருந்துகின்ற அறிவு இல்லையாகும், ஆல்—அசை; கரணம் இழப்ப-(தூக்கத்தால் இப்படி) அறிவு தொழிற் படாருப்பதால்; உயிர்க்குத் தலைமைகுன் றியதோ— (தூங்குகின்ற உடலில் உள்ள) உயிரின் சிறப்பு இல்லாமற் போய் விட்டதோ, தூங்குபவனை உயிரற்ற பிணம்

எனக் கருதமுடியுமோ என்றவாறு; பூதம் குலைந்தனவோ -(அவன் தூங்கும்போது) நான்குவகையான பூத அணுக்களும் தம் கலப்பை இழந்து பிரிந்து விட்டனவோ, உடல் தன் தன்மையை இழந்து விட்டதோ என்றவாறு; வினாக்கள் எதிர்மறை; 569 ஆம் கண்ணியில் கூறப்படும் கருத்து தெளிவாக விளங்கவில்லை.

''உயிரானவை உடல்தீண்டிடல் ஒட்டுக்கலப் பெய்தும்
பயில்வால்உணர் வெய்தும்மெனும் மொழியானவை
பழுதாம்
துயிலார்தரு மவர்பாலகர் தொடரார்அறி வினை;நீ
செயிரார்தரும் உரையேதரும் அதுவோஊன செயலே''
(சிவஞான சித்தியார்-பரபக்கம்-177)

என்றது இது.

ஏதம் அற-உயிருக்குரிய இயல்பான குற்றங்கள் நீங்கும்படி; என்று அவன் சொல் வாதமொழி மறுத்தான் என்பது முடிபு

571 ஊமன் என-வாதங்களுக்கு விடையிறுக்க இயலாமல் பேச்சற்றவனைப்போல; மோனமுடன்-ஒரு வார்த்தையும் கூறாமல்; தொழில் மிகு-வேள்விகளாகிய வைதிக கர்மங்களை அதிகமாகச் செய்கின்ற; பட்டாசாரி-பாட்டமதத்தினன்.

பாட்டமதம் - வேதங்கள் பிராமணம் உபநிடதம் என்னும் இரு பிரிவுகளை உடையன; இவற்றுள் முற்பிரிவாகிய பிராமணங்களைத் தன் ஆதாரமாகக் கொண்டது மீமாம்சா தர்சனம்; இது பூர்வ மீமாம்சை என வழங்கப்பெறும்; இச் சமயக் கோட்பாடுகளை விளக்கும் நூல்களில் தலையாயது சைமினி முனிவரால் இயற்றப்பெற்ற மீமாம்ச சூத்திரம் ஆகும். இந் நூலின் காலம் கி. மு. 300–400 ஆம் ஆண்டுகள் ஆகும். இந் நூலுக்குச் சபர முனிவர் என்பார் ஒரு விரிவுரை செய்தார். இவர் கி. மு. முதல் நூற்றாண்டினர். சபர

முனிவரின் பாடியத்தையொட்டிக் குமரிலபட்டர், பிரபாகரர் என இருவர் வழிநூல் செய்தனர். இவ் விருவரும் ஆசிரியரும் சீடரும் ஆவர்.

ஆசிரியராகிய குமரிலபட்டர் சபரமுனிவரின் விரிவுரையை மறுத்து வழிநூல் செய்தார். பிரபாகரர் அந்த பாடியத்தை ஆதரித்து வழிநூல் யாத்தார். இதனால் மீமாம்சம் இரு பிரிவுகளாகப் பிளவடைந்து விட்டது. குமரிலபட்டரின் கொள்கைகளை ஏற்போர் பட்ட மீமாம்சகர் எனவும், பிரபாகரரின் கருத்தைப் பின்பற்றுவோர் பிரபாகர மீமாம்சகர் எனவும் வழங்கப் பெறுவர்.

பூர்வ மீமாம்சையின் வரலாற்றைத் துறை-மங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்,

"வேதம்ஒரு நான்கும்ஆ றங்கமும்நல் நியாயம்
மீமாம்சை யொடுமிருதி புராணமுமீ ரேழா
ஓதலுறும் வித்தைகளாம்; இவற்றுள்மீ மாம்சை
உயர்ந்ததாய் ஐந்நான்கத்தி யாயமாய் அருத்த
பேதமுற இருகூறாம்; அவற்றுள்முதற் கூறே
பிறங்குமருட் சைமினிசூத் திரரூப மாகிப்
போதுமீ ராறத்தி யாயமாய்க் கருமப்
பொருளுணர்த்திப் பூருவமீ மாஞ்சையெனப்
படுமால்,

சாற்றியஅச் சைமினிசூத் திரத்திற்கு மிக்க
சாபரமென் றொருபாடி யம்புரியப் பட்ட
தூற்றமீ மாஞ்சைக்கு மதம்பாட்ட மென்ன
ஒன்றுபட்டா சாரியனா லுரைத்திடவந் தென்றும்
போற்றுமவன் சீடனா கியபிரபா கரனால்
புகழ்பிரபா கரம்எனஓர் மதாந்தரம்நன் கமைய
ஆற்றியஅச் சாபரபா டியமதற்த விளங்க
ஆக்கப்பட் டுலகமெலா மறிந்திடநின் றதுவே"
(வேதாந்த சூளாமணி 3, 4)

எனத் தெளிவாகக் காட்டுகிறார்.

இப்பட்ட மீமாம்சகரே சுருக்கமாகப் பாட்டாசாரியர் (பாட்ட சமயகுரு) எனக் கூறப்பெறுவர். இவர்களுடைய கொள்கையின்படி ஆன்மா மாற்றமடையும் இயல்புடையது; முத்தியில் உயிருக்கு இன்பம் உண்டு; பிரத்யட்சம், அநுமானம், ஆகமம், உபமானம், அருத்தாபத்தி, அனுபலப்தி என்னும் பிரமாணங்கள் ஆறினையும் ஏற்பர்; கானல்நீர் போன்ற திரிவுக் காட்சிகளை விபரீதக் கியாதி என்ற பெயரால் பட்ட மீமாம்சகர் விளக்குவர், மணலைத் தண்ணீராகப் பார்க்கும்போது மணல், நீர் ஆகிய இரண்டையும் உள்ளம் தொடர்புபடுத்திப் பார்க்கும் தவற்றால் இத் திரிவுக் காட்சி ஏற்படுகிறது என்பர், அதாவது உண்மையில் இல்லாத நீரை இருப்பதாக மனம் சேர்த்துக் கொண்டதால் விபரீதக்கியாதி தோன்றுகிறது என்பர்; பட்ட மீமாம்சகர் பிரபாகர மதத்தினரை விட அதிகமாக வேதாந்தக் கொள்கைகளின் பக்கம் சாய்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர்.

***572—575.*** அழியாது அருவாய் அநாதியுமாம் சுயம்பு வேதம்; அநாதி – தோற்றமில்லாதது; சுயம்பு-பிறரால் உண்டாக்கப்படாமல் தானே தோன்றியது.

''சார்பில் தோன்றா ஆரண வேதக்கு
ஆதி அந்தம் இல்லை அதுநெறி
(மணிமேகலை 27; 103, 104),

''முன்னம்ஓர் தோற்றம் இன்றி
முடிவின்றி நித்த மாகி
மன்னிஓர் இயல்பே யாகி
வழங்கிடும் மறைய தென்றான்''
(சிவஞான சித்தியார்–பரபக்கம் 185)

என வருவதூம் இது.

உயிர் பரமாய் அறிவாய் பரந்தே விரவி நிறைந்து எங்குமாய் நிற்கும்; பரம்–அழிவற்ற பொருள்.

"நித்தமாய் எங்கும் உண்டாய்
நீடுயிர் அறிவு தானாய்ப்
புத்திதான் ஆதி யாய
கருவியின் புறத்த தாகிச்
சுத்தமாய் அருவ மாகித்
தொல்லைவல் வினையின் தன்மைக்
கொத்ததோர் உருவம் பற்றிப்
புலன்வழி உணர்ந்து நிற்கும்"
(சிவஞான சித்தியார்-பரபக்கம் 189)

நிற்கும் — முற்றுவாய்பாட்டால் வந்த பெயரெச்சம், நிற்கும் உயிர் உடலைப் பற்றும் என முடியும்.

உயிர் எய்தும் வினை கெட்டு அருவாய்த் தங்கும் உடலைப் பற்றும்—முற்பிறப்பில் உள்ளம், உரை, உடல்களால் ஈட்டப்பெற்ற நல்வினை தீவினைகள் அந்தப் பருவுடலோடு பருமைகெட்டுச் சூக்குமமாக உயிரோடு சேர்ந்திருந்து மறுபிறப்பில் வாய்த்த உடலின்கண் வந்தடையும்:

"செயல்தரு வினைகள் மாய்ந்து
சிந்தையிற் சேர்ந்து நின்று
பயனொடு பலியா நிற்கும்
பலாலமும் தழையும் எல்லாம்
வயல்தனில் மருவி நாசம்
வந்தபின் பலத்தை வந்திங்கு
இயல்பொடு தந்தாற் போல
என்றும்பின் இயம்பு கின்றான்".
(சிவஞான சித்தியார்-பரபக்கம் 190)

தண் அளியால்-குளிர்ச்சியான அன்புடன்; இங்கு இயற்றும்-இந்நிலவுலகில் இப் பிறவியில் செய்யப்படும், இங்கு—இரட்டுறமொழிதலாக இடம் காலம் இரண்டையும் உணர்த்தியது; சோம யாகாதித் தொழிலும்-சோம யாகம் முதலிய வைதிகக் கருமங்களும்; மன் ஞானமுமே—நிலையான அறிவுமாகிய இரண்டுமே; இரு காலாகச் சார்ந்ததுவே சேம முத்தி ஆக்கும்—இரண்டு கால்களைப் போல இணைந்த நிலையே நிலைத்த நன்மையாகிய வீட்டின்பத்தைத் தரும்,

''கருதிய கன்மம் ஞானம்
இரண்டும்கா லாகக் கொண்டு
மருவிட லாகும் வீடு''
(சிவஞான சித்தியார்-பரபக்கம் 192)

இவ்வாறு அறிவு, சடங்குகள் ஆகிய இரண்டையும் இணைத்துக் கூறுதல் ஞானகன்ம சமுச்சயம் எனப்பெறும்.

உலகம் நித்தமாம்-இந்த உலகம் என்றுமே அழியாத உள்பொருளாகும்; வினை கெட்டு-நல்வினை, தீவினை ஆகிய இரு கருமபந்தங்களும் ஒழிந்து, மீமாம்—சகர் கன்மத்தைக் காமிய கன்மம், பிரதிசித்த கன்மம், நித்தியகன்மம் என மூவகைப் படுத்துவர். காமியகன்மத் திற்குப் புண்ணியமும், பிரதிசித்த கன்மத்திற்குப் பாவமும் பலன்களாகும்; புண்ணிய பாவங்கள் இரண்டுமே உயிருக்குத் தளையாம். எனவே இரண்டில் இருந்தும் விடுபட வேண்டும்; நித்திய கன்மம் என்பது எந்தவிதப் பயனையும் எதிர்நோக்காமல் கடமைக் காகவே அவசியம் செய்யப்படவேண்டிய கன்மம் ஆகும்; இது உயிரைக் கட்டாது.

ஆர் உயிரின் ஊக்கம் அற பொருந்தும்-தனு, கரண,புவனங்களுடன் பொருந்துகின்ற உயிர் அவற்றின் கண் உள்ள பேரீடுபாட்டை விட்டு நீங்க முத்தி அடையும்; வினை கெட்டு, ஊக்கம் அற உயிர் (வீட்டில்) பொருந்தும் என்பது முடிபு. உரையை என இரண்டன் உருபு விரிக்க, அது சொல்லல் என்னும் வினைக்குச் செயப்படுபொருள்.

576 – 579. கோதைமுனம் – சமயசயவல்லி யிடம்; தாலு–நாக்கு; தாலு கூடாது ஓதிய வேதம் ஆதி உளதாகாது என்க; நாக்கின் தொடர்பின்றி மறைகள் கூறப்பெற்றிருப்பின் முதலாவதாக அவை உள்ள பொருள்களாக மாட்டா, அதாவது நாக்கில்லாமல் வேதங்களைக் கூறமுடியாது, வேதங்கள் தாமே

அபௌருஷேயமாகத் தோன்றின அல்ல, இறைவனால் கூறப்பெற்றனவே என்பது கருத்து; ''இந்த வேதமும் தந்த தாலோஷ்ட புடவியாபாரத்தால் (பல், நா, உதடுகளின் திரண்ட தொழிலால்) சொல்லுகின்ற பதவாக்கியங்களாய் (சொற்களாலான வாக்கியங்கள்) வருதலானும்'' எனவும், ''சுயம்புவாகிய பரமசிவனாற் சொல்லப்பெற்ற வேதத்தைச் சுயம்பு என்றது ஆகுபெயர்; இப்பொருள் அறியாது வேதத்தைச் சுயம்பு என மயங்கிக் கூறினான் என்க'' என்பார் சிவஞான சித்தியின் உரையாசிரியர் ஒருவர். (பரபக்கம்-194 உரை. வேலப்பப் பண்டாரம் ?)

அணுகும் உடல் வேறாய் அறியாமையாலே- (உயிர்கள் தாம் இருந்த உடல் அழிந்தபோது) தாம் சென்று பொருந்துவதற்குரிய வேறொரு சரீரத்தைத் தேடிக் கொள்ள அறியாவாகையால்; எணும் உயிரும் எங்கும் நிற்பது இன்றாம்-ஆராயப்படுகின்ற ஆன்மாவும் உலகம் எங்கும் நிறைந்து விளங்குவதில்லை.

நணுகும் அருவினை கெட்டு ஆவது இலையாம்- ஓர் உயிரைப் பொருந்துகின்ற வினைப்பயன்கள் அவ் வுடல் அழியத் தாமும் அழிந்து விடுமாகையால் மறுபிறவியில் வந்து தோன்றுவது இல்லையாகும்; ''வினைகெட்டு அருவாய்த் தங்கும் உடலைப் பற்றும்'' (573) எனப் பாட்டாசாரியன் கூறியதற்கு மறுப்பு இது, வினைப்பயன்கள் தாமே வந்து பொருந்தா, ஊட்டுவிக்கும் இறைவன் வேண்டும் என்பது கருத்து;

''வேலைதரு மோகூலி? வேலைவிதம் கண்டிசைந்த
கூலிதரு வான்போல்எம் கோன்''

(சிவஞானசித்தியார்-பரபக்கம் 202 ஞானப்பிரகாசர் உரை)

சோமயாகம் தரும் வினையும் ஞானமும் நீ சாற்றும் அருமுத்தி ஆகாது-சோமயாகம் முதலிய

வேள்விகளால் வரும் நல்வினைப் பயனும், அதனால் வருகின்ற மெய்யறிவும் கூடுவதாகிய ஞானகன்ம சமுச்-சயத்தால் மீமாம்சாவாதியாகிய நீ கூறுகின்ற உயர்ந்த வீட்டின்பம் பெறப்படாது; சோமயாகம் அனைத்துக் கன்மங்களுக்கும் உபலட்சணம்; வினை என்றது காமிய, பிரதிசித்த கன்மங்களல்லாத நித்யகன்மத்தை; அரனை அருச்சி-(எனவே இந்த நிரீசுவர வாதத்தைக் கைவிட்டு) சிவபெருமானை வழிபடுவாயாக; பாகுஆர் மொழிக்கு-இனிய சொற்களைக் கூறும் இப் பேரிளம்பெண்ணிற்கு, புலன்களுக்குக் கிளர்ச்சியூட்டும் மொழிகளாக அல்லாமல் உயிருக்கும் இனிய நன்மைதரும் மொழிகளை உடையவள் என்பது இவ் வாகுபெயரின் பயன்; அகன்றான்- அவ்விடத்தை விட்டு நீங்கினான்.

580–581. பிரபாகரன்-இந்தச் சமயத்தின் தோற்றத்தைப் பற்றி 571 ஆம் கண்ணி உரையில் கூறப் பட்டுள்ளது. இவர்தம் சிறப்புக் கொள்கைகளாவன:-

ஆன்மாக்கள் எவ்விதமான மாற்றத்தையும் அடைவதில்லை; நல்ல உறக்கத்தில் ஆழ்ந்திருப்பது போன்று அறிவற்றுக் கிடக்கும் நிலையே உயிரின் இயல்பாகும். முக்திநிலையில் உயிர் இன்பதுன்ப நுகர்ச்சி யின்றிக் கல்லைப்போலத் தன் சுபாவநிலையில் கிடக்கும்; பிரத்யட்சம், அநுமானம், ஆகமம், உபமானம், அருத்தாபத்தி என்னும் ஐந்து பிரமாணங்களே கொள்ளற்குரியன, அனுபலப்தி எனப்பெறும் ஆறாவது பிரமாணம் தேவையற்றது; கானல்நீர் போன்ற திரிவுக் காட்சிகளை அக்கியாதி என்னும் பெயரால் பிரபாகர மீமாம்சகர் விளக்குவர், மணல் வெளியைத் தண்ணீராகக் காணும்பொழுது மணல், நீர் ஆகிய இரண்டுமே உள் பொருள்கள் தாம் மணல்வெளியைப் பார்க்கும்பொழுது சில அம்சங்களில்அதனை நிகர்த்த நீர்ப்பரப்பின் நினைவு ஏற்படுகிறது. உடனே மணல்வெளியே நீர்ப் பரப்பாகத் தோன்றுகிறது. எதிரே பார்வையில் தென்படும் மணற்பரப்பிற்கும் நம் நினைவில்உள்ளநீர்ப்பரப்பிற்கும்

எந்தவகையான தொடர்பும் இல்லை என்பதை உணரத் தவறியதாலேயே திரிவுக் காட்சிகள் தோன்றுகின்றன; பிரபாகரர் பட்ட மீமாம்சகரைவிட மெய்மை வாதத்தில் அதிகமாக ஊன்றியுள்ளனர்.

பேணு செயல் அபாவத்து ஓர் அபூருவம் தொழிலில்உற்றே அரு பலம் ஆம்-விரும்பிச் செய்யும் கன்மங்கள் இல்லாமல் நீங்கியபோது அபூர்வம் என்பது ஒன்று உண்டாகி அரிய ஞானம் கூடும், செயல் அபாவம் என்றது கன்மங்களின் இன்மையை, அபூர்வம் என்னும் சொல் முன் இல்லாதது எனப் பொருள் தரும். பிரபாகர மீமாம்சகர் இதனை ஒரு குரு சொரூபமாகக் கொள்வர், ஓர் அபூருவம் எனற்பாலது எதுகை நோக்கிக் குறுகியது; இவை இரண்டும் சேர இயல் கெடவே-இந்தக் கன்மமும் அறிவும் கூடிநின்று தொழிற்பட்டுக் கன்மம் முடிந்த பொழுது; மண்சிலைபோல் செவ்வை உறல் முத்தி-மண்ணைப் போன்றும் கல்லைப் போன்றும் (அறிவும் தொழிலும் இன்பதுன்ப உணர்ச்சியும் அற்று) இருப்பதே வீட்டுநிலை ஆகும்; என தேர்ந்து உரைப்ப—என்று தன் கொள்கைகளைப் பிரபாகரவாதி ஆராய்ந்து சொல்ல, இக் கண்ணிகள் அப்படியே,

"அருஞ்செயலின் அபாவத்தே அபூர்வம்எனும்
அது தோன்றித்
தருஞ்செயல்நின் றழியின்பின் பலிப்பிப்ப தாகுமது;
வருஞ்செயல்ஒன் றின்றியே மண்சிலைபோல் ஆம்முத்தித்
தருஞ்செயல்ஈ தெனஉணர்ந்து தாரணிமேல்
அவன்சாற்றும்"
(சிவஞான சித்தியார்—பரபக்கம் 205)

என்பதன் மறுபதிப்பாகும்.

நவ்விவிழி-மானைப்போன்ற கண்களை உடைய; நவ்விவிழி மாது அவனை நோக்கி, அவன்—பிரபாகர வாதி; வருபலத்தை – (முன்பிறவிகளின் நல்வினை தீவினைகளுக்கேற்ப) இப்பிறவியில் உண்டாகும் இன்ப

துன்பங்களாகிய வினைப்பயனை; வல்வினைகளே தரும் என்று இருக்கெல்லாம் ஓத—வலிமைமிக்க கருமங்களே கொடுக்கும் என வேதங்கள் யாவும் கூறிய போதும், இருக்கு என்பது வேத வாக்கியங்களின் யாப்பியற் பெயர், இது ஆகுபெயராக இங்கு இருக்குகளாலாகிய நான்மறைகளை உணாத்தியது, முதல் வேதம் இருக்கு எனப்படுவதும் இக்காரணம் பற்றியே, அல்லது இருக்கு எல்லாம் என்பதனால் இருக்குவேதம் பிறமறைகட்கும் உபலட்சணம் எனினும் ஆம்; ஓதிய உன் — உன்னால் கூறப்படுவதாகிய; அபூர்வ உரை மாறு-(வினைப்பயன் களைத் தரும்) அபூர்வம் என்னும் ஒன்றைப் பற்றிய கூற்று வேதங்களுக்குப் புறம்பாகும், அபூர்வ உரை என்னும் தொடர் இரட்டுறமொழிதலாக அபூர்வம் என்பதைப் பற்றிய கூற்று என ஒரு பொருளும், வேதம் முதலாகிய முந்துநூல்களால் கூறப்படாமல் உன்னால் படைத்துக்கொள்ளப் பெற்றதாகிய ஒரு சொல் என மற்றொரு பொருளும் விளைவிக்கிறது; வான்பூ முடியில் மன்னி மணம் சேர்வது இல்லை—(என்றுமே இல்பொருளாகிய) ஆகாயப்பூ கூந்தலிற் பொருந்து வதனால் நறுமணத்தைப் பெறுதல் இல்லாததாகும், ''செய்த கன்மத்தினுடைய பலம் அநாதியில் இல்லை யாய்ப் பின்பு அபூர்வமென்ப தொன்றினாலே வந்ததாயின் வாட்டமில்லாத குளிர்ந்த ஆகாயப் பூவுக்கு முன்பு மணமில்லாமல் தலையிலே சேர்ந்த பின்பு மணம் உண்டானது என்று சொல்லும் தன்மைக்கொக்கும்'' என்பார் தத்துவப் பிரகாசர்—கீழ்க்காட்டும் சித்தியாருரையில்;

''வேறுபலந் தருவதுதான் வினைஎன்று வேதங்கள்
கூறவோர் அபூர்வந்தான் கொடுக்கும்எனக்
கொண்டஉரை
மாறுதரும் மறையோடு; முன்பின்றி வந்ததால்
தேறியவிண் பூமுடிமேல் சேர்ந்துமணம்திகழ்ந்ததுவாம்''
(சிவஞான சித்தியார்-பரபக்கம் 206)

செந்தீ செம்மை அகன்று நிலா என உயிரும் அறிவு செத்து ஆர்வது இலை எனக் கொண்டுகூட்டிக் கொள்க.

செந்தீ செம்மை அகன்று நிலா—நெருப்பு தன் இயல்புப் பண்பாகிய சிவப்பு கெட்டால் தானும் கூடச்சேர்ந்து அழியுமேயன்றித் தனியே நிலைபெறாது; என—அதுபோல, உவமஉருபு; உயிரும் அறிவு செத்து ஆர்வது இலை—ஆன்மா தன்னுடைய தனிப்பண்பாகிய ஞானம் கெட்டால் (தானும்கூட அழியுமேயன்றி) முக்தியின்பத்தை நுகர்வதில்லை, தானும் அழியும் என்பது உவமானத்தால் பெறப்பட்டது, ஆர்தல் என்ற சொல் பிரபாகரன் கருத்தில் பாஷாணநிலையாகிய முத்தி நிலையில் பொருந்துதல் எனவும், சைவசித்தாந்தி யின் கருத்தில் வீடாகிய பேரின்பத்தை நுகர்தல் எனவும் பொருள்தரும்; செந்தீ நிலா என உயிரும் ஆர்வது இலை என்பது பொருள் முடிபு: சிலை—கல்; கெட்டறிவில் என்பதனை அறிவு கெடில் என மாறுக; என்பெறுவாய்—நீ (உயிர்) என்ன பயனை அடையப் போகிறாய், ஒன்றுமில்லை என வினா எதிர்மறையில் வந்தது;

'' ஆனந்தம் கதிஎன்ன அறிவழிகை வீடென்கை
ஊனம்; பின் உணர்விழந்தோர்க் குளதாகும் உயர்முத்தி
தான்; இங்குச் சிவப்பொழியத் தழல்நிற்கு மாறில்லை;
ஞானம்கெட் டுயிர்நிற்கும் எனும்உரை தான்
நண்ணாதால்''
(சிவஞான சித்தியார் பரபக்கம் 207)

மும்மலமும் ஏக—ஆணவம், கன்மம், மாயை ஆகிய கட்டுகள் மூன்றும் அழிய; என்று அவன் சொல் மோக உரை(யை) மறுத்தாள்; மோக உரை—மயக்கம் தரும் சொற்கள்; முன்னவனும் ஏக—முன்னால் கூறப்பெற்ற பிரபாகர மீமாம்சகனும் செல்ல, இறந்தது தழுவிய எச்ச உம்மை உலோகாயதன் முதல் பாட்டாசிரியன் முடிய உள்ள எண்மரையும் தழுவி நின்றது.

586-590. சத்தப் பிரமவாதி- ''காரணமாகிய பரப்பிரமம் இறுதிக் காலத்தில் சத்தவடிவிற்றாய் (ஒலி மயமாய்) இருக்கும். அஃது அவிச்சையினால் சடமும் சித்துமாய உலகங்களாய் விரியும். முடிவின்கண் சத்த மாத்திரையே உள்ளது என்று இங்ஙனமறிவதே முத்தி என்பதாம்'' என்பவன். (சிவஞானபோத மாபாடியம்-அவையடக்கப்பகுதி) இக் கொள்கை ஏகான்ம வாதத்தின் நான்கு பிரிவுகளுள் ஒன்றாகும். வியாச முனிவரின் பிரம்ம சூத்திரமே இவர்களின் மூலநூலாகும்.

தரும் உரையே மையலினால் உய்த்து உலகம் ஆம்-காரணமாகிய சத்தமே மயக்கத்தினாற் செலுத்தப் பெற்றுத் தனு கரண புவன போகங்களாகிய பிர பஞ்சமாக ஆகும். தரும் என்னும் எச்சத்தை உலகைத் தரும் எனக் கூட்டி உரைக்கப் பெற்றது; பொருள் வேறு உண்டு என்று வைத்தே உரைப்பது பொய்யாம்-சத்தத் தைத் தவிர வேறாகப் பொருளும் உள்ளது என உள்ளத்தில் கொண்டு வெளியே சொல்லும் வாதம் பொய்யாகும்; இதனை உற்றுணர்தல் வீடு-சத்தம் ஒன்றே உள்பொருள் என்பதனை உணர்ந்து அந் நிலை யில் பொருந்துவதே முத்திநிலை ஆகும். உற்றுணர்தல் என்பதனை உணர்ந்துறுதல் என மாறுக, ''கற்றபின் நிற்க அதற்குத் தக'' என்றபடி (திருக்குறள் 381); சிவஞானசித்தியார் பரபக்கம் இக் கருத்தை,

''உரையா னதுமை யலினால் உலகாம்;
புரையோர் உண்ரும் பொருள்பொய்; இதனை
விரையா துணரும் அதுவீ டெனவே
வரையா துரைவா திவகுத் தனனே'' (208)

எனக் கூறும்; அவன் நூல் என்றது பிரம சூத்திரத்தை; உரைத்த உரை—நீ சொல்லும் சத்தமாகிய பிரமம்; மையலினால் உளதேல்-மயக்கத்தோடு கூடி இருக்கு மாகில், ஆல் உருபு ''தூங்குகையால் ஓங்கு நடைய உறழ்மணியால் உயர்மருப்பின'' (புறம்.22) என்புழிப்

போல உடனிகழ்ச்சிக்கண் வந்தது; மையல் தனக்குள தாய் வையகம் ஆகாது-தானும் மயக்கத்தோடு கூடிய தாகையால் உலகமாகப் பரிணமிக்காது; இவ் வுலாப் பகுதியின் மறுப்பு சிறப்பாக அமையவில்லை எனவே கருத வேண்டியுள்ளது; இப் புலவர் பின்பற்றும் சித்தி யார் பரபக்கத்தில் இந்த இடம்

''உரையா னதுமை யலினால் உலகேல்
உரையாய் ஒருமை யலும்உள் ளதென
வரையா துணரும் அதுவண் கதியேல்
வரையா மறையோ டுமலைந் தனையே'' (212)

என உள்ளது, ''சத்தமாகிய பிரமமானது மாயை யோடு கூடிக்கொண்டு பிரபஞ்சமாயிருக்குமானால் அந்தச் சத்தப் பிரம்மத்தோடுகூட மாயை என்று ஒரு பொருளும் உண்டு எனச் சொல்வாயாக'' (வேலப்பப் பண்டாரம் உரை?) என்னும் இந்த மறுப்பு தத்துவ நோக்கிற்கு இயைபுடையதாக உள்ளது, இதற்கேற்ற வாறே உலாக்கண்ணி முதலில் இருந்திருந்து ஏடெழுது வோரால் பிழைபட்டிருக்குமோ எனக் கருத வேண்டி யுள்ளது.

இதனை வரைந்து உய்ய உணரும் அது கதி யேல்–இச் சத்தப் பிரமத்தை உள்ளத்தே கொண்டு துன்பநீக்கம் பெறுமாறு அறிதலாகிய அந் நிலையே வீட்டுப்பேறு என்பதாயின்; ஒண் மறைகளோடும் அணவும் மலைவதனால் ஆகாது இணையில் கதி–சிறந்த வேதப்பொருள்களோடு மாறுபடும் ஆதலினால் முத்தி ஆகாது, ''வேதத்தில் சொல்லப்பட்ட கன்மத் தையும் ஞானத்தையும் செய்வதும் உணர்வதும் செய் யாமல் முத்தியடையுமென்று கூறுகையால் வேதத் தோடு மறுதலைப்பட்டுக் கூறினாய் என்றவாறு. வேதம் சொன்னபடியிலே கன்மம் செய்தானாயினும் ஞானம் உணராதார்க்கு முத்தி இல்லை என்று வேதாகம சாத்திர புராணங்கள் சொல்லவும் சத்தமே பிரமம்

என்று அறியும் அறிவால் முத்தியடையும் என்பது மாறுபாடு'' (சிவஞான சித்தியார்-பரபக்கம் 212 தத்துவப்பிரகாசர் உரை); மதியிலன் - அறிவற்றவன் ஆகிய சத்தப்பிரமவாதி, சத்தத்தால் உணர்த்தப்பெறும் பொருள்களை அறியமாட்டாதவன் என்பது குறிப்பு,

591-600 மாயாவாதி-சங்கரருடைய கேவலாத்துவிதம் மாயாவாதம் எனப்படும். மெய்யான பிரம்மம் பொய்யான உலகத்தைத் தன்னிடத்தே தோற்றுவிக்க மாயை என்னும் ஒரு தத்துவமே காரணம் என்ற கொள்கையால் இவர்கள் மாயாவாதிகள் எனப்படுகின்றனர். சிவஞான முனிவர் இவர்களுடைய கோட்பாடுகளை, '' சச்சிதானந்தமாய் நித்தமாய் வியாபகமாய் நிற்பது பிரமம்; பரமார்த்தத்தில் அஃதொன்றே மெய்ப்பொருள்; ஏனைய எல்லாம் பிரமத்தின் விவர்த்தனமாய் இப்பியில் வெள்ளிபோல அவிச்சையினால் காணப்படுவனவாகலிற் பொய்; இங்ஙனந் தோன்றும் உலகத்திற்கு முதற்காரணமாகிய மாயை பிரமம்போலச் சத்துமன்றி முயற்கோடுபோல அசத்துமன்றி அநிருவசனமாய் இருக்கும். அநிருவசனம் என்பது சொல்லொணாதது என்னும் பொருட்டு இந்த மாயைக்கு வேறாகிய பிரமரூபமே யான்என வேதாந்த ஞானத்தால் அறிவதே முத்தி என்பதாம்'' எனச் சுருக்கி உரைப்பார். (சிவஞானபோத மாபாடியம்-அவையடக்கப்பகுதி)

தொல்லை அறிவாகி-(தோற்றம் இல்லாததால்) முன்னைப் பழம் பொருட்கும் பழமையானதாகவும் ஞானமே சொரூபமாகவும்; சுத்தமாய்-அசுத்தத்துடன் கூடாது தூய்மையுடையதாகவும்; தொல்லைவரும் அகில காரணமாய்-மிகப் பழங்காலத்தே தோன்றும் உலகத்திற்கு முதற்காரணம், நிமித்த காரணம் ஆகிய இரண்டுமாயும், எதிலிருந்து ஒரு பொருள் செய்யப்படுகிறதோ அது முதற் காரணம், எதனால் செய்யப்படுகிறதோ அது நிமித்த காரணம், குயவன் பானையை மண்ணிலிருந்து

வனைகின்றான் எனில் பானைக்கு மண் முதற் காரணமும், குயவன் நிமித்த காரணமும் ஆகும்; மன்னும் நித்த ஆதி-விளங்குவது அழிவற்ற பரம் பொருள் ஆகும்; அரு-இந்தப் பிரமம் வடிவமற்ற அருவினது ஆகும்;

பொருவரிய தூய பரன் அனந்த ஆனந்தன் ஆகிக் கன்னல் சுவைபோல் எங்குமாய்த் துன்னி நிறைந்து(ம்) மின்ஒளிசேர் பொன்னில் பணிபோல் பொருந்து உலகு சீவனாய் கருது முத்தி ஆகியே மன்னும் என்றுகொண்டுகூட்டிக் கொள்க. பொருவரிய தூயபரன்-இணையற்றதும் சுத்தமானதுமாகிய பரம்பொருள்; அனந்த ஆனந்தன் ஆகி-முடிவற்ற இன்பமுடையதாகி; கன்னல் சுவைபோல் எங்குமாய்த் துன்னி நிறைந்தும்-கரும்பாகிய கழி முழுவதிலும் ஓர் இடைவெளியின்றி இனிமை பொருந்தி நிறைந்திருந்த போதிலும், உம்மை விரிக்க, பரம்பொருள் உலகம், உயிர் ஆகிய இரண்டிடத்தும் நீக்கமற நிறைந்துள்ளதென்றும், பரத்திற்கும் இவைகட்கும் உள்ள சம்பந்தம் பண்பும் பண்பினை உடைய பொருளும் ஒன்றேயாதல் (குணம் குணிக்கு வேற்றுமை இல்லை, அபேதம்)போன்றதென்றும் இக் கன்னற்சுவை உவமையால் பெறப்படுகிறது;

மின்ஒளி சேர் பொன்னில் பணிபோல்—பிரகாசம் மிக்க தங்கம் ஒன்றே பல்வேறு அணிகலன்களாக உருவெடுப்பதைப் போலவும்;

'' மன்னும் முதற்பொருளின் மன்னாத இவ்வுலகம்
பின்னம் எனுமாறு பேசற்க—பொன்னே
அணியா வதன்முன்னும் அப்பொழுதும் காய்ச்சி
மணியான போதும் மறித்து ''

(அமிர்தசாரம் 21)

மன்னும் சிலம்பி நூல்மான - சிலந்திப்பூச்சி நூலைத் தன்னிடத்திலிருந்தே உண்டாக்கி, வலையாக்கிப் பாது காத்துப் பிறகு அந்நூல் அழிந்து போகுமாறு தான் அதனைவிட்டு நீங்கிவிடுதலைப் போலவும்; மணி துன்னும் சரடு என அதில் தோயாது சாரும்-பல நிறங்களை உடைய பல மணிகளைக் கோத்த மாலையில் சரடு அந்தந்த மணிகளின் நிறமுடையதுபோல அங்கங்குக் காணப்பட்டாலும் உண்மையில் அச் சரடு தன் நிறத்தில் மாற்றமடையாததுபோலவும் பரம்பொருள் சீவன்களாக விளங்கும்; பொன் பல்வேறு வகையான ஆபரணங்களான போதும் தங்கம் என்னும் தனதியற்கை மாறாத தன்மை, பலநிற மணிகளுக்கு ஊடே கோக்கப்பெற்ற நூல் அவ்வவ்விடங்களில் அந்தந்த மணிகளின் நிறத்தில் காட்சியளித்தாலும் தான் தன் நிறத்தில் மாறுபடாத தன்மை ஆகிய இரண்டு உவமைகளும் பரமாத்மா சீவான்மாவாகத் தோற்றமளிக்கும்போதும் தான் மாறுபாடடையாது என்பதைக் காட்டுகின்றன. சிலந்தி நூல் உவமை, பிரமம் உலகத்திற்கு உபாதான மாய்ப் பிரபஞ்சத்தையெல்லாம் தன்னிடத்திலிருந்தே தோற்றுவித்து, காத்து, பிறகு அழிக்கிறது என்பதனை உணர்த்துகிறது.

சீவான்மா கருவி பதினாலுடனே காணும்- ஆன்மா (சாக்கிர நிலையில்) காது, மெய், கண், நாக்கு, மூக்கு என்னும் பொறிகள் ஐந்து, ஒலி, ஸ்பரிசம், ரூபம், சுவை, மணம் என்னும் புலன்கள் ஐந்து, மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் அந்தக்கரணங்கள் நான்கு ஆகப் பதினான்கு தத்துவங்களுடன் கூடி இருக்கும்;

> ''கண்டன ஐந்தும் கலந்தவோர் ஐந்தும்
> உண்டன நான்கும் ஓங்கிய துணர்ந்தபின்
> பண்டையின் ஆதி பரந்தது சாக்கிரம்;
> அண்டமும் தானாய் அமர்ந்தது காணே''
>
> (திருமந்திரம்-மிகைப்பாடல்கள்)

தெரி அவத்தை மூன்றினொடு சார்ந்து-எல்லோராலும் உணரப்படுகின்ற நனவு, கனவு, சுழுத்தி என்னும் மூன்று நிலைகளில் பொருந்தி. பிரமம் ஒழிய மற்றவையெல்லாம் நீங்கி நிற்கும் அவத்தை துரியமாதலின் சீவான்மா என்ற நிலையில் அவத்தைகள் மூன்றே கூறப்படும். அவத்தை என்பது பிரமம் உபாதிகளோடும் சேருவதால் வித்தி யாசப்பட்டுத் தோன்றும் நிலை; தோன்று சலத்தில் பொருந்தும் தூமதிபோல் முதிர் வினையில் சாராது (காணும்) - சலத்தில் பொருந்தித் தோன்றும் தூயதி போல் என மாறுக. ஒரே ஒரு நிலவு வானில் இருக்கப் பற்பல நீர்நிலைகளில் பிரதிபிம்பமாகத் தோற்றமளித் தாலும் அந் நீர்நிலைகளின் அசைவு, அழுக்கு முதலியன மதியைப் பாதிக்காததுபோலப் பற்பல உடல்களில் சீவான்மாவாகத் தோற்றமளித்தாலும் அந்த உடல் களின் காரியங்களில் தான் சம்பந்தப்படாமல் சாட்சி மாத்திரமாய் நின்று விளங்கும். சீவான்மா கருவி பதினாலுடனே, அவத்தை மூன்றினொடு சார்ந்து. சலத்தில் பொருந்தும் தூமதிபோல் முதிர்வினையில் சாராது காணும் என்பது பொருள் முடிபு. சீவான்மா எனத் தனியாக ஒரு பொருள் இல்லை பரமே சீவனாகத் தோற்றமளிக்கிறது என உணர்த்த, இருக்கும் என்னா மல் காணும் என்றார். காணும் என்பது இங்குச் செயப் படுபொருளாக வந்தது, ''பேர்ந்திருவர் உயர்ந்தும் பணிந்தும் உணரான்'' (திருக்கோவையார் 287) என்புழிப்போல.

ஏன்ற சகம்-பொருந்தியுள்ள இந்த உலகமானது; இப்பி வெள்ளியாகி-வெயிலின் ஒளியால் முத்துச்சிப்பி வெள்ளியைப் போலத் தோற்றமளிப்பதைப் போலவும், அடுத்து இரவில் என்பதால் இங்கு அருத்தாபத்தியாகப் பகல் வருவித்துக் கொள்ளப்பட்டது; இரவில் கயிறு அரவாய்—இரவு நேரத்தின் இருளில் பழுதை பாம்பாகத் தோற்றமளிப்பதைப் போலவும்; தப்பறவே தோன்றும்-சற்றும் சந்தேகத்திற்கு இடமில்லாத உண்மை போலக்

காட்சிதரும்; அதுதான் பொய்யாம் - இல்லாத பொருளை இருப்பதைப்போலக் காண்கின்ற இந்த அநுபவம் மித்தை எனப்படும். கயிறு எவ்வாறு பாம்பாக மாறாமலேயே மாறிவிட்டதைப் போலத் தோற்றமளிக்கிறதோ அவ்வாறே பரம்பொருளும் உலகாக மாறாமலேயே மாறிவிட்டதைப் போலக் காட்சியளிக்கிறது என்றவாறு. இக் கொள்கை பிரம்மவிவர்த்த வாதம் எனப்படும். இங்கே பொய்யாம் என்பதற்கு அவித்தையின் விளைவாகும் எனினுமமையும்.

ஒப்பில்லா நல்ல விவேகம் உற்று-இணையற்ற நன்மை பயப்பதாகிய மெய்ஞ்ஞானம் பெற்று.

''யோகாதி மூன்றும் உணர்வதனுக் கங்கமாம்;
ஆகா தெனிற்பதங்க ளாயழியும்-தேகம்
ஒழிய வருமுத்தி ஒன்றுதற்கு ஞான
விழியை அலதில்லை வேறு''
(அமிர்தசாரம் 173)

ஆதலின் ஒப்பிலா நல்ல விவேகம் என்றார்; அஞ்ஞான முகிலை கால்கள் மெல்ல வெளியாக்கல் வீடு-(சீவான் மாவைப் பற்றியுள்ள) அவித்தையாகிய மேகத்தைச் சிறிதுசிறிதாகக் காற்று கலைப்பதனைப்போலக் கலைத்து இல்லாமற்செய்தல் முக்தியாகும், அவித்தையை மேகமாகக் கூறியதால் அதனைக் கலைக்கும் காற்றாகத் தத்துவதரிசனத்தைக் கொள்க. அவை யாவன :- சிரவணம், மனனம், நிதித்தியாசம் என மூன்றாம், சிரவணம் என்பது மெய்ப்பொருளைக் குருநாதன்பால் உபதேசமாகக் கேட்டல், மனனமாவது கேட்ட பொருளைப்பற்றியே எப்போதும் சிந்தித்தல், நிதித்தியாசனம் என்பது சிந்தித்தபடியே உணர்தலாகும்; அஞ்ஞானம் நீங்கினால் சீவனே பரம் என்னும் மெய்ஞானம் தோன்றுமென்பதனை,

முந்தியஞா னத்தாலே முதிரும்அஞ் ஞானம்நூரக்கில்
சிந்தையில்ஆன் மாச்சுயமாய்த் திகழுமென்று
சொன்னவரோ !''
(கீதாசாரத் தாலாட்டு 90)

என்பதால் அறியலாம்.

தனை ஒல்லை பிரிக்க - (நான் யார் எனச் சிந்திக்கத் தொடங்கி) ஒவ்வொரு தத்துவமாகப் பகுத்துப் பகுத்துப் பார்த்தால்; அரும் அனலில் பெய் காட்டம்போல்-அரிய தீயிலிடுகின்ற விறகுகள் முற்றிலும் அழிந்துவிடுவதைப் போன்று; விரித்த பிரமத்து அழியுமே-தன்னைப் பிரபஞ்சமாக விரித்துக்கொண்ட பரம்பொருளில் ஒடுங்கி அழிந்துவிடும்.

'' ஒழிந்தன வேறொன்றும் காண்கின்றி
லேன்உண்டு போலமுன்னம்
கழிந்தன வாகின்ற காயமும்
சீவனும் காட்சியெல்லாம்
அழிந்தபொய்ம் மாயையும் ஐந்தாம்
அவத்தைக ளும்மறிவா
மொழிந்தவன் பாத முளரியம்
போதென்கண் முன்நிற்பதே ''
(தத்துவராயர் அடங்கன்முறை-கலித்துறையந்தாதி 31)

மேலாய் உரைத்த மகாவாக்கியம் நான் அதுவாய் மன்னு நிலை ஆம்-சிறப்பாக எடுத்துக் கூறப் பெற்ற பெருமொழி சீவான்மா பரமான்மாவாக நிலைபெறுதலைக் கூறும் அஹம் பிரஹ்மாஸ்மி என்னும் மகாவாக்யம் ஆகும்;

'' தானே தானாய் அநுபோகம்
தன்னில் தன்னை அநுபவத்திட்டு
ஊனே உயிரே உணர்வேஎன்று
ஒன்றும் இன்றி உரையிறந்து

வானே முதலாம் பூதங்கள்
மாய மாயா தேமன்னி
நானே பிரமம் எனத்தெளியும்
ஞானம் பிரம ஞானமே''.
(சிவஞான சித்தியார்-பரபக்கம் 233)

எனவே தூக்கி - என்பதாகத் தன் கோட்பாட்டை உயர்த்தி; அவன்-மாயாவாதி.

601 - 605, வென்றி கொளுவாள்-சமயசய வல்லி; ஞானம் - அறிவு; ஞாதுரு-அறிபவன்; ஞேயம்-அறியப்படுபொருள், இவை த்ரிபுடி எனப்பெறும்; ஞானம் ஞாதுரு ஞேயமுமே மெய்யாய் இருப்ப ஒன்று என்பதாகுமோ என்பது முடிபு, வினா எதிர்மறை; தானே அநுபவிப்பதானது அநுபோகமோ-பரமான்மா மட்டுமே உள்பொருளாக இருந்து வேறு பொருள்கள் இல்லாதபோது துய்த்துணர்தல் ஆகிய அநுபவம்; உண்டாகுமோ, ஆகாது என்றபடி;

'' நீடு வேதம்அள வாக ஏகம்எனும்
நீதி தான்நிகழ்வ தாகுமேல்
நாடி ஞாதிருவு ஞான ஞேயமுடன்
நாளும் நான்மறையும் ஓதலால்
ஓடு மாகும்உனது ஏகம்; ஓதும்இவை
ஊன மாகிஉரை மாறுகோள்
கூடு மாகும்;அநு பூதி தானுமது
கூடி டாதுஅறிவு இலாமையால் ''
(சிவஞான சித்தியார்-பரபக்கம் 236)

நீயே புகல் உரையுள்-(சலத்தில் பொருந்தும் தூமதிபோல்) என நீயே கூறும் உவமான வாக்கியத்தில்; ஆகும் இரண்டு உண்டு-(நீர்நிலையில் பிரதிபிம்பமாகத் தோன்றும் பரமாத்மா, அதைக் காண்பவன் ஆகிய சீவன் என) உணரப்படுவதாகிய இரண்டு பொருள்கள் உண்டு, எனவே உள்பொருள் ஒன்றே எனல் பொருந்தாது என்றபடி;

"பரிதிகுடந் தோறும் பதிந்ததெனப் பார்ப்பார்
பரிதியையல் லார்என்றே பார்.
ஆகந் தொறும்நிற்கும் அந்தப் பிரமம்என
ஊகஞ்செய் வார்வேறென் றோர்".

(சிவஞான சித்தியார்-பரபக்கம்-237 ஞானப்பிரகாசர் உரை மேற்கோள்)

கலந்திருக்கும் உண்மை அறியாய்-(தத்துவமசி என்னும் மகா வாக்கியத்தால் உணர்த்தப்பெறும் அத்துவிதம் என்பதற்கு முக்திநிலையில்) பரம்பொருள், உயிர் ஆகிய இரண்டும் தம் இயல்பிலே இரண்டல்ல எனக் கூறும்படி அவை ஐக்கியமடைந்து நிற்கும் மெய்ப்பொருளை நீ உணரமாட்டாய்,

"ஆர ணங்கள்தரு தத்து வம்அசிப்ட-
தங்க ளின்பொருள்அ றிந்திடாய்
கார ணம்அதுவும் நீயும் என்று இருமை
கண்டு வேறதின்மை கருதிடாய்"

(சிவஞான சித்தியார்-பரபக்கம் 252)

"தாடலைப்போற் கூடிஅவை தான்நிகழா வேற்றின்பக்
கூடலைநீ ஏகம்எனக் கொள்"

(திருவருட்பயன் 74)

என்னும் சாத்திரமும், அதற்கெழுந்த

"தாள் தலை என்று நின்றவிடத்து ளவ்வும் தவ்வும் கெடாமல் தாடலை என்றே சீவித்து ஒன்றாய் நின்ற முறைமைபோல, ஆன்மாவும் சிவமும் வேறறக் கலந்து இன்பமாய் நிற்கிறதை ஒன்றெனக் கொள்" என வரும் சிந்தனை உரையும் அத்துவிதம் என்பதைச் சைவசித்தாந்த நெறியில் தெளிவாக விளக்குவதாம்.

பரமே கண்ட சகமாக வரில்-பரம்பொருளே கண்ணால் பார்க்கப் படுகின்ற உலகமாகத் தோன்றும் என்றால், இனி இரட்டுறமொழிதலாகக் கண்ட

என்பதற்குப் பகுதிகளாகப் பிரியும் தன்மையுள்ள எனப் பொருள்கொண்டு அகண்டமாகிய பூரணப் பரம் பொருள் கண்டமாகிய பிரபஞ்சமாகக் காட்சி தருமெனில் எனவும் விரித்துரைக்கலாம்; காசினியோர் உண்ட நறும்பால் திரள்மலமாய் நண்ணி அது மீட்டும் நறும்பால் திரள் ஆமோ-உலகத்தோரால் குடித்துச் செரிக்கப்பட்டு மலமாகிவிட்ட பால் மறுபடியும் பாலாக மாற இயலுமோ, தூய பரம் அவித்தையால் அசுத்த மான உலகமாகப் பரிணமித்துவிட்டதாகக் கூறினால் அப் பரம் மீளவும் தன் சுயசொரூபத்தை அடையமுடி யாது என்றபடி. இது பிரமபரிணாம வாதத்தின் மறுப்பு, மாதவச் சிவஞானயோகிகள் இப் பரிணாமவாதத்தை, ''பரிணாமமாவது முன்நின்ற அவத்தையின் நீங்கி வேறோர் அவத்தை எய்துவதாகலால் பால் தயிராய்ப் பரிணமித்த வழியும், தயிர் மோராய்ப் பரிணமித்த வழியும் பால் எனவும் தயிர் எனவும் நின்று தத்தம் பயனைத் தருமாறு இல்லையாயினாற்போல'' (சிவஞானபோத மாபாடியம்- 2 ஆம் சூத். 2 ஆம் அதிகரணம்) என நாகரிகமாகக் கூறுவார்;

''ஞானம்ஞா துருஞேயம் உண்டாய் நிற்க
நாடுதல்ஒன் றென்பதுதான் கூடி டாதாம்;
ஆனதுதான் அனுபவிப்பான் அனுபோக மன்றாம்;
அதுவன்றி ஒன்றான தென்னும் சொல்லும்
தான்இரண்டு முடன்கலந்த தன்மைதான் காட்டும்;
தப்பாது வரும்பரம்போய்ச் சடமாகி வருமேல்
மானவறி யாதவனே பாற்றிரள்போய் மலமாய்
மாறிஅது மீளப்பாற் றிரளாகும் வகையே''.
(தத்துவப் பிரகாசம் 203)

நாடி-இவ் வுண்மைகளை நன்றாக ஆராய்ந்து; அறிந் தானைப் போற்று இனி நீ- (நானே பிரமம் என அநுபூதியில்லாமல் வாயளவில் பேசுவதையொழித்து) அத்துவித இன்பத்தை அநுபவ வாயிலாக உணர்ந்து

சற்குருவை இனிமேலாவது நீ அடைந்து வழிபடுவாயாக, மாயாவாதியாகிய உன்னிடத்தே அபரஞானமாகிய நூலறிவு நிரம்ப உள்ளது, ஆனால் அநுபவ அறிவாகிய பரஞானம் இல்லை, பரஞானம் குருவின் திருவருளால் தான் கிட்டும், எனவே நல்ல குருநாதரை வழிபடுவாயாக என்பது கருத்து; அவனும்-அந்த மாயாவாதியும்; தோற்று அகல; துன்னி—வந்தடைந்து.

பாற்கரியன் – ''சச்சிதானந்தமாய் நித்தமாய் வியாபகமாய் நிற்பதாகிய பிரமமே சடமும் சித்துமாகிய உலகங்களாகப் பரிணமித்தது. அங்ஙனம் பரிணமித்து விகாரப்பட்டமையை அறியாமையினால் பந்தமாயிற்று. பரமார்த்தத்தில் ஒரு பொருளே. வேதாந்த ஞானத்தால் உடம்பிற்கு வேறாகிய ஆன்மரூபம் விளங்கும். அதுவே பரப்பிரமம் என்றறிந்து அதன்கண் இலயித்தலே முத்தி'' (சிவஞான போத மாபாடியம்—அவையடக்கப் பகுதி) என்னும் ஏகான்மவாதி, இம் மதம் பரிணாம மாயாவாதம் எனவும் வழங்கும்.

606 போற்றும் உயர் சித்தே உலகு ஆகிச் சீவன் ஆம்-சிறப்பிப்பதற்குரிய பெருமையை உடைய அறிவாகிய பிரமமே பிரபஞ்சங்களாகத் தோன்றி ஆன்மாக்களாகவும் ஆகும், போற்றும் என்பது செயப்படுபொருளாக வந்தது; ஆதலினால் சத்தாம்-எனவே உலகும் உயிரும் பிரமமேயாகும்; மேலாம் அதனில்-உயர்ந்த அந்தப் பிரமத்தில்; தான் கெட்டே-உயிர் தன்னுடைய ஆன்மத் தன்மையை ஞானத்தால் இழந்து; சித்து ஆகும்—சீவான்மா பிரமமே யாகிவிடும்; ஈது நிலை-இதுவே நிச்சயமான உண்மை,

''சித்தே உலகாய்ப் பரிணமித்துச்
 சீவ னாகித் திகழ்ந்தமையால்
சத்தே எல்லாம் முத்தியினைச்
 சாரக் கண்ட ஞானங்கள்

வைத்தே மொழியும் மாமறைகள்
சொன்ன மரபே வந்தக்கால்
ஒத்தே கெட்டுப் பிரமத்தோடு
ஒன்றாய்ப் போம்என் றுரைத்தனனே''
(சிவஞான சித்தியார்—பரபக்கம்—254)

**607–609.** இவ் வாதியை—இந்தப் பாற்கரிய வாதியை; சோதிமிகு சத்து அசத்தாய்த் தோன்றுமோ—ஒளிமயமாகிய அறிவாம் பிரமமே அறிவற்ற உலகமாகப் பரிணமிக்குமோ, மாறாது என்றபடி; ஓதும் அறிவும்-சொல்லப் படுகின்ற ஞானமும்; அறிவால் அறியப்படும் பொருளும்-ஞானத்திற்கு விஷயமாகிய ஞேயமும்; பிரிவற ஒன்றாகப் பெறுமோ-தம்முள் வேறுபாடு நீங்கி ஒரேபொருளாக முடியுமோ, முடியாது என்றபடி— **601** ஆம் கண்ணி உரையில் ஞானம், ஞேயம், ஞாதுரு என்னும் திரிபுடி ஒன்றாகாது என்பது விளக்கப் பெற்றுள்ளது: அறிதர முன் பொய்ந்நெறியை விட்டு-உண்மைநெறியைத்தெரிந்து கொள்ள நீ முதலில் உனது தவறான வழியை விட்டுவிட்டு; புனிதன் அடி போற்று-தூய சிவபெருமானின் திருவடிகளை வணங்குவாயாக; வெய்யவன்-கொடிய பாற்கரியவாதி; அறவே – நிலை பெறாமல் போக (தோல்வியுறும்படியாக).

**610.** நிரீச்சுவர சாங்கி – கடவுள்உண்மையை ஒப்புக்கொள்ளாதவனாகிய சாங்கியவாதி; சாங்கியம் வேதத்தை ஏற்றுக்கொள்ளும் தரிசனம். இதனை நெறிப்படுத்தி வெளியிட்டவர் கபிலர் என்பவர். இச் சமயத்தை விளக்கும் நூல்களுள் பழமையானது சாங்கிய காரிகை என்னும் நூலாகும். இது கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் ஈஸ்வர கிருஷ்ணர் என்பவரால் இயற்றப்பெற்றதாகும். சாங்கியம் என்னும் சொல் பூரண அறிவு எனப் பொருள்படும். எனவே முழு அறிவைத் தரும் நெறி என்ற பொருளில் இப்பெயர் ஏற்பட்டது. சாங்கியர் பிரகிருதி, புருடன் என மூலப்

பொருள்கள் இரண்டே என்பர். பௌதிக உலகம் எதிலிருந்து தோன்றி அழிகிறதோ அது பிரகிருதி ஆகும். இது சத்துவம், ராஜசம், தாமசம் ஆகிய முக்குணங்களாலாகியது. உயிர், ஆன்மா அல்லது புருடன் மாற்றம் அடையாதது, அறிவுடையது; எண்ணிக்கையில் பற்பல.

''பகுதி புமான்மெய்ப் பகுதிப்பா லேவிகுதி
சகலந் தனதென்கை பந்தமாம்-விகுதியாம்
யாதும் பகுதி யுடையதெனக் கில்லையெனும்
வேதனஞ் சாங்கியன்தன் வீடு''

(அமிர்தசாரம் 57)

உருத்து வந்து—சினத்துடன் வாதம் புரிய வந்து.

611 - 613. மூலம் பிரகிருதி முன்னு புரியட்டகமாய் ஏறும் ஒரு மூன்று ஆகும்- (பிரகிருதி புருடன் என்னும் இரண்டில் பிரகிருதி) மூலம், பிரகிருதி, புரியட்டகம் என்னும் மூன்றுவகை ஆகும், மூலம் என்றது சித்தத்தை; ஒலி, ஸ்பரிசம், வடிவம், சுவை, மணம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும் மனம், புத்தி, அகங்காரம் ஆகிய கரணங்கள் மூன்றும் கூடிய உடல் புரியட்டகம் எனப்படும், பரு உடலும் உலகமும் விகிர்தி என வழங்கப்படும், பிரகிருதி ஆகிய ஒன்றே மூலம் முதலிய மூன்றாகப் பேதமடைந்து நிற்கப் புருடன் அதனைத் தன்னுடையதாக்கி நிற்பன் என்பது சாங்கியர் கொள்கை ! இச் செயலில் சாலும் பிரகிருதியே தூலம் பெய் சூக்கமோடு பரமுமாய் - இவ்வாறு தொழில் புரியும்போது மேன்மைமிக்க பிரகிருதியே பருப்பொருளாகவும், நுண் பொருளாகவும் இரண்டையும் கடந்த நிலையிலும் நின்று ; அந்த புருடன்பால்- பிரகிருதியின் செயல்கள் ஒன்றினையும் காணாமலும் அறியாமலும் இருக்கின்றதாகிய (குருட்டுத்தன்மை கொண்ட) உயிரின் சந்நிதியில், அந்த புருடன் வட சொற்றொடராதலின் பகரமெய் தோன்றவில்லை,

ஆதிபகவன் (திருக்குறள் 1) என்புழிப்போல; விரியும் உலகு எல்லாம் எழச் செயல்ஆம்-விரிகின்ற பிரபஞ்சம் யாவும் உண்டாகுமாறு தொழில் புரியும்; ஈதுநிலை—இதுவே நிச்சயமாகும்;

''மூலம் புரியட் டகம்விகிர்தி
யாகி மூன்றாய்ப் பிரகிருதி
தூல சூக்கம் பரமாய்அச்
சுத்த புருடன் சன்னிதியில்
பாலன் சேட்டை புரிந்துலகம்
யோனி பலவாய்ப் பரந்தொடுங்கும்
சால வென்று நிரீச்சுவர
சாங்கி யன்றான் சாற்றிடுமே''
(சிவஞானசித்தியார்—பரபக்கம் 260)

என்பதன் மறுமதிப்பே இக்கண்ணிகள்; நல்லாள் அவனை நகைத்து.

*614 — 616.* நாடு அறிவு ஒன்று இல்லாப் பிரகிருதி ஆசும்—விரும்பப் படுகின்ற ஞானமாகிய ஒப்பற்ற தன்மை இல்லாத பிரகிருதி என்னும் குற்றம் பொருந்திய பொருளும், நாடு அறிவு – செயப்படு பொருளாக நின்றது, பிரகிருதி ஆசு-இருபெயரொட்டுப் பண்புத்தொகை, ஆசு-குணவாகு பெயர்; பெரும் புருடனும் சேர்ந்து - அறிவினாற் சிறந்தும் நிலைத்து நின்றும் பெருமை பெறுகின்ற ஆன்மாவும் கூடி, பெருமைக்குக் காரணம்உரையிற் பெய்து கூறப்பட்டது; ஒருமையுடன் அறிவது ஓரில் – ஒன்றுபட்டு இயங்கித் துய்க்கும் நிலையை ஆராய்ந்து பார்த்தால்; தெரியாக் குருடன் முதுகில் குறை முடவன் ஏறி அருநெறியில் செல்வது போலாம் – கண்பார்வையற்ற அந்தகனின் முதுகிலேறிக் கொண்டு ஒரு நொண்டி செல்வதற்குக் கடினமான வழியில் போவதற்குச் சமமாகும்; செயல் அற்று இயங்காது கிடக்கும் ஆன்மா ஒரு முடவனைப் போன்றது. அறிவற்ற சடப்பொருளாகிய பிரகிருதி ஒரு

குருடனைப் போன்றது எனவே இவை இரண்டும் சேர்ந்து செயல்படுவது குருடன் முதுகில் முடவன் ஏறிச் செல்வதைப் போன்றதாகும்; நீ கருதும் பொருள் நிலையை விட்டு—நீ நினைத்துக் கொண்டிருக்கின்ற தத்துவங்கள் பற்றிய கருதுகோளை விட்டுவிட்டு; இறைவன் பொன்னடி போற்று; மருளும் அவன்-மயங்கு கின்றவனாகிய சாங்கியவாதி; தெருளும்—தெளிவைத் தரும்.

617. வன்கண்மை-கொடுமை; பஞ்சராத்ரி—விசிஷ்டாத்வைத வைணவன், பாஞ்சராத்திர ஆகமத் தின்படி ஒழுகுபவன்; பாஞ்சராத்திரம் என்பது வைணவ ஆகமம், நூற்றெட்டு சம்ஹிதைகளை உடையது, திருமாலே பிரமனுக்கு இந்த ஆகமத்தை ஐந்து இரவு களில் உபதேசித்தருளினார், ஐந்து இரவுகளில் உபதேசிக்கப்பெற்றதால் இவ் வாகமம் பாஞ்சராத்ரம் எனக் காரணப்பெயர் பெற்று விளங்குகிறது. பிறகு பிரமதேவர் நாரதருக்கு உபதேசிக்க அவர் பல முனிவர்களுக்கு உபதேசித்தார். மற்றொரு வைணவ ஆகமமாகிய வைகானசம் என்பதுவும் இதனுடைய பகுப்பே.

618. அருவாகி எங்கும் நிறை ஆதி — தனக் கென யாதொரு வடிவமும் இல்லாமல் எவ்விடத்திலும் நிறைந்து நிற்பவரும் முதன்மைப் பொருளுமாகிய திருமால்; சுவேச்சையினால் உருவாகி - தன்னுடைய சொந்தத் திருவுள்ளக் கருணையாலே பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்னும் ஐவகைத் திருமேனிகளை ஏற்றுக்கொண்டு, இவற்றுள் பரம்:பரம பதத்தில் நித்தியமுத்தர்கள் எப்போதும் போற்றிக் களித்திருக்குமாறு எழுந்தருளியுள்ள நிலை, வியூகம்: படைத்தல் முதலிய செயல்களுக்காக ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன் ஆகிய வடிவங்களில் உள்ள தாகிய நிலை, விபவம்:மறத்தை அழித்து அறத்தை

